# A Comparative Study of Some Tamil Words

[Being a Critical Exposition of Certain words And Passages Occurring in Purananuru]

*By*

**K. N. SIVARAJA PILLAI, B.A.,**
Senior Lecturer in Tamil (Rtd.) University of Madras

*With a Foreword By*
**Prof. Dr. M. VARADARAJAN M.A., Ph.D.**

*And An Introduction By*
**Prof. Dr. K. K. PILLAY M.A., D.Phil., Ph.D.**

*Published By*
**Professor SIVARAJA PILLAI**
**Memorial Society (Regd.)**
**MADRAS-33.**

# சில தமிழ்ச்சொல் ஆராய்ச்சி

பேராசிரியர்

கே. என். சிவராஜ பிள்ளை

(முன்னைத் தமிழ்ப்பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்)

சென்னை

பேராசிரியர் சிவராஜ பிள்ளை நினைவு மன்ற

வெளியீடு

1968

முதற் பதிப்பு :—டிசம்பர், 1968






விலை ரூ. 5-00



**கிடைக்கும் இடம்**

(1) **பேராசிரியர் சிவராஜ பிள்ளை நினைவு மன்றம்**
'கவிமணி நிலையம்'
51, பாலகிருஷ்ண நாயக்கர் தெரு,
சென்னை-33.

(2) **பாரி நிலையம்**, 59, பிராட்வே, சென்னை-1.

(3) **திரு. பி. எஸ். மணி,**
ஆசிரியர், **"கன்னியாகுமரி"**
நாகர்கோவில்-1.

அச்சிட்டோர் : **இளங்கோவன் பிரின்டர்ஸ், சென்னை-14.**

# வெளியீட்டுரை

அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும் இறையருட் சக்தியே நம்மை இயக்குவிக்கின்றது. இந்த உண்மையில் அசையாத நம்பிக்கை உடையவன் அடியேன்.

பேராசிரியர் சிவராஜபிள்ளை அவர்கள் தம் வாழ்நாளெல்லாம் தீந்தமிழின் வாழ்வுக்காகவும் வளர்ச்சிக்காகவும் உழைத்த பெரியார். அப் பெருமகனாரின் நினைவாக அமைந்துள்ளது **பேராசிரியர் சிவராஜ பிள்ளை நினைவு மன்றம்**. இம் மன்றத்தின் தலைமைப் பொறுப்பினை எளியேனுக்கு அளித்துள்ள இறையருட் செயலினை எண்ணி யெண்ணிப் போற்றுகின்றேன்.

இதுகாறும் அச்சில் வாராத பேராசிரியர் அவர்களின் நூல்கள் பல உள்ளன. அவற்றையெல்லாம் அச்சில் கொண்டுவந்து உலகுக்கு அறிமுகம் செய்வதே எங்கள் தலையாய குறிக்கோள்.

மன்றத்தின் முதல் வெளியீடாக **சில தமிழ்ச் சொல் ஆராய்ச்சி** என்னும் சீரிய நூல் வெளிவருகின்றது. இந் நூலுக்கு அன்புடன் முன்னுரை தந்து சிறப்பித்த சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் **மு. வரதராசன்** அவர்கட்கும், ஆங்கிலத்தில் அணிந்துரை

அளித்துதவிய வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் **கே. கே. பிள்ளை** அவர்கட்கும் மன்றம் என்றும் கடமைப் பட்டுள்ளது.

பேராசிரியர் பிள்ளை அவர்களின் பேரறிவினையும் பெரும் புலமையையும் இந் நூல் எடுத்துக்காட்டுமென்பதில் ஐயமில்லை. இதனைத் தொடர்ந்து பல நூல்கள் வெளிவர மன்றத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்குமாறு அன்புடன் வேண்டுகின்றோம்.

ஒளவை அகம்,
சென்னை-6.
9—12—'68

**தி. க. ஷண்முகம்**
*திருவள்ளுவராண்டு 1999—கீலக-கார்த்திகை 24உ*

# முன்னுரை

பேராசிரியர் **சிவராஜ பிள்ளை** அவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டு சிறந்து விளங்கும் வகையில் சட்டமுறைப்படி ஒரு நினைவு மன்றம் நிறுவப்பட்டிருத்தல் பாராட்டத்தக்கதாகும். அமைதியாகப் பணிபுரிந்த அவர் ஆழமான புலமை உடையவர் என்பதை அவர்தம் நூல்களைக் கற்ற அனைவரும் உணர்வர். வெளிவராது இருந்த அவர்தம் நூல்களுள் ஒன்று, **'சில தமிழ்ச்சொல் ஆராய்ச்சி'** என்னும் இந் நூலாகும். எழுபத்தொன்பது சொற்களைக் குறித்த நுண்ணிய ஆராய்ச்சியும், மேற்கோள் விளக்கமுறை, பொருள் விளக்க முறை என்னும் இரு கட்டுரைகளும் இந் நூலில் உள்ளன. சில சொற்களின் உண்மைப் பொருளைக் காணும் பொருட்டுப் பேராசிரியர் சிவராஜபிள்ளை மேற்கொண்ட முயற்சி பெரிது. தம் நுண் மாண் நுழை புலன் கொண்டு அவர் அவற்றின் உண்மைப் பொருளைக் கண்டு அவற்றிற்குத் தக்க சான்றுகளும் காட்டித் தெளிவாக்கியுள்ளார். அவ்வாறு உழைத்து உண்மை கண்ட அறிஞர், போலிப் பொருளையும் தவறான பொருளையும் குறித்தவரிடத்து வெறுப்புக் கொள்ளுதல் இயல்பே. இந் நூலில் சிற்சில இடங்களில் புறநானூற்றுப் பதிப்பாசிரியரிடத்துக் கொண்ட காழ்ப்பும் தமிழ் லெக்சிகனிடத்துக் கொண்ட வெறுப்பும் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கடந்து இந் நூலின் பயன்பெற விழைவோர், பேராசிரியரின் கூர்த்த மதியினையும் அரிய உழைப்பினையும் போற்றுதல் திண்ணம்.

நள் எனும் சொல் இருள் எனும் பொருள் பயப்பது, யாண் கடன் என்பதனை ஆண்கடன் எனப் பொருள்கோடல் பொருந்தாது; யாண் என்பது செல்வம் என்ற பொருள் உடையது. இடுக என்பதன் பொருளைத் திரிக்காமல், உலக வழக்கில் உள்ள புதைத்தற்பொருளே கொள்ளல் வேண்டும்; திரங்கல் என்பது உலர்தல் அன்று; நீர்வற்றித் திரைத்தல் என்று நேரேபொருள் கொள்ளல் வேண்டும்; எஃகு இருள் அகற்றும் என்னும் இடத்து எஃகு என்பதனை அஃகு எனக் கொள்ளாது, வேல் எனக் கொள்ளல் வேண்டும்; இவ்வாறு விளக்கங்கள் கண்ட பின்னரே,

பேராசிரியர் கூறும் பொருள் நேரிது என்பதும், எளியதே ஆயினும் இது வரையில் காண இயலாமற் கிடந்ததே என்பதும் உணர்கின்றோம்.

மழலை, வல்வில் என்பவற்றிற்கு எளிய நேரிய பொருள் பொருந்துவதாக இருக்க, சுற்றிவளைத்து விரிவான பொருள்தர முயலும் வீண்முயற்சியைப் பேராசிரியர் கடிந்துள்ளது பொருந்துவதே. தடக்கை முதலான தொடர்களுக்குப் பண்டையுரையாசிரியர் தந்துள்ள பொருளையும் ஆராய்ச்சி நெறியில் நின்று தவறெனக் காட்டியுள்ளார். "பண்டை இலக்கியங்களை உள்ளவாறு உணர இவர்களுரை பெருங்கருவியாயிருப்பினும், பிற்காலத்திற் பண்டை வழக்காறுகள் பல ஒழிந்து போயினமையால், சிலவிடங்களில் இவ்வாசிரியர்களும் திகைக்கத்தக்க சந்தர்ப்பங்களும் ஏற்படுகின்றன" என்று கூறியுள்ள காரணமும் பொருத்தமுடையதாகும். "அதுபற்றி இங்கே கூறப்பட்ட விஷயம் ஒரு தலையாக முடிவு செய்து நிறுத்த இடம் பெறுது போயினும் தமிழறிஞர்களுடைய ஆழ்ந்த நுண்ணிய ஆராய்ச்சிக்கு இது உரித்தானதாயிருக்குமென எண்ணுகின்றேன்" என்று கூறுமிடத்து, உண்மை நாடும் ஆர்வம் நிறைந்த உள்ளம் புலனாகிறது.

நன்கு தெரிந்த தொடர்களுக்கும் கருத்துக்களுக்கும் முற்காலத்தனவும் பிற்காலத்தனவுமாகிய பல நூல்களிலிருந்து மேற்கோள் பல தந்து குவித்திடும் முறையைப் பேராசிரியர் வெறுத்துக் குறை கூறியுள்ளார். "என்னே! இம்மேற்கோள் விளக்கப் பித்து!" என அவர் நொந்து கூறுவதன் காரணத்தை உணரின், இலக்கியத் துறையில் இது ஒரு பிள்ளை விளையாட்டு என்பது புலப்படும்; விளக்கத்திற்கு வேண்டுமிடத்து மட்டுமே தக்க மேற்கோள் தேவைப்படும் எனனும் உண்மை உணரப்படும்.

பேராசிரியரின் உழைப்பின் நற்பயன் ஆராய்ச்சியாளர் பலர்க்கும் எட்டும் வகையில் இந் நூலினை வெளியிட்டுள்ள நினைவு மன்றத்தினரின் பணி போற்றத்தக்கதாகும்.

சென்னை-30
4—12—'68

மு. வரதராசன்

# FOREWORD

(Dr. K. K. PILLAY, University of Madras)

I am glad to release "சில தமிழ்ச்சொல் ஆராய்ச்சி" being a Critical Exposition of certain words and Passages occurring in Purananuru by Mr. K. N. Sivaraja Pillai, B.A., Mr. Pillai was a senior Lecturer in Tamil* of the Madras University and he retired in 1936.

Mr. Pillai comes from a respectable Vellala family of Nanjil Nadu. He was born in 1879 in Kangaikondan

---

* DEPARTMENT OF TAMIL: The Tamil Department of the Oriental Research Institute originally consisted of one Reader, two Fellows and three students. It was reorganiszed in 1930 and provision was made for one Reader, one Senior Lecturer and one Junior Lecturer. The Readership was converted into a Professorship in 1948.

I. PERSONNEL

(a) Mr. K. N. Sivaraja Pillai was Reader and Messrs E. V. Anantarama Iyer and V. Venkatarajulu Reddiar were Fellows in Tamil, under the original scheme.

(b) After reorganization, Mr. S. Anavaratavinayakam Pillai was Reader and Messrs. K. N. Sivaraja Pillai and V. Venkatarajulu Reddiar were Senior and Junior Lecturers respectively.

(c) On the retirement of Messrs. S. Anavaratavinayakam Pillai and K. N. Sivaraja Pillai in 1936, Messrs. S. Vaiyapuri Pillai and R. P. Sethu Pillai were appointed Reader and Senior Lecturer respectively. (Vide, Part II, Page i of Annals of Oriental Research, Centenary Number, University of Madras, 1957.)

in Tirunelveli district. His father Mr. Narayana Pillai was a Land Lord who was looking after his uncle's estate in Kangaikondan. Mr. Narayana Pillai had four sons and Mr. Sivaraja Pillai was the fourth in the line. The eldest was Mr. Kumaresa Pillai and he practised for some time as Vakil in Travancore. He was himself a scholar well versed in Kamba Ramayana. Sivaraja Pillai had his early education at Nagercoil and higher education at Madras. After graduation in the Madras Christian College, he entered the police service in Travancore. This post was not congenial to Mr. Pillai, who had a literary bent of mind, and so he resigned the post and took up journalism as his vocation. He was editing "Nanjil Nesan" a periodical in Tamil and this brought him to the fold of Prof. P. Sundaram Pillai of Manonmaniam fame. He was editing the "People's Opinion" and at his request Mr. Sivaraja Pillai wound up his Tamil periodical and worked as Assistant Editor under him. After the demise of Prof. P. Sundaram Pillai, Mr. Sivaraja Pillai started his "Malabar Quarterly Review." The journal had a larger circulation than the other two but this had to be wound up on account of domestic circumstances.

While he was running the "Malabar Quarterly Review" he came into contact with Sir. Ponnambalam Ramanathan, the illustrious son of Ceylon. Sir. Ponnambalam was having a project to edit Ramayana and so he invited Sivaraja Pillai to assist him in the work. Sivaraja Pillai was glad to take it up. The work in Ceylon was completed in two years and then he joined the Tamil Department of the Madras University as Reader on 1927. Then in 1930 he was posted as Senior Lecturer. With

Pandit Venkatarajulu Reddiar as Junior Lecturer, and Mr. S. Anavarathavinayakam Pillai as Reader, the team was doing good work in editing the "Nanartha Deepikai." During the period of service, the University pubilshed three of Sivaraja Pillai's works viz. "Agastiya in Tamil Land", "The Chronology of the Early Tamils", and the "Antiquity of Purananuru". After retirement in 1936 from the University, he settled at Nagercoil and was continuing his research in Tamil. He was contributing articles and poems in "செந்தமிழ்" conducted by the Tamil Sangam at Madurai.

It is remarkable that at a time when research in Tamil had not progressed much, Mr. Sivaraja Pillai had critically analysed the chronolgical background of the Sangam works. He was one of the first to emphasise that the Kalittogai was one of the later classics of the Ettuthogai anthology. Mr. Pillai combined critical acumen with a remarkable command of the English language and, therefore, his works are at once eminently readable and penetrating.

Mr. Sivaraja Pillai has a son Mr. S. Narayanan, who has since retired from the Southern Railway. There are two daughters and one of them is Mrs. Saraswathi. She is a widow and a pious lady. Both Mr. Narayanan and Mrs. Sarswathi have placed the works of Mr. Pillai at the disposal of the "Prof. Sivaraja Pillai Memorial Society" for publication.

The present work would show the profound scholarship of Mr. Pillai and we are grateful to Dr. M. Varadarajan for having written a Foreword stressing the need for such a work in the field of Tamil Research.

Vidwan M. Shanmukam Pillai has kindly agreed to edit the series under the auspicies of the Society. He is a winner of George Memorial prize having stood first in the First class in the Vidwan Title Examination conducted by the Madras University. He has edited over fifty books in Tamil and we may therefore look forward to the proper publication of Sivaraja Pillai's works under his careful editorship.

# பதிப்புரை

பேராசிரியர் **கே. என். சிவராஜ பிள்ளை**யவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழாராய்ச்சித் துறையை அணிசெய்தவர்களுள் முதல்வர். இவர் இங்கே பணி செய்த காலம் ஏறத்தாழ ஒன்பதாண்டுகளே. இந்தக் கால எல்லையில் அவர்கள் மூன்று ஆராய்ச்சி நூல்களைப் பல்கலைக் கழக வாயிலாக வெளியிட்டுள்ளனர். அவையாவன: புறநானூற்றின் பழமை, தமிழகத்தில் அகத்தியர் (Agastiya in Tamil Land), பண்டைத் தமிழரின் கால அடைவு (The Chronology of the Early Tamils) என்பனவாம். இவற்றுள் பின்னைய இரண்டும் ஆங்கில நூல்கள். இவை தவிர அவ்வப்போது அவர்கள் தம் ஆராய்ச்சிக் குறிப்புக்களைச் சிறுசிறு கட்டுரைகளாக வெளியிட்டதும் உண்டு. ஒரு சில உரைகள் பண்டைத் தமிழரின் கால அடைவுபற்றிய பெரு நூலில் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள்ளன.

தென்குமரி எல்லையில் வாழ்ந்த திரு. பிள்ளையவர்களைச் சென்னைப் பல்கலைக் கழகம் ஆராய்ச்சித்துறைக்கு அழைக்கக் காரணமாக அமைந்தவை அவருடைய முந்திய ஆராய்ச்சிகளே. திருவனந்தபுரம் பேராசிரியர் **பெ. சுந்தரம் பிள்ளை**யவர்களால் அபிமானிக்கப்பெற்று, அவர்களைச் சார்ந்து இருந்தமை சிவராஜபிள்ளையவர்களின் தமிழ்ப் புலமை சிறக்கவும் ஆராய்ச்சித் துறையை அவர் அணுகவும் வழிகாட்டிற்று. திருவனந்தபுரத்திலே பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களின் ஆசியுடன் தமிழிலும் ஆங்கிலத்திலும் பத்திரிகைகள் நடத்திவந்தார் நமது பிள்ளையவர்கள். இப் பத்திரிகைகளின் வாயிலாக இவர் தம் புலமையை நம் நாட்டாரும் வெளிநாட்டாரும் அறியலாயினர். யாழ்ப்பாணத்துப் பெரியார் **சர் பொன்னம்பலம் இராமநாதன்** அவர்கள்

திரு. பிள்ளையவர்களை இலங்கைக்கு அழைத்துச் சில ஆண்டுகள் கம்பராமாயண ஆராய்ச்சியை மேற்கொள்ளச் செய்தார்கள். அந் நாளில் 'மனோன்மணீயம்' நாடகத்திற்கு இவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய மதிப்புரை தமிழ் நாடக இலக்கியத்திற்குச் சிறந்ததொரு ஆராய்ச்சிப் பேருரையாகத் திகழ்கிறது. பத்திரிகைவாயிலாக அவர்கள் வெளியிட்டவை தக்க வண்ணம் பாதுகாத்துப் போற்றப் பெறுமையால் அவை முற்றும் நமக்கு இன்று கிடைக்கவில்லை. என்றாலும், அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சித்துறைக்கு வந்தது முதல் எழுதியவற்றுள் பெரும்பாலனவும் நமக்குக் கிடைத்துள்ளன. தமிழ் ஆராய்ச்சிகளைப் போன்றே பாட்டிசைப்பதிலும் இவர்களுக்குப் பெரிதும் ஈடுபாடுண்டு. ஆகவே, அவ்வப்போது பல பொருள்கள் குறித்துக் கவிதைகளும் பாடி வந்தனர். கவிதை நூல்களில் பத்து கையெழுத்துப் பிரதிகளாக இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளன.

பேராசிரியர் சிவராஜ பிள்ளையவர்கள் காலமாகிக் கால் நூற்றாண்டுக்கு மேலாகிவிட்டது. இவர்தம் நூல்களும் தமிழகத்தில் புதைபொருள்களாக அமைந்துவிட்டன. இந்த நிலைமையில் பேராசிரியர் அவர்களின் மூத்த புதல்வியார், சென்னை வானொலி நிலையக் கலைஞர், திருமதி **சி. சரஸ்வதி** அம்மையாரின் இடைவிடா முயற்சியால் இப்பொழுது தமிழகத்திலே பேராசிரியரின் நூல்கள் வெளிவரத் தொடங்கியிருக்கின்றன.

திருமதி **சி. சரஸ்வதி** அம்மையாரின் முயற்சியால் பேராசிரியர் **சிவராஜ பிள்ளை நினைவு மன்றம்,** சென்ற ஜூலை மாதம் நிறுவப்பட்டது. இம் மன்றத்தின் சார்பில் பேராசிரியரின் நூல்கள் ஒன்றன்பின் ஒன்றாக, தமிழன்பர்களின் ஆதரவால், இனி வெளிவரும். இப்பொழுது நினைவு மன்றத்தின் சார்பில் முதலாவது '**சில தமிழ்ச் சொல் ஆராய்ச்சி**' என்னும் இந் நூல் வெளிவருகிறது.

இந் நூலில் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட சொற்கள் புறநானூற்றுப் பாடல்களில் உள்ளவை. சொற்களேயன்றிச் சிற்சில இடங்களில் தொடர்களின் பொருட்கோப்பும் ஆராயப்பட்டிருக்கிறது. ஆகவே, இஃது ஒரு சொற்பொருளாராய்ச்சித் தொகுப்பு ஆகும்.

டாக்டர் **உ. வே. சாமிநாதையர்** அவர்கள் புறநானூற்றின் இரண்டாம் பதிப்பை 1923-ஆம் ஆண்டு வெளியிட்டார். இப் பதிப்பு அதற்குமுன் (1894) அவர் பதிப்பித்த முதற் பதிப்பைக் காட்டிலும் பற்பல திருத்தங்களுடன் வெளி வந்தது. எனினும், மேலும் விளக்கம் பெற வேண்டிய இடங்கள் இப்பதிப்பிலும் இல்லாமல் இல்லை என்பது பதிப்பாசிரியரின் முகவுரைப் பகுதிகளால் உணரலாகும். கற்றூர் பலரும் இத்துறையில் பாடுபட்டால்தானே மேலும் மேலும் கருத்துத் தெளிவுபிறக்கமுடியும்?

பண்டைத் தொகை நூல்களுள் புறப்பொருளையே சிறப்பாகக் கொண்டமைந்த புறநானூற்றின் இரண்டாம் பதிப்பைப் பேராசிரியர் **கே. என். சிவராஜ பிள்ளை** யவர்கள் ஆராய்ந்து வந்தனர். அச்சுப்படியுடன் அரசாங்கக் கீழ்க் கலைச் சுவடி நிலையத்தில் (Oriental Manuscript Library) உள்ள பிரதியையும் உடன் வைத்துக் கூர்ந்து ஆராய்ந்து பார்த்தனர். அவர் தம்முடைய ஆய்வினல் பண்டையுரையாசிரியர் உரையிலும் கூடப் பொருத்தமற்ற விளக்கங்கள் உள்ளமையைக் கண்டார். பழைய உரையில்லாப் பகுதிக்கும், உரையுள்ள பகுதிக்கும் விளக்கம் வேண்டும் எனத் தமக்குத் தோற்றிய இடங்களில் பதிப்பாசிரியர் தமது குறிப்புக்களைச் சேர்த்திருந்தனர். இப்புதிய பதிப்பில் பதிப்பாசிரியரின் குறிப்புக்கள் சிற்சில இடங்களில் பொருத்தமற்றுக் காண்பதையும் பேராசிரியர் உணர்ந்தார். இங்ஙனம் தாம் பழைய புதிய உரைகளில் கண்ட மாறுபாடுகளைக் கூர்ந்து கவனித்து, அவற்றுள் கண்ட மாறுபட்ட விளக்கங்களுக்கும் இலக்கண வழக்குமரபு, மொழிமரபு முதலிய

வற்றிற்கு மாறுன சில பகுதிகளுக்கும் தம்முடைய ஆழ்ந்து பரந்த தமிழ்ப்புலமையால் ஏற்ற விளங்கங்களைத் தக்க மேற் கோள்களின் துணையுடன் பிள்ளையவர்கள் எழுதியுள்ளனர்.

சங்கப் பாடல்களையும் உரைகளையும் இவர்கள் நுணுகி ஆராய்ந்துள்ளார்கள் என்பது இவ்வாராய்ச்சியில் அவர்கள் எடுத்துக்காட்டும் மேற்கோட்பகுதிகள் நமக்கு நன்கு விளக்கும். பழந்தமிழிலக்கணமாகிய தொல்காப்பியத்திலும், பிற்காலத்துத் தோன்றி வளர்ந்து பெருகிய நிகண்டு நூல் களிலும் இவருக்குள்ள நிறை புலமையையும் இவ்வாராய்ச் சித் தொகுதியில் ஆங்காங்கே காண்கிருேம். இவற்ருேடு நவீன மொழி நூற்புலவர்கள் கையாளும் முறைகளிலும் நன்கு பயின்றவராதலினல், மொழிநூல் வகையாலும் சொற் பொருள்களின் உண்மை நிலையை நுனித்து அறிந்து விளக்கம் தருகிருர். சொற்களின் பகுதியடி, தாது முதலிய வற்றின் இயல்புகளை எடுத்துக்காட்டி, சொற்கள் ஒன்றி லிருந்து ஒன்ருகக் கிளைத்துப் பெருகுவதனையும், பொருள் வகையில் ஒற்றுமை வேற்றுமையாய் நிற்கும் அவற்றின் கூறு பாடுகளையும் சிறந்த முறையில் விளக்கியுள்ளார். (பக். *10, 12, 15, 16, 19, 20, 23, 26, 32, 34, 36-38, 42, 49, 51, 53, 55, 57, 58, 66, 68, 73, 82-84, 86, 90, 93, 97, 99*). "காழ்" என்னும் சொல்லின் பொருள்வளர்ச்சியைப் படம் மூலமாக வும் விளக்கிச் சொற்பொருள்கள் பெருகுவதன் ஏதுக் களையும் இனிது காட்டியுள்ளார் (பக். 74-76). பண்டை நூல் களுக்கு உரைவரைவதில் கவனிக்கவேண்டிவை இன்னின்ன என்றும், தவிர்க்கத் தக்கன இவையிவை என்றும் இந் நூலில் பேராசிரியர் ஆங்காங்கே குறித்துள்ள குறிப்புக்கள் ஒரு நூலுக்கு உரைவிளக்கம் செய்யப்புகுவார்க்குச் சிறந்த தொரு நற்றுணையாம் எனற்கு ஐயமின்று (பக். *4, 10, 11, 14-16, 27, 28, 30, 43, 44, 47, 55, 64, 87*). பொதுவாக இச் சொல்லாராய்ச்சித் தொகுதி பேராசிரியர் அவர்களின் ஆராய்ச்சி வன்மையை நாம் கண்டு மகிழ்தற்கு ஏற்றது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

பேராசிரியர் பிள்ளையவர்கள் பண்டையுரையாசிரியர் களின் பெருமையை உள்ளவாறுணர்ந்தவர்கள். "பண்டையுரையாசிரியர்கள் எல்லாவிடங்களிலும் கவியின் உட்கோளை நமக்கோர் ஆடியிற் காட்ட முயலுகின்றனர்" என்று ஓரிடத்தில் (பக். 108) குறிப்பிடுகின்றார்கள். ஆயினும், அவர்தம் உரையிலும் பண்டை மரபிற்கு மாறுபட்ட இடங்கள் சில உள என்பதையும் அவ்வாறு நேர்ந்ததன் காரணங்களையும் பிள்ளையவர்கள் சுட்டியிருக்கிறார்கள். அவர்கள் எடுத்துரைக்கும் கருத்துரை வருமாறு :

> (சங்க) "இலக்கியங்கள் தோன்றி எத்தனையோ நூற்றாண்டுகள் கழிந்த பின்னர்தான் இவ்வுரையாசிரியர்கள் தோன்றி உரை வகுக்கலாயினர். பண்டை இலக்கியங்களை உள்ளவாறுணர இவர்களுரை பெருங் கருவியாயிருப்பினும் பிற்காலத்திற் பண்டை வழக்காறுகள் பல ஒழிந்து போயினமையால், சிலவிடங்களில் இவ்வாசிரியர்களும் திகைக்கத் தக்க சந்தர்ப்பங்கள் ஏற்படுகின்றன. இஃதன்றியும் பண்டையுரையாசிரியர்கள் இலக்கிய உரையாசிரியர்களே தவிர மொழி வளர்ச்சித் தத்துவங்களை விளக்கப் புகுந்த மொழி நூலாளர் களாகார்" (பக். 69).

இதனால் பேராசிரியரவர்கள் பண்டையுரையாசிரியர் களின் உரைகளை எத்துணையளவாக மதிப்பிட வேண்டும் என்பதனை நமக்கு அறிவுறுத்துகின்றார் என்பது தெரிய வரும்.

நூலாசிரியர்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின் வந்த பண்டையுரையாசிரியர்கள், இன்று வாழும் நமக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முந்தி வாழ்ந்தவர். நமக்கு இன்று கிடைக்காது மறைந்துபோன பல நூல்கள் அவர்கள் வாழ்ந்த நாளில் வழக்கில் இருந்தன. அதோடு நம்மினும் பண்டைப் புலவர்தம் உள்ளத்தை உணர உரையாசியர்கள் நூலாசிரியர்களுக்கு அண்மையராகின்றனர். ஆதலால்,

பண்டையிலக்கியங்களை ஒத்த மதிப்புடன் பழையவுரைகளையும் நாம் கூர்ந்து கற்றால் மட்டுமே உண்மைப் பொருளைக் காணுதல் கூடும். ஆயினும், பண்டையுரைகளையும் நாம் விழிப்புடன் நோக்கவேண்டும் என்பதைப் பேராசிரியர் தக்க ஏதுக்காட்டி வெளிப்படுத்துகிறார்.

'தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின் வளைக்கை விறலி' (புறம். *135 : 13-14*) என்ற அடியின் உரைபற்றி விளக்குகையில் பின்வருமாறு உரைக்கின்றார் :

> "தடவரல் என்ற சொல்லின் பொருளுரையில் உடல் வளைவைக் கொண்டு புகுத்தியிருக்கின்றனர் பண்டையுரையாசிரியர்...............................பண்டையிலக்கிய உரையாசிரியர்களின் முதலணி நெற்றியில் நிற்கத்தக்க கூரிய அறிவும் சீரிய திறமையும் வாய்ந்த இவ்வுரையாசிரியரே இழுக்கினமை தொல்காப்பியர் சூத்திரத்தினை இப்பண்டைச் செய்யுளுரையில் பொருத்தினமையால் நேரிட்டதேயாம். அன்றே 'பயில அடியிட்டு நடக்கும்' என்ற மெய்ப்பொருளைத் தந்து, அதனைத் தொல்காப்பியரது சூத்திரப் பொருளோடு பொருத்த உடல்வளைவைக் கொண்டுவந்து நுழைத்து ஒருவாறு சரிப்படுத்த நோக்கினர். ஆயினும், கோட்டப் பொருள் இவ்வடிகளிற் பொருந்துமாறில்லை. தடவரல் என்பது நீட்டித்துவரல், காலம் நீடித்துவரல், தாழ்த்துவரல் என்ற பொருளைத் தரும். இதுவே இத் தொடரின் பண்டைக்காலப் பொருள்." (பக். *30-31*)

இங்ஙனமாகப் பண்டையுரையாசிரியரின் உரைகளை ஆய்ந்து மறுத்துக் கூறிய இடங்களும் உள. பதிப்பாசிரியர் எழுதிய புத்துரைபற்றிய பரிசோதனைகளே பெரும்பாலன.

புறநானூற்றிற்கு *266*-ஆம் பாடல் வரையில்தான் பழையவுரை உளது; பிற்பகுதிகளுக்கு இல்லை. அதோடு பிற்பகுதியில் பாடல்கள் சில அடி, சீர், அசைகள் சிதைந்தும்

போயின. இவற்றையெல்லாம் சீர் செய்து செம்மைப்படப் பதிப்பித்துதவிய பதிப்பாசிரியர் டாக்டர் **உ. வே. சாமிநாதையர்** அவர்கள் தமிழ்ப் பெருமக்கள் நன்றியுடன் என்றும் பாராட்டத்தக்க பெருமையுடையார். பாட்டு தொகை நூல்களில் பத்துப்பாட்டையும், எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை, கலித்தொகை, அகநானூறு தவிர்ந்த ஏனைய நூல்கள் ஐந்தனையும் சிறந்த முறையில் பதிப்பித்த பெருமை டாக்டர் ஐயரவர்களுக்கே உண்டு. மேற்கோள் ஒப்புமைப் பகுதிகளுடனும் அரும்பதம் முதலியனவற்றின் அகராதி, ஆராய்ச்சிக் குறிப்புக்கள் முதலியனவாக நூல்களுக்கு ஏற்குற் போன்ற விளக்கப்பகுதிகளுடனும் இவர்தம் பதிப்புக்கள் விளங்குகின்றன.

எவ்வளவோ நுணுகி ஆராய்ந்து, எவ்வளவோ விசாரித்துணர்ந்து, எத்தனையோ பிரதிகளை ஒப்புநோக்கி, எவ்வளவோ காலம் முயன்று ஐயரவர்கள் சிந்தாமணி, புறநானூறு முதலியவற்றைப் பதிப்பித்தாலும் ஒரு சில பிழைகள் இவற்றில் இல்லாமல் இல்லை. இவர் தம் பதிப்பு நூல்களில் கண்ட சில வழுக்கள்பற்றி யாழ்ப்பாணத்திலும் தமிழ் நாட்டிலும் தமிழறிஞர் சிலர் கண்டன நூல்கள் வெளியிட்டதும் உண்டு. "இப் பிரசுரங்களில் தமக்குச் சரியெனத் தோன்றியவற்றைத் தமது பிறபதிப்புக்களில் உடன்பட்டுக் கொள்ளலாயினர். ஆனால், ஐயர் ஓரிடத்தேனும் இக் கண்டனவுரைகளால் இத் திருத்தமடைந்தது என்று தெரிவிக்கவே இல்லை" (தமிழ்ச்சுடர் மணிகள் பக். 296) என்று பேராசிரியர் **வையாபுரிப் பிள்ளை**யவர்கள் எழுதியுள்ளது இங்குக் கவனிக்கத்தக்கதாகும்.

உரை எழுதுவதிலும் ஐயரவர்கள் எத்துணையோ கவனமாக இருந்துவந்திருக்கிறார்கள். ஐங்குறுநூற்றிற்குத் தாம் எழுதிய புத்துரையை அதற்குப் பழையவுரை கிடைத்ததும் பதிப்பியாது விடுத்தமை ஒன்றே பழையவுரையின் மாண்பினை ஐயரவர்கள் பெரிதும் மதித்தமையைக் காட்டும்.

விளக்கம் வேண்டும் எனத் தமக்குத் தோற்றிய இடங்களில் குறிப்புக்களும் சொற்பொருள்களும் ஐயரவர்கள் எழுதியுள்ளார்கள். புறநானூற்றின் இரண்டாவது பதிப்பில் ஐயரவர்கள் எழுதிய சில உரைக் குறிப்புக்களில் வழுக்கள் உள்ளன என்பதனை இத் தொகுதியில் பேராசிரியர் **கே. என். சிவராஜபிள்ளையவர்கள்** எடுத்துக்காட்டி விளக்கம் தருகின்றார்.

இதனால் ஐயரவர்கள் வழுப்பட எங்கும் உரைவரைந்துள்ளார் என்பதும் பிள்ளையவர்கள் கருத்தன்றாம்.

> " அரியகற் றாசற்றார் கண்ணும் தெரியுங்கால்
> இன்மை அரிதே வெளிறு " (குறள் 503)

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு ஏற்ப, எத்துணைப் பேரறிஞர் மாட்டும் ஒரு சில குறைகள் இருத்தல் இயல்பே.

> " நூலுரைபோத காசிரியர் மூவரும்
> முக்குண வசத்தான் முறைமறந் தறைவரே" (இலக்.பாயிரம் 6)

என இலக்கணக்கொத்து நூலாசிரியர் **சுவாமிநாத தேசிகர்** தவறு நேர்வதற்குரிய காரணத்தையும் எடுத்துக்காட்டுகின்றார். குறைகளை நிறைவாக்க வேண்டுவது அறிஞர் தம் கடமையன்றோ? 'பாம்பின்கால் பாம்பறியும்' என்றபடி ஐயரவர்களின் குறிப்புக்களை மதிப்பிடப் பேராசிரியர் சிவராஜ பிள்ளையவர்களைப் போன்றோரால்தானே இயலும்?

ஆராய்ச்சி என்பது உண்மையைக் காண்பதற்குரிய ஒரு சிறந்த வழி. ஆராய்ச்சி முடிவுகள் உண்மையை நிலைநாட்டிவிட்டன என்று எவரும் கருதார். ஓராசிரியரே தாம் ஒருகால் ஆராய்ந்து கண்ட முடிவினைப் பின்னர் நிகழும் ஆராய்ச்சிகளால் மாற்றிக் கொள்ளவும் நேரும். ஆராய்ச்சி பெருகப் பெருகத்தான் உண்மை துலங்கும். இந்த வகையில் பேராசிரியர் சிவராஜ பிள்ளையவர்களின் சொற்பொருளாராய்ச்சிக் குறிப்புக்கள் ஆராய்ச்சியாளர்க்கு வழிகாட்டியாகும் என்று கொள்ளலாம்.

" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு " (குறள் 435)

என்று அந்நாளிலேயே வள்ளுவர் ஆராய்ச்சிக்கு வித்திட்டுச் சென்றிருக்கிருர். விருப்பு வெறுப்பின்றி நோக்கவேண்டுவதே ஆராய்ச்சியாளனுக்கிருக்கவேண்டிய பண்பாகும். பேராசிரியர் கே. என். சிவராஜபிள்ளையவர்கள் எழுதித் தமிழுலகுக்குத் தந்துள்ள இந்தச் சொல்லாராய்ச்சி நூலைத் தமிழறிஞர்கள் வரவேற்று உண்மை காண்பாராக.

" காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்ற குணம் தோன்ருகும் ; உவப்பதன்கண்
குற்றமும் தோன்ருக் கெடும்."

—முனைப்பாடியார் அறநெறிச்சாரம் (23)

பேராசிரியர் சிவராஜ பிள்ளை நினைவுமன்றத் தலைவர் திருவாளர் **தி. க. ஷண்முகம்** அவர்களும், துணைத் தலைவர் டாக்டர் **கே. கே. பிள்ளை** அவர்களும், தங்களுடைய பல அலுவல்களுக்கிடையிலும் இம்மன்றத்தின் வளர்ச்சியில் கண்ணுங்கருத்துமாக இருந்து தக்கவகையில் நெறிப்படுத்தி வருகிருர்கள். இவர்களுடைய தலைமையின்கீழ் மன்றம் நாடொறும் வளர்ந்து வருகின்றது. இவர்களுடைய தமிழன்புக்குத் தமிழகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இவ்வாராய்ச்சி நூலுக்கு அணிகலமாக ஒரு முன்னுரை வழங்கிச் சிறப்பித்துள்ள சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர் **மு. வரதராசன்** அவர்களுக்கு மன்றத்தின் சார்பாக நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந் நினைவுமன்றத்தை நிறுவுவதிலும் நூலை உருவாக்குவதிலும் மிகவும் அக்கறைகாட்டி, எனக்குப் பக்கபலமாக உடனிருந்து அயராது ஊக்கமளித்து ஒத்துழைத்துவரும் தமிழறிஞர், எனது உழுவலன்பர் திருவாளர் **பச்சையப்பன்** அவர்களுக்குத் தனிப்பட நன்றி தெரிவிக்கும் கடப்பாடுடையேன். இவர்களுடைய ஒத்துழைப்பால் இம்மன்றப் பணிகள் மேன்மேலும் சிறக்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலை விற்றுவரும் வருவாய் முற்றும் பேராசிரியரின் பிறநூல்களை வெளியிடற்குச் செலவிடப் பெறுமாதலின், விலை சிறிது கூடுதலாக இருப்பது குறித்து அறிஞர்கள் எண்ணுது இதனை வாங்கி ஆதரிக்கவேண்டுகிறேம்.

இந் நூலினைக் குறைந்தகால அளவில் நன்கு அச்சிட்டுத் தந்த இளங்கோவன் அச்சகத்து 'மாற'னுக்கு நன்றி.

எல்லாவற்றிற்கும் மேலாக ஆண்டவன் திருவருளும் தமிழன்னையின் தண்ணளியும் முன்னின்று என்றும் வழி காட்டுவதாக.

கவிமணி நிலையம்
25—12—'68

மு. சண்முகம்

# PREFACTORY NOTE

In my study of Purananuru, one of the most ancient of Tamil classical works I found that a fairly good number of words and passages have been wrongly interpreted by the learned editor Pandit Maho Mahopadeyaya **V. Swaminathier.** I considered it necessary to correct them at once both in the interest of Tamil Scholarship standing the test of true criticism and to prevent the currency of such errors which might otherwise occur by the high authority of the editor in the World of Tamil Pandits of which he is so distinguished a representative. I have however taken care to have these notes free from anything of personal animadversion so characteristic of what passes for literature of criticism in Tamil at the present day.

The primary object of these notes being as stated above, I have utilized the occasion for importing into them some new ideas in respect of Tamil Philology and Exegesis carried out in the lines of modern criticism. Many of the notes will show how the handling of the Comparative method has been fruitful in bringing to light aspects of truth and even fresh truths not seen hitherto. In the field of Tamil Semantics this method comes as a great eye-opener and helps us to trace the genetio relationship among a medley of words with apparently many a discording significance though born from the same root. The genealogical tree constructed from the root "காழ்" which is appended to the notes on "கிடைக்காழ்" (p. 74) will show how to bring harmony

into words of different, even conflicting signification. Here and there, I have also tried to open new lines of inquiry not being satisfied with the meagre light thrown on the origin and significance of certain words by the old commentators themselves. Inspite of the high respect and admiration due to those erudite scholars, whose exposition alone of the Tamil classics gives us a Key to unlock the treasures thereof it would be nothing but proper that their views too should be subjected to a vigorous critical examination, From the vantage ground of the comparative method of the present day. Such a critical examination is all the more necessary in the field of Tamil literature where the dust of hide-bound conservatism has lain too deep for centuries undisturbed by so much as a breath from outside. The paucity of Western Scholars entering this field is a most regrettable feature and even the few that have strayed in, with the exception of that respected scholar **Dr. Caldwell,** have not made their mark to any extent. I deplore this fact most sincerely for I feel that present day Tamil Scholarship is, for obvious reasons extremely narrow and limited in its vision and has not been brought into line with the workers in the departments of other oriental languages. This, I believe, can be remedied only by a thorough change, in the entire outlook of the Tamil Scholar and the Tamil nation taken as a whole.

Another consideration also has weighed with me in this undertaking whatever be the extent, variety and value of Tamil literature ancient and modern, it is undoubted that it lacks works of true criticisms of a scientific character. The so-called criticism to which Kamba Ramayanam, Illakkanavilakkam and in

recent times Arulpa have been subjected is enough to show the length to which the dogmatic method could be pushed so as to lead to personal tirades of on unseemly character. Criticism has almost come to mean personal vilification of the author concerned and the present-day Pandits as a class dread it and try to avoid it as much as possible. Such a tendency however, on the part both of the critic and the author is to be deeply deplored, for in the absence of a School of Scientific criticism the development of literature on sound and healthy lines can scarcely be hoped for, much less accomplished. As a humble beginning towards encouraging a spirit of critical inquiry on Modern lines these notes, I trust will be welcomed by the Public.

**K. N. SIVARAJA PILLAI**

# முன்னுரைக் குறிப்பு

பழம்பெரும் இலக்கியங்களுள் ஒன்றாகிய புறநானூற்றை யான் ஆராய்ந்து வரும்போது, புறநானூற்றினைப் பதிப்பித்த பேரறிஞர் மகாமகோபாத்தியாய **உ. வே. சாமிநாதையர்** அவர்கள் சில சொற்களுக்கும், சொற்றொடர்களுக்கும் கொண்ட பொருள் பலவற்றில் தவறான கருத்துக்கள் நிலவி யுள்ளதைக் கண்ணுற்றேன். எனவே, ஆராய்ச்சியாளர் களுக்குப் பயன்படுவதாக என்றும், உண்மைக் கருத்துக் களைக் காணாது அப்பெரியாரின் தவறான சில கருத்துக்களையே கொண்டு விடாமல் தெளிவுபெறப் பயனுடையதாக என்றும் எண்ணி இப்பொருட் குறிப்புக்களை எழுதலானேன். இங் கனம் எழுதுங்கால் அவர்களுடைய ஆழ்ந்தகன்ற புலமைக்கு இழுக்குநேராவண்ணம் என் கருத்துக்களை வெளியிட் டுள்ளேன்.

மேற் கூறியபடி என் கருத்துக்களைத் தெரிவிக்கு முகத் தான் சொல்லாராய்ச்சியில் தற்கால ஆய்வு முறைக் கொப்பப் புதுக்கருத்துக்களையும் சில இடங்களில் குறித் துள்ளேன். இக் குறிப்புக்களில் பெரும்பாலான இது வரை யில் வெளியாகாத சில கருத்துக்களை ஒப்பிட்டுக் காட்டும் முறையினைப் பின்பற்றித் தக்க ஆதாரங்களுடன் விளக்கப் பெற்றுள்ளன. தமிழ்ச் சொல்லாராய்ச்சி நம் கண்களைத் திறந்து, சொற்பிறப்பு வேரிலிருந்து தழைத்து வளரும் சொற் றொகுதிகளின் உண்மைப் பொருள்களைக் கண்டு கொள்ள உதவும். **"காழ்"** என்னும் வேர்ச் சொல்லி லிருந்து பிறக்கும் சொற்களின் பிறப்பு வளர்ப்பினைக் காட்டும் படமொன்றினை 'கிடைக்காழ்' என்பதனை ஆராயுமிடத்தில் வரைந்து காட்டி யுள்ளேன் (பக். 74). இதனால் ஒன்றுக் கொன்று முரணாக நிற்கும் சொற்களும் கூர்ந்து நோக்கின் ஒன்றுக் கொன்று தொடர்புடையனவாக எளிதில் புலப்படும் என்பது என்

கருத்து. இங்குமங்கும் புதிதாக என் சொந்தக் கருத்தினையும் தக்க காரணங்களுடன் வெளியிட்டுள்ளேன். ஏனெனின் பழைய உரையாசிரியர்களும் சில பாடல்களுக்குப் பொருள் எழுதுங்கால் பிழை பட்டுள்ளனர் என்பதால் என்க. இங்கனம் புதுப்பொருள் காணுங்கால் நுண்மாண் நுழை புலமுடைய அப்பெரியார்களின் உரையில் குற்றங் காணும் வகையில் அமையாது, அவர்கள் திறனுக்கும் எட்டாது அல்லது விட்டுவிட்ட சில உண்மைப்பொருள்களை விளக்கவேண்டுமென்னும் சீரிய நோக்கத்துடனேதான் இவை அமைந்துள்ளன என்பது என் கருத்தாகும். பல நூற்றாண்டுகளாகத் தூசு படிந்து உண்மை புலப்படா நிலையிலிருந்த அவர்கள் கருத்துக்களை உற்று நோக்கிச் சரியான கருத்துக்களை வெளியிடுதல் தற்கால ஆராய்ச்சியாளர்களுக்கு ஒப்ப முடிந்ததாகும்.

மேல் நாட்டுப் பெரும் புலவர்களிற் சிலரே நம் மொழியை ஆழ்ந்து பயின்று தம் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர் என்பது வருந்தத்தக்கதாகும். அங்கனம் தமிழ் கற்றறிந்த மேல் நாட்டுப் புலவர்களுள்ளும் கால்டுவெல் போன்ற ஒரு சிலரேயன்றிப் பெரும்பாலோர் குறிப்பிடத்தக்க அளவக்கு ஆராய்ச்சி ஒன்றும் செய்திலர் என்பது பலரும் அறிந்தது. இது குறித்து யான் பெரிதும் வருந்துகிறேன். ஏனெனின் இன்றைய தமிழ்ப்புலமை பலகாரணங்களால் குறுகிய நோக்கமுடையதாய்க் கீழை நாட்டாராய்ச்சித் துறையில் பெரும் பங்கு கொள்ளாது விட்டுவிட்டதாலென்க. இனி, இங்கனம் வாளாயிராமல், மறுமலர்ச்சி கொண்டு தமிழ் நாடு முழுதும் உண்மை ஆராய்ச்சியில் ஈடுபடும் என்றே நம்புகிறேன்.

யான் இக்குறிப்புக்களை மேற்கொண்டதன் நோக்கத்திற்கு மற்றொரு காரணமும் கூறத்தகும். பழங்கால இலக்கியமும் தற்கால இலக்கியமும் பல திறத்தவாய் அரும் பொருள் கொண்டனவாய் இருப்பினும், விஞ்ஞான முறையில் ஆராய்ச்சி நூல்கள் இல்லை என்பதில் ஐயமின்று.

கம்பராமாயணம், இலக்கண விளக்கம், அண்மையில் வெளி வந்த திருஅருட்பா ஆகிய பெருநூல்கள் மிகுந்த ஆராய்ச்சிக் குட்பட நேர்ந்தமையும், அதனுல் அப் பெருநூல்களை இயற்றிய ஆசிரியன்மார்களுக்கு நேர்ந்த தனிப்பட்ட தாக்குதல்களையும் கண்டு, தற்காலப் பேரறிஞர்களிற் பலர் ஒருமுகமாக இவ்வாறு சர்ச்சைகட்கு இடனுகை உள்ள ஆராய்ச்சிகளில் இறங்கிற்றிலர். இங்கனம் ஆய்வாளர்களும் ஆசிரியன்மார்களும் வெளியுலகுக்கு அஞ்சி நிற்பது மிகவும் வருந்துதற்குரியதே. இதனுல் நல்ல இலக்கியங்கள் தோன்ருமற் போவதுடன், நல்ல ஆராய்ச்சி நூல்களும் வெளிவாராது நின்று விடுமன்ருே? இவற்றையெல்லாம் எண்ணிப் பார்ப்போர், என் இச் சிறு முதன் முயற்சியைப் பாராட்டுவர் என்று நம்புகிறேன்.

**K. N. சிவராஜ பிள்ளை**

---

குறிப்பு: இது பேராசிரியர் எழுதிய ஆங்கில முன்னுரையைத் தழுவி எழுதியதாகும். ஆங்கில முன்னுரையும் அடுத்து அச்சிடப் பெற்றுள்ளது. இதனைத் தழுவித் தமிழாக்கி உதவியவர் P. பச்சையப்பன் அவர்களாவர்.

# உள்ளுறை

## (அகராதி)

# சில தமிழ்ச்சொல் ஆராய்ச்சி

## 1. "கண்ணி"

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை" (புறநானூறு 1 : 1-2)

கண்ணி ஆடவர் தலையிற் சூடுதற்குரிய மாலையென்று குறிக்கப்பட்டிருக்கின்றது. புறம். 378 : 3-ல் வரும் கண்ணிக்கும்* 'தலைமாலை'யெனப் பொருள் கூறப்பட்டுள்ளது. கண்ணி யென்னுஞ் சொல்லுக்கு இப் பொருளுளதோ வென ஆராயின், அது மாலையுமன்று, தலையில் மட்டும் சூடுதற் குரியது மன்று, ஆடவர்கள் மாத்திரம் அணிந்து கொள்ளுவது மன்றெனக் காண்போம்.

பிற்கால நூல்களில் கண்ணி, மாலை என்னுஞ் சொற்களின் பிரயோகம் எத்துணை மயங்கிக் காணப்படினும் பண்டை நூல் வழக்கில் கண்ணி வேறு, மாலை வேறென்றே கொள்ளக் கிடக்கின்றது.

"முல்லையொரு காழுங் கண்ணியு மெல்லியால்"
(முல்லைக்கலி 115 : 5)

"கண்ணி யேந்தினர் பிணைய லேந்தினர்"
(சிலப். வழக்குரை காதை. 16)

"துறுமலர்ப் பிணையலுஞ் சூட்டுஞ் சுண்ணமும்
நறுமலர்க் கண்ணியு நாறு சாந்தமும்"
(சீவக சிந்தாமணி, 193)

"தொழுது கோதையுங் கண்ணியுஞ் சூட்டினர்" (ஷ 1317)

"தழையுங் கண்ணியுந் தண்ணறு மாலையும்" (ஷ 1338)

---

* "தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கை"

" சந்தனத் தளிர்நன் மாலை, யோச்சினுர்
கண்ணி சுண்ண முடற்றினுர் " (டி 2661)

இவ்வுதாரணங்களில் வரும் காழ், பிணையல், கோதை யென்னுஞ் சொற்கள் மாலையின் பரியாயப் பெயர்களே. இவ்வடிகளால் பண்டையாசிரியர்கள் கண்ணி வேறு, மாலை வேறெனவே கொண்டாரென்பது வெளிப்படை. இது பற்றியன்றே புறநானூற்று உரைகாரரும் கண்ணியை மாலை யெனத் தம்முரையில் மயங்கிக் கூருது கண்ணியென்றே காட்டியமைந்தனர்.

கண்ணி தலையின் மட்டினுஞ் சூடற்குரியதோவென நோக்கின், பிறவுறுப்புக்களிலும் இதனைப் பண்டைய மக்கள் அணிந்து வந்தனரென்றே தெரிகின்றது.

" மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமகள் " (புறம். 342 : 2)
" பொலஞ் செய் பல்கா சணிந்த வல்கு
லீகைக் கண்ணி யிலங்கத் தைஇ " (புறம். 353 : 3-4)

என்னும் அடிகள் இதனை நிலை நிறுத்தும்.* உடலின் உறுப்புக்களோ டொட்டி இச்சொல்லின் பொருள் விரிக்கப் பட வேண்டியதில்லையென்பதனை உயிரில்லாப் பொருள் கட்கும் கண்ணியை அக்காலத்துச் சூட்டிய முறையொன்றே காட்டும். உதாரணமாக, " தொடையமை கண்ணித் திருந்து வேற்றடக்கை " (புறம் 378 : 3) என்னுமடிக் குறிப்பில் வேலுக்கு மாலை சூட்டுதல் சுட்டப்பட்டிருக்கின்றது. தலை யில்லா வேலுக்குங் கூட வணியுங் 'கண்ணியை'த் 'தலைமாலை' யெனக் கூறவேண்டாமே.

இனி ஆடவர் அணிவது தானே கண்ணி யென்பதனை நோக்கின், இதை யணிவதில் பால் வேற்றுமையும் வந்து அமைந்ததெனக் கூறச் சான்று யாதொன்றுமில்லை. " மயிலைக் கண்ணிப் பெருந் தோட் குறுமகள் " என்னு மடி யொன்றே " கண்ணி, ஆடவரணியு மாலை " யென்பது

---

* " திருமால் திருப்பேர் வல்லார் அடிக்கண்ணி சூடிய மாறன் "
(திருவிருத்தம். 100)

நேருரையன்றெனக் காட்டும். மகளிர் கண்ணி சூடுதலைக் குறித்து வரும் மேற்கோள்களைப் பாலைக் கலி 28-ம் பாடலின் கீழ்க் கலித்தொகைப் பதிப்பாசிரியர் திரட்டித் தந்திருக் கின்றனர். அங்கே நோக்கிக் கொள்க.

பூவை நெருங்கத் தொடுத்தாக்கிய தொடையல் அல்லது மாலைக்கும், இடையிட்டுக் கட்டிய சரம் அல்லது கண்ணிக்கும் நிகழும் வேற்றுமை பெரிது. பூவின் நெருக்கம், நெருக்கமின்மை யென்பவற்ளேடு அவை தொடுக்கப்படுந் தன்மையிலும் வேற்றுமையுளது. கண்ணிபோன்ற முடிச்சி னுட் பூவின் காம்பைச் செருகி இறுக்கி முடிப்பது கண்ணி; மாலையோ, பூவின் காம்புகளை ஒரு நாரடியோடு சேர்த்துப் பிணைத்து நெருங்கத் தொடுக்கப்படுவது.

கண்ணி யென்னுஞ் சொல் 'கண்' என்னும் இடப் பொருண்மை சுட்டும் இடைச் சொல்லடியாகப் பிறந்த பெயராகவும் எடுத்துக் கொள்ளலாம். "கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ" (புறம் 39 : 2) என்னுமடிக்கு "கண்ணுக்கு அழகு செய்வ"தெனப் பண்டையுரையாசிரியர் தந்த பொருள் பிற்காலத்துப் புகுந்த பொருளுரையேயாம்.

## 2. "உன்ன மரம்"

"உன்ன மரத்த துன்னருங் கவலை" (புறம். 3 : 23)

இவ் வடியினது குறிப்பினிறுதியில் "உன்னம் இலவ மரமென்பது மலை நாட்டு வழக்கு" என வரையப் பட்டிருக் கின்றது. இது தவறெனக் கூறுதிருக்க இடமில்லை. இலவையும், உன்ன மரத்தையும் ஒரே மரமாக மலைநாட் டார் யாண்டுங் கொண்டிலர்; இன்றும் அவற்றை இருவகை மரங்களாகவே கொள்கின்றனர். மலை நாட்டு வழக்கு இவ்வாருக, இலக்கிய வழக்கிலேனும், இவ்விரண்டனையும் ஒன்றென மயங்குதற்குச் சிறிதும் இடமுளதோவென

நோக்கின், அங்கும் வேற்றுமை தெரியுமாறே இம்மரங்களைப் புலவர் வருணித்திருக்கின்றனர்.

" பொன்னி னன்ன பூவிற் சிறியிலை
புன்கா லுன்னத்து " (பதிற்று பத்து. 61 : 5-6)

" எரியுரு வுறழ விலவ மலர " (பாலைக்கலி : 32 : 10)

" எரிப்பூ விலவத் தாழ்கழி பன் மலர் (ஐங்குறு நூறு, 368 : 1)

என்னும் அடிகளிலமைந்த வருணனையைக் கொண்டேனும் அம்மரங்கள் வேறு வேறெ‌ன அறிந்து கொள்ளலாம். எனினும் புலவர் கூறும் பொருள்களில் அமைந்த குண வேற்றுமைகளை நோக்கி உரை கூறுவதே சொல்லாராய்ச்சி ஒன்றனையே கருவியாகக் கொண்டு உரை வரைதலினும் சாலப் பயனளிக்கும்.

## 3. " பறைந்தன "

" தாள், களங்கொளக் கழல் பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப் போன்றன ' (புறம். 4 : 3 4)

இதற்குப் பண்டையுரையாசிரியர் "கால்புடை பெயர்ந்து போர் செய்து களத்தைத் தமதாக்கிக் கொள்ளுதலால், வீரக் கழல் அருப்புத் தொழில் பறைந்தவை, கொல்லும் ஆனேற்றினது கோட்டை யொத்தன " என்று பொருள் கூறியிருக்கின்றனர். 'கழல் பறிந்தன வென்றோதி வீரக் கழனீங்கியவையென்று உரைப்பாருமுளர்' ' என்றும் பின்னர்ச் சுட்டியுள்ளார். இதனால் 'பறைந்தன', 'பறிந்தன' என்னுஞ் சொற்கள் பொருள் வேறுபாடுடையனவென்று உரையாசிரியர் கொண்டனர் என்பது உறுதி. 'பறிதல்' நீக்கமென்றும் 'பறைதல்' தேய்தலென்றும் கொள்ளற்கு இலக்கிய வழக்குளதோவென நோக்கின், ஆங்கு அவ்வேற்றுமையிருப்பதாகப் புலப்படவில்லை. இரு பொருள் களிலும் இரண்டு பதங்களும் விரவிவரக் காண்கின்றோம்.

முனிவு, முனிந்து என்பவை முனை இ, முனைந்து என்று வருமாறு போன்றே பறிந்து, பறைந்து என்று வந்ததெனக் கொள்ள வேண்டும். அடியின் பொருள் கோளிலும் நீக்கப் பொருளே தேய்வுப் பொருளைக் காட்டி லும் பொருத்தமுடைத்தென விளங்கும். உவமித்தற்காய சாதாரண தர்மத்தை முன்பின் னடிகள் எங்ஙனம் சுட்டி நின்றனவோ அங்ஙனமே இவ்வடிகளும் தாள் ஆனேற்றின் கோட்டை யொத்ததின் காரணம் கழல் நீங்கினமையே யென்று விளக்கிக் காட்டின. கழல் அருப்புத் தொழில் தேய்ந்தமையால் கோட்டை யொத்ததெனக் கூறல் கழல் வருணனையாமே யன்றித் தாள் வருணனையாகாது. அது எத்துணைப் பொருந்தும்?

'பறைதல்' நீக்கப் பொருளைத் தருமென்பதற்குக் கீழே தரப்படும் உதாரணங்களே போதிய சான்றாகும்.

"அடிபுதை தொடுதோல் பறைய வேகி" (அகம். 101 : 9)

"நைந்துகரை பறைந்தவென் னுடையு நோக்கி" (புறம். 376 : 11)

"பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல" (புறம். 359 : 1-2)

"சிறை பறைந்துரைஇச் செங்குணக் கொழுகு
மந்தண் காவிரி போல" (அகம். 76 : 11-12)

தேய்வுப் பொருளை இவற்றுள் முதலுதாரணத்திற் கொள்ள லாமாயினும் மற்றவை அதற்கு இடந்தரா. இடையிரண்டு உதாரணங்களில் வரும் 'நைந்து', 'பாறுபட' என்னும் பதங்கள் தேய்வுப் பொருளை ஒருவாறு சுட்டி நிற்கப் பின்னரும் 'பறைந்து' என்ற சொல்லாற் புலவர் அப் பொருளையே கூறினரென்று கொள்வது பொருந்தாது.

பிற்கால நூற்றொகுதியில் வரும் திருஞான சம்பந்தர் தேவாரத்திலும் 'பாவம் பறையுமே' என்னுந் தொடர் பலவிடங்களில் வந்து பயில்கின்றமை காணலாம். இங்குத் தேய்வுப் பொருளைக் கொள்ளினும் இறுதியுறத் தேய்ந்து

நீங்கின தன்மையையே அது குறித்ததெனக் கொள்ளா திருக்க இடமில்லை.

## 4. " துவைத்த "

" தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ " (புறம். 4 : 5)

இதில் ' துவைத்தம்பு ' என்பதற்கு "ஒலித்துத் தைத்த அம்பென்று" பண்டையுரையாசிரியர் பொருள் கூறியிருக்கின்றனர். இங்கு வந்துள்ள ' துவைத்த ' என்பதனைத் தொல்காப்பியர் சூத்திரத்திற் குறிப்பிட்ட இசைப் பொருட் கிளவியென மருண்டமையால் வரைந்த பொருளேயாகும் இது. ஒலிக்குமம்பிற்கும் துளை தோன்றற்கும் சம்பந்தம் உண்டு பண்ண வேண்டுமெனின், ' தைத்தல் ' ' விரைவு ' முதலிய பிற கருத்துக்களைப் பெய்தே ஒருவிதம் பொருட் பொருத்தம் செய்ய வேண்டும். அத்துணைப் பரந்து செல்லாது தானே ' துவைத்த ' என்பதற்கு ' பதன் செய்து கூர்மைப்படுத்திய ' என்று பொருள் கொள்ளுவோமாயின் புலவர் கருத்து எளிதில் விளங்கும். ' துவைத்தல் ' என்ற சொல் வருமிடங்களிலெல்லாம் இசைப்பொருள் கொள்ள வேண்டுமென்பது அமையாது ; அங்ஙனம் தொல்காப்பியர் கருதியிருத்தற்கும் இடமில்லை. உதாரணமாகக் கீழே தரபடும் அடிகளில் வரும் ' துவைத்தல் ' இசைப் பொருளல்லாத பிற பொருளையே தருவது வெளிப்படை.

" பாடின் றெண்மணிப் பயங்கெழு பெருநிரை
வாடு புலம் புக்கெனக் கோடுதுவைத் தகற்றி
... ... ... ... ... ...
பல்லான் கோவலர் கல்லா தூதும் " (அகம். 399 : 8-11)

" ஒண்படை மாரி வீழ்கனி பெய்தெனத்
துவைத் தெழு குருதி நில மிசைப் பரப்ப" (புறம். 370 : 12-13)

ஆயுதங்களைக் கொல்லனுலையிற் பதனிட்டுக் கூர்மை செய்வதற்கு, ' துவைத்தல் ', ' வடித்தல் ' எனக் கூறுவது

தமிழ் நாட்டின் நெடுங்கால வழக்கு. அதனல் இப் பொருள் தரும் துவைத்தல் என்பதனை வெளிப்படைச் சொல்லாகவே கருதி அதற்கெனப் பிரத்தியேக சூத்திர மொன்றியற்ருது தொல்காப்பியர் விடுத்தனர் என்று கொள்ளல் பொருந்தும்.

## 5. "உராஅய்"

"களிறு கதவெறியாச் சிவந்துராஅய்
நுதி மழுங்கிய வெண் கோட்டா
னுயிருண்ணுங் கூற்றுப் போன்றன" (புறம். 4 : 10-12)

இதில் 'உராஅய்' என்பதற்கு 'உலவி' என்று பொருள் கொண்டனர் பண்டை யுரையாசிரியர். களிற்றின் வெண் கோட்டு நுதி மழுங்கற்கு உலவுதல் காரணமாகாதென்பது ஒருதலை. 'உராய்' என்பது 'உலவி' என்ற பொதுப் பொருள் தருமேயாயினும் இங்கு அது 'உரசி', 'உரைத்து' என்ற சிறப்புப் பொருளையே தந்து நின்றது. கதவெறிதலிற் கதவிற்றன் கோட்டையுரசி அதனுதி மழுங்கப் பெற்றது. களிறு என்பதே புலவர் கருத்து. 'உராஅய்' என்ற சொல்லுக்கு இப் பொருளுளதோ வென ஐயுற வேண்டிய வேண்டியதில்லை. இவ்வடிகளை நோக்குக.

"மராஅ யானை மதந்தப வொற்றி
உராஅ வீர்க்கு முட்கு வரு நீத்தம்"
(கபிலர்—அகம். 18 : 4-5)

இதில் நீத்தம் யானையை ஈர்த்துச் செல்லுமுறை வர்ணிக்கப் படுகின்றது. இங்கே 'உராஅ' என்பதற்கு உரசி என்று பொருள் கூறல் பொருந்துமேயல்லது 'உலவி' எனக் கூறுதல் பொருந்தாதே.

# 6. "வால்"

"... ... ... ... வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
(புறம். 6 : 23-24)

"வாலிழை மட மங்கையர்" (புறம். 11 : 2)

இவ் வடிகளில் வரும் 'வாலிழை' யென்னுந் தொடருக்குப் பண்டையுரையாசிரியர் இருவிதத்திற் பொருளுரைத்திருக்கின்றனர். 'வெளிய முத்தாரம்' என்று முன்னதற்கும் 'தூய ஆபரணம்' என்று பின்னதற்கும் பொருள் கூறினர். 'வால்' என்னும் பதம் வெண்மை, தூய்மை முதலிய கருத்துக்களைப் பின்னர்ப் பெற்றுள்ளதேயாயினும் ஆதியில் அது ஒளிப் பொருளையே தந்ததெனத் திட்டமாகக் கூறலாம். ஒளிப் பொருளைத் தரும் 'வாள்' என்ற பதத்திற்கும் 'வால்' என்ற சொல்லுக்கும் அக்காலத்திற் பொருள் வேற்றுமை நிகழ்ந்திருந்ததெனக் கூற இடமில்லை. உதாரணமாகப் பின்வரு மடியை நோக்குக.

"வான் கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னி" (புறம். 150 : 6)

இதில் 'வால்' என்ற பதம் ஒளிப் பொருளைத் தருவதாம்; ஆயினும் இப் பதம் வெண்மை முதலிய பொருள்கட்கும் 'வாள்' ஒளிப் பொருட்கும் பிற்கால வழக்கால் வேற்றுமை பெற நிறுவப்பெற்றன. 'வாலிழை' யென்னுந் தொடர் மிக்க பழமை வாய்ந்த தொன்ருகலான் அதற்கு 'ஒளி வீசு மணிகலம்' என்று பொருள் கூறுதலே பொருத்தமாயிருக்கும். 'தூய ஆபரணம்' என்ருே 'வெள்ளிய ஆபரணம்' என்ருே கூறுவதனுற் பொருள் சிறக்கவில்லையென்பது வெளிப்படை.

## 7. "சூடு"

" கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும் " (புறம். 13 : 11)

இதில் 'சூடு' என்பதற்கு 'நெல்லரி'யென்று பதிப்பாசிரியர் உரை வரைந்திருக்கின்றனர். சூடு வென்பது நெல்லரியைச் சுட்டாது நெல்லரித் தொகுதியைச்சுட்டுவதாய வொரு பெயர்ச் சொல். 'சூடு' என்ற சொல்லை முதற் பெயராகவும் நெல்லரியை அதன் சினைப் பெயராகவுங் கொள்ள வேண்டும். சூட்டு என்ற மொழியின் பகுதிப் பொருளைத் தான் பதிப்பாசிரியர் கொள்ளாது போயினும் அடியில் வரும் 'தொகுக்கும்' என்ற சொல்லைக் கொண்டும், பொருநராற்றுப்படை மேற்கோளைக் கொண்டும் (343) நெல்லரி தொகுத்தலால் ஆக்கப்படுவதே சூடென்றறியலாம்.

'சூடு கோடாகப் பிறக்கி' என்ற (பொருந. 343) தொடரில் 'சூடு' நெல்லரியைச் சுட்டிற்று அன்றி நெல்லரியைக் கோடு போற்றெகுத்தலைச் சுட்டிற்று, வெனவுற்று நோக்கப் பொருள் தெளிவுறும்.

## 8. "அணங்கு"

" ... ... ஒன்று மொழி வேந்தரை
யணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணி "

(புறம். 25 : 5-6)

இதில் 'அணங்கரும்' என்பதனை 'வருத்துதற்கரிய' வென்றனர் பண்டையுரையாசிரியர். 'வருத்துதற்கரிய' போர்க்கள மென்பதிற் பொருள் வலிந்து கூறப் பெற்ற தாவதோடு தெளிவு பெருமலும் நிற்கின்றது. இங்கு அணுகுதற் கரிய பறந்தலை யென்று பொருள் கூறினலன்றிப் புலவர் கருத்து விளங்காது. இது போன்றே புறம் 78-ல் வரும் 'அணங்கருங் கடுந்திற லென்னை' என்ற தொடருக்கும்

பொருள் கூறிவிட்டனர். வருத்துதற்கரிய திறல் என்பதினும் அணுகுதற்கரிய திறல் எனக் கூறின் பொருள் சிறப்புறு மன்றோ ?

இனி அணங்கு என்ற சொல்லுக்கு 'அணுகு' வென்னும் பொருளுளதோ வென்றாராய வேண்டும். இப் பதம் பேய், தெய்வமகள், அச்சம், வருத்தம் முதலிய பல்வேறு பொருள் களைப் பின்னர்ப் பெற்றளதேயாயினும் அணுகுதலே அதன் மூலப் பொருளெனப் பண்டைப் புலவர் வாக்கால் தெள்ளி தின் அறியக்கிடக்கின்றது.

> " பேணினெ னல்லனோ மகிழ்ந வானத்
> தணங்கருங் கடவுள் னோணின்
> மகன்று யாதல் புரைவதாங் கெனவே " (அகம். 16 : 17-19)

இதில் 'கடவுள்' கற்பின் கடவுளாகிய அருந்ததியென்னுந் தெய்வமகளைக் குறித்ததெனஉரைகாரர் கூறினர். அங்கன மாயின் 'வருத்துதற்கரிய' என்னும் பொருள் இங்கே பொருந்து மாறில்லை. 'அணுகுதற்கரிய' வென்றே கூற வேண்டும். இனியும்,

> " சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
> தாம்வேண் டுருவி னணங்குமார் வருமே" (அகம். 158 : 8-9)

என்ற கபிலரது அடிகள் அணங்கு என்ற சொல்லுக்கு அணுகுதற் பொருளுண்டென ஐயமற நிலை நாட்டும். பிற் காலப் பொருள் வலைக்குள்ளே சிக்குண்டமையாற்றான் உரையாசிரியர் பூர்வகாலப் பொருளை இங்கே தராது போயினர். Tamil Lexicon என்ற புது அகராதியிலும் 'அணங்குதல்' என்ற தலைப்பின் கீழ் 'வருத்துதல்' என்ற பொருளை முதற்றந்து அதன்பின் 'பின்னி வளர்தல்' 'பொருந்துதல்' முதலிய பொருள்களை யடுக்கித் தந்திருப் பதனைக் காணலாம். பிற் கூறிய பொருள் வேற்றுமைகள் 'வருத்தம்', என்ற கருத்தினின்று எங்ஙனம் உதித்தன ? சிற்சில அனுபவங்களைக் கொண்டு மக்களைப் பேய் அணுகுத லுண்டெனப் பண்டைத் தமிழர் நம்பியிருந்தனர் ; அதனால்

பேய் அணங்கெனப்பட்டதெனக் கூறலாம்; பின்னர் அப் பேய்க் கோளால் வந்த வருத்தம், அச்ச முதலியவற்றை அச் சொல் குறித்திருக்க வேண்டும். இவ்வாறு கொள்வதே அச் சொல்லின் பொருள் வளர்ச்சித் தத்துவத்தினை நன்கு விளக்குவதாகும். மூலப் பொருள் 'அணுகுதல்' எனக் கொள்ளினன்றே 'பொருந்துதல்' 'பின்னி வளர்தல்' முதலிய சிறப்புப் பொருள்களை அச் சொல்லினின்றும் எளிதிற் பெறக்கூடும்.

## 9. "பைஞ்ஞிலம்"

"பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்" (புறம். 62 : 10)

பைஞ்ஞிலம் தொகுதியென்றனர் பதிப்பாசிரியர். இது சரியாமா? மரத் தொகுதியும் விலங்கின் தொகுதியும் தொகுதியாமே. ஆயின் இவற்றைப் "பைஞ்ஞிலம்" என்று கூறுமாறுண்டோ? இம்மொழிக்கு மக்கட்டொகுதி அல்லது மன்பதையென்றே பொருள் கூறவேண்டும். நிலத்தைச் சுட்டிப் பின் இடவாகு பெயராய் நிலத்திலுறையும் மக்கட் டொகுதியையுஞ் சுட்டிற்று இச் சொல். இப் பாட்டில் பல்வேறு நாட்டினராய மக்கட் டொகுதியான் அமைந்த படைகளையும், "உண்ணாப் பைஞ்ஞிலம்" (பதிற்றுப் பத்து. 31:6) என்ற தொடரில் உண்ணாது உபவாசமிருந்த மக்களையும் குறிப்பது வெளிப்படை. இச் சொல்லின் பொருள்கோளிலும், 'கண்ணி' என்னும் சொல்லின் பொருள்கோளிலும் இரு வேறு முறைகள் கையாடப்பட்ட மையால் மெய்ப் பொருள் விளங்காது போயின. இங்கு மக்கள் என்னும் பெயரடையைத் தராது 'தொகுதி' என்ற சொல்லின் பொதுமையால் மெய்ப் பொருளிழக்க வேண்டியதாயிற்று. அங்கு மாலையென்னுஞ் சொல்லுக்கு 'ஆடவர் தலையிற் சூடுதற்குரிய' என்னும் வேண்டா அடை தந்து சிறப்புப் பொருள் வருவித்து பொதுப் பொருள் நீக்கப்பட்டது. வேண்டிய இடங்களில் அடைமொழி பெய்யாதும், வேண்டா இடங்களில் அடைமொழி பெய்தும் உரைவரைதல் வழுக்குரை பெருக்குவதேயாம்.

'பைஞ்ஞிலம்' என்ற சொல்லின் உருவம் பிற்கால வழக்கிற் சிதைந்து மாறிப் போயிருப்பதனை நாம் கவனிக்க வேண்டும். பிங்கலந்தையில் "பைஞ்ஞீலி" என்றும் சூடாமணி நிகண்டில் "பைஞ்ஞீல்" என்றும் சிதைவடைந்து இச் சொல் தன்னுற்பத்தியை முற்றும் மறைப்பதற்காய மெய்ப்பை போர்த்து நிற்கின்றது. "மன்பதை பைஞ்ஞிலம் மக்கட் பரப்பே" என்ற திவாகரச் சூத்திரத்தினைப் பிழை படப்படித்துக் கொண்டமையாலே 'பைஞ்ஞீல்' என்ற சொல் வடிவு பிறந்ததெனை எளிதின் உணரலாம். இப்பிழை பாடு மண்டலபுருடர் காலத்திற்கு முன்பு தானே நேர்ந்துள்ள தாகலின், புறநானூறு, பதிற்றுப்பத்து முதலிய நூல்களின் பிரயோகமிலதேல் இதன் உற்பத்தியை யறிந்து கொள்வது எளிதன்று. பன்மையைக் குறிக்கும் 'பல்' என்ற மொழி யானும் இச் சொல் ஆக்கப்பட்டிருக்கின்றது.

பல் + நிலம் = பன்னிலம் = பந்நிலம்
= பஞ்ஞிலம்
= பைஞ்ஞிலம்

இது முற்காலத்து வழங்கிய பதினெண் பாஷை நிலங் களையும் குறித்தது. "நனந்தலைப் பஞ்ஞிலம் வருகவிந் நிகழலென" (பதிற்று: *17 : 9*) என்னுமடியில் வரும் 'நனந் தலை' என்ற அடையே இச் சொல் முதன் முதல் நிலப் பொருளில் வந்ததெனக் காட்டும். பன்னிலம் பஞ்ஞிலம் ஆயதற்கு "மைஞ்ஞின்ற வொண் கண் மலர்கின்ற தில்லைச் சிற்றம்பலவன்" என்னுந் திருக்கோவையடியில் மை(ந்) நின்ற வெனுந் தொடர் 'மைஞ்ஞின்ற' வென மாறி நிற்பதனையும், "மென்றோ ளஞ்ஞை சென்ற வாறே" (அகம் *15 : 19*) என்பதில், அன்னை என்னும் சொல் 'அஞ்ஞை' என மாறி நிற்பதனையும் இங்கு ஒப்பிட்டுக் கொள்க.

## 10. " முக்கி "

" ... ... ... ... ... ... மகளிர்
பாசவன் முக்கித் தண்புனற் பாயும் " (புறம். *63 : 12-13*)

'முக்குதல்', உண்ணுதல் என்றனர் பதிப்பாசிரியர். இங்கும் வேண்டிய அடைமொழி தராது மெய்யுரை விடுக்கப் பட்டது. "நிறையவுண்ணுதல்" என்று பொருள் கூற வேண்டும். இக் காலத்தில் இம் மொழி 'மொக்குதல்' என மருவித் தென்னாட்டில் வழங்கி வருகின்றது. 'முக்குதல்' என்னுஞ் சொல்லுக்கு நாளடைவில் வேறு பொருள் வந்து பொருந்தினமையால், மேற் காட்டிய மரூஉ வழங்கற்குத் தக்க காரணமும் இல்லாதிருக்கவில்லை. பிற்கால இலக்கியத் திலும் இச் சொல் வழங்கி வந்ததனை "கொக்கு முக்கி விக்கிக் கக்குமச் சோலைக் குறுங்குடியே" என்னுமடி நன்கு காட்டும்.

## 11. "ஊதும்"

"சிறுவெள் ளாம்பன் ஞாங்க ரூதும் (புறம். 70 : 12)

'ஊதும்' என்பதற்கு 'நுகரும்' என்று பதிப்பாசிரியர் பொருள் கூறியிருக்கின்றனர். பண்டையுரையாசிரியர் தந்த பொருளில் நின்றும் மாறுபட்டுக் கூறியவுரையே இது. 'ஊதும்' என்பதனை இயற் சொல்லாகவே கொண்டு "ஆம்பலின் மீதே ஊதும்" என்ற தெளிந்த பொருள் அன்னாரே கூறியிருக்க, அப்பொருளை விடுத்து, 'ஊதும்' என்பதனைத் திரிசொல்லாக்கி 'நுகரும்' எனப் புத்துரை வகுத்ததினால் வரும் சிறப்பு யாது? நச்சினார்க்கினியர் வேறோரிடத்திற் கூறிய உரையை இங்குப் பின்பற்றினர் போலும். ஆயின், அச் சிறப்புரையைச் சந்தர்ப்பத் தகுதி நோக்காது எங்குந் தழுவல் இசையுமோ? "பாய்ந்தூதிப் படர் தீர்ந்து பண்டு தாமரீஇய" என்னுங் கலித்தொகையடியில் (கலித். 66 : 7) வரும் 'ஊதி' என்பதனை 'படர்தீர்ந்து' என்ற பின்றொடரினாலும் பாடலின் உள்ளுறை உவமத்தைத் தெள்ளிதின் விளக்கக் கருதினமையாலும், 'நுகர்ந்து' என நச்சினார்க்கினியர் பொருள் கொண்டமை மெய்யே. எனினும் ஒலிப் பொருண்மை சுட்டியும் இச் சொல் பண்டை நூல்களிற் பயின்று வந்திருப்பதனை நாம் மறத்தல் கூடாது.

" ஒரு திறம், பண்ணுர் தும்பி பரந்திசை யூத "
(17ம் பரிபாடல் : 12)

என்ற அடியொன்றே 'நுகரும்' என்ற பொருள் யாண்டும் பொருந்துவதன்றென நிலை நாட்டும். "பூவூது வண்டினம் யாழ் கொண்ட கொளை கேண்மின் " (பரிபா. 11: 125) என அந் நூலில் வந்துள்ள வேறோர் அடியும் ' ஊதும் ' என்னுஞ் சொல் ஒலிப்பொருளைத் தர வல்லதெனக் காட்டும். பொருள் சிறவாவிடத்தும் இயற் சொல்லைத்திரி சொல்லாக்கி உரை வரைவது இலக்கிய வழக்கிற்கும் உலக வழக்கிற்கும் இடையே கடக்கலாகாப் பெரியதோர் அரண் அமைத்தலே யாகும்.

## 12. " தாடி "

" ... ... ... மையணற் காளை " (புறம். 83 : 1)

என்பதற்கு " மை போன்ற தாடியினையுமுடைய இளையோன் " என்று பண்டையுரையாசிரியர் பொருள் கூறியிருக்க அதனை நன்கு விளக்கக் கருதி 'தாடி' யென்பது ' வீசை ' யெனக் குறிப்புரை யொன்றெழுதியிருக்கின்றனர் பதிப்பாசிரியர். இதற்கு மேற்கோளாக,

" இரலை, மருப்பிற் றிரிந்து மறிந்து வீழ் தாடி " (கலி. 15 : 5-6)
" கலையிரு மருப்பிற் கோடி காதள வோடுந் தாடி "
(திருவிளை. 26 : 22)

என்னும் அடிகளுந் தரப்பட்டிருக்கின்றன. ஆயின் கலித் தொகையடிக்கு நச்சினர்க்கினியர் கூறிய பொருளிலிருந்தே தாடி மீசையன்றென அறியக்கிடக்கின்றது.

அவர் கூறும் பொருள் :— " கலையினது கொம்பு போலவே நேர் போகாமற் றிருகி முறுக் குண்டு தாழ்ந்த தாடி ". வாயின் மேலிதழின் மீதேயிருக்கும் மீசையினையும், வாயின் கீழ்ப் புறத்திருக்கும் அணல், மோவாய், தாடி

என்னும் உறுப்பிற்ருேன்றும் தாடி மயிரினையும் ஒன்றெனக் கருதினது வியக்கத் தக்கதே! இதற்கு உலக வழக்கோ இலக்கிய வழக்கோ அறவே இல்லை. பிற்கால நிகண்டாசிரியர்களின் பிறழ் வழக்கிலுங்கூட இத்தாடி மீசையுறழ்ச்சிக்கு ஆதாரமொன்றும் கண்டிலம். "அணல், கீழ்வாய்ப் புறம்" என்று திவாகரம் கூறியிருக்க, "அணலே மேல் வாயாகலுமுரித்தே" எனப் பிங்கலந்தை கூறிற்று. இதனை மண்டலபுருடரும் பின்பற்றினர். அணலின் பொருள் இங்ஙனம் பிற்கால நிகண்டுகளில் பிறழ்ச்சியுற்றிருப்பினும், கீழ்வாய்ப் புறத்திற்ருேன்றும் தாடி மயிரினை மீசையென அந் நிகண்டாசிரியர்கள் தாமும் கொண்டிலர். இதனால், பதிப்பாசிரியரின் கொள்கையை நிலைநிறுத்துவான், போதிய ஆதாரம் உலகவழக்கிலோ, இலக்கிய வழக்கிலோ, பிற்கால நிகண்டின் பிறழ்ச்சி வழக்கிலோ ஓரிடத்தும் இல்லையென்பது வெளிப்படை.

"குச்சி னிரைத்த குரூஉ மயிர் மோவாய்" (புறம். 257 : 3)

என்னும் அடிக்கு பண்டையுரையாசிரியர் தரும் பொருள்: "குச்சுப்புல் நிரைத்தாற் போன்ற நிறம் பொருந்திய மயிரினையுடைய தாடி" என்பதே. சிலப்பதிகாரம், நீர்ப் படைக்காதையில் வரும் "சுருளிடு தாடி மருள் படு பூங்குழல்" என்னுமடியில் (*181*) வரும் தாடி யென்னுஞ் சொல்லுக்கு 'மோவாய்' என்றே பொருள் கொண்டனர் அரும்பதவுரையாசிரியர். இவற்றில் நின்றும் 'தாடி' மோவாயின் ஒரு பரியாயப் பெயரெனப் பெறுகின்ருேம். பின்னர் மோவாயிற்ருேன்றும் மயிரினையும் அது குறிக்க வந்தது. எனினும் மீசையை அது ஒரு பொழுதும் சுட்டியதே இல்லை. தாடி, மீசை யென்னுஞ் சொற்கள் பிறழ்ச்சியுருது இன்றும் உலக வழக்கில் நிலவுகின்றன.

இவ்விரு சொற்களின் பகுதியடிகளை நோக்கினும் அவை எதிரிடைப் பொருள் பயப்பனவே யாமென அறிவோம். 'தாழ்' என்பதிலிருந்து தாடியும், (இதற்குத்

'தாழ்வாய்' என்ற வேறொரு பெயரும் பிங்கலந்தையில் தரப்பட்டிருக்கின்றது) 'மீ' (மிசை)யிலிருந்து 'மீசை'யும் பிறந்திருக்க வேண்டுமென நன்கு ஊகிக்கலாம்.

## 13. " கதுவாய் "

" போர்க்குரை இப் புகன்று கழித்தவா
ளுடன்றவர் காப்புடை மதிலழித் தலி
னூனுற மூழ்கி யுருவிழந் தனவே " (புறம். 97 : 1-3)

இதற்குப் பழையவுரை :— "போரைச் செய்தற்குப் புடை பெயர்ந்து உலாவி விரும்பி உறை கழித்த வாள்க டாம், பகைத்தவரது காவலையுடைய அரணையழித்தலால் அவர் தசையின் கண்ணே உறக்குளித்துக் கதுவாய் போய் வடிவிழந்தன" இதில் 'கதுவாய் போய்' என்னுந் தொடருக்கு பதிப்பாசிரியர் 'வடுமிக்கு' என்று குறிப்புரை எழுதியிருக்கின்றனர். புறம் 345-ம் பாடற் கீழே 'கதுவாய்' வடுவெனப் பொருள் கூறி, 347-ம் பாடல் 'கதுவாய் வேல்' என்பதற்கு வடுப்பட்ட வேலென்றும் கூறியுள்ளார். கதுவாயை வடுவென்று பதிப்பாசிரியர் கூற, Tamil Lexicon என்ற தமிழ்ப்புது அகராதியில் 'கது' என்பது 'வடு' அல்லது தழும்பென்றும், 'கதுவாய்' என்பது 'வடுப்படுகை' யென்றும் வரையப்பட்டிருக்கின்றன. பின்னையதற்குத் திவாகர மேற்கோளும் தரப்பட்டிருக் கின்றது. பிங்கலந்தையும் "கதுவாய் வடுப்படுத லாகக் கருதுவர்" என்று கூறுகின்றது. 'கது' என்பதோ 'கதுவாய்' என்பதோ வடுவென அகராதி முதலியவற்றால் ஒரு தலையாகக் கூறமுடியாதிருக்க, இலக்கிய வழக்கை இத் தொடரை யொட்டி நுணுகி ஆராய வேண்டியது பெரிதும் அவசியம்.

வாள் முதலிய ஆயுதங்களின் கூரிய புறத்தை 'வாய்' என்றும் 'முகம்' என்றும் உருவகப் படுத்திக் கூறுவது தமிழ்ப்புலவர்களின் மரபு.

" கூர்வா யிரும்படை நீரின் மிளிர்ப்ப " (புறம். 371 : 10)
" இரும்பு முகஞ் சிதைய நூறி " (புறம். 309 : 1)

இவ்வடிகளில் 'வாய்', 'முகம்' என்னுஞ் சொற்கள் ஆயுதத்தின் கூரிய பக்கத்தைச் சுட்டின. இதனையே கதுவும் வாயென முன்னோர் கொண்டு கதுவாயெனத் தொகுத்துக் கூறினரெனக் கருதலாம். "கது வாய் போகிய" என்னும் தொடரைக் கதுவாய் மழுங்கிய வெனப் பொருள் கொள்ளாது, கதுவாய் = வடு, போகிய = மிக்க வெனப், பதிப்பாசிரியர் பொருள் கொண்டனர். 'போகிய' என்பதனை 'மிக்க' எனக் கொள்வதிலும் 'அற்ற' எனக் கொள்வதே நேரிதாகும். இப் பிரயோகம் பண்டை நூல்களில் பரக்கப் பயின்றுவந்திருப்பதையும் நாம் இங்குக் கவனிக்கவேண்டும். 'மிக்க' என்னும் பொருளில் 'போகிய' வென்னுஞ் சொல் அருகியே வந்துள்ள தென்பதையும் நாம் மறத்தல் கூடாது. கதுவாய் வடு வென்பதற்கு நிகண்டுகளை விடுத்துப் பண்டை இலக்கிய வழக்குளதோ வென நோக்கின் யாண்டுமில்லை.

" கதுவாய் போகிய நுதிவா யெஃகமொடு " (புறம். 353 : 15)

இது, கதுவும் வாய்ப்பக்கம் சிதைந்த நுனி பொருந்திய எஃகம் என்றே பொருள்படும்.

" தூர்ந்த கிடங்கிற் சோர்ந்த ஞாயிற்
சிதைந்த விஞ்சிக் கதுவாய் மூதூர் " (புறம். 350 : 1–2)

இது, தூர்ந்த அகழியும் இடிந்த ஞாயிலும் பொருந்திய சிதைந்த அரணைக் கதுவும் விளிம்பினையுடைய மூதூர் என்று பொருள்படும். வடுப்பொருள் புகுத்த இவ்வடிகள் சிலர்க் கிடந்தரினும் கீழ்வருமடிகளில் அப் பொருளை எங்ஙனம் பொருத்துவரோ அறியோம்.

" கல்சேர் பிருந்த கதுவாய்க் குரம்பை " (அகம். 129 : 6)
" கான யானைக் கதுவாய் வள்ளுகி
ரிரும்பனை யிதக்கையி னொடியு மாங்கண் " (அகம் 365 : 5-6)
" கழிப் பிணிப் பலகையர் கதுவாய் வாளர் " (புறம். 345 : 15)

என்னுமடிகள் வடுப்பொருள் வந்தியையக் காரணமில்லாத சந்தர்ப்பங்களையே குறித்தன. வள்ளுகிர் ஒடிந்து வடுப் படுவதனைப் பின் கூறுவதனால் வடுப்பட்ட வள்ளுகிரென்று முன்றானே அடை கொடுத்துப் புலவர் வருணித்துள்ளா ரெனக் கொள்ளல் பொருத்தமாகுமா? இவ் வடிகளில் வரும் 'கதுவாய்' என்பதற்கும் வடுப் பொருள் புகுத்தத் துணிந்து நிற்பார் தாமும், "கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்" என்ற அடியில் பலகையின் வடுவைச் சுட்டாது வாளின் வடு வொன்றனையே சுட்டிய காரணமென்னையோ வென விளக்கக் கடமைப்பட்டுள்ளார். அன்றியும் இவ்வடி ஒரு கால் போர்க்கு வேண்டிய கோலம் பூண்டதனைக் கூறுவதே யன்றி, போர் பொருத பின்னர் உள்ள நிலையைக் கூறுவதன்று. போர்க்கு ஆயத்தம் ஆவார் வடுப்பட வாள் தாங்கினர் என்று யாரேனும் கூறுவரோ? இவ்வடிகளிலும் கூட வடுப் பொருள் வலிந்து திணிக்கப் பெறலாமெனக் கொள்ளினும் கீழே தரப்படுமடிகள் அப் பொருள்கோண்முறை ஒரு சிறிதும் பொருந்துவதன்றெனக் காட்டும்.

"எறிந்திலை முறிந்த கதுவாய் வேல்" (புறம். 347 : 4)
"களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின்" (பதிற்று. 45 : 4)

இவற்றில் 'முறிந்த வேல்' 'முரிந்த எஃகு' என்புழிப் பிறி தொன்றும் தழுவாது, தானே வடுபட்ட வேல், வடுப்பட்ட எஃகு என வந்தமையால், "கதுவாய்" என்று வரும் இடை மடுத்தலாய விசேடணம் நிகழ்ந்து வடுப்பொருள் வந்தமைந்த தெனக் கோடல் பொருந்தாது. இவ்வடிகளில் 'கதுவாய்' என்ற பதத்தை மாற்றி வடுவென்ற சொல்லைப் பெய்து வரும் பொருட் சிறப்பை நோக்குக.

எறிந்திலை முறிந்த வடுவேல்
களிறெறிந்து முரிந்த வடுவெஃகு

இவ்வடிகளில் எறிந்து முறிந்த, எறிந்து முரிந்த—வாயை யுடைய வேல், எஃகு என்று பொருள் கொள்ள

வேண்டுமே யன்றி எறிந்து முறிந்த வடுவுடைய வேல், எஃகு என்று கூறுவோர், இவையாவும் 'கதுவாய் போகிய' என்னும் தொடரைக் கதுவா யொழிந்தன வென்று நேரிய பொருள் கொள்ளாது, போகிய என்பதனை உருவக வகையான் 'மிக்க' வெனப் பொருள் கொண்டமையால் வந்தனவே யாம். 'கதுவாய் போகிய' என்பதனைக் காரண காரிய சம்பந்தம் பற்றி வடுமிக்க வெனவும் இங்குப் பொருள் கூறலாம். கதுவாய் போய வாளை வடுமிக்க வாளெனக் கூறுவதும் இயல்பே. இதில் நின்றும் மிகுதிப் பொருளைத் தரும் 'போகிய' என்னும் பதத்தை நீக்கச் சேடித்த 'கதுவாய்' என்ற பதம் வடுப்பொருளைத் தர வேண்டுமென முடித்த முடிவே இவ்விபரீதப் பொருள் கோளின் அடிக்கிடந்த உணர்ச்சி. பின் எடுத்துக் கொண்ட இரண்டடிகளிலும் வந்த 'முறிந்த' வென்னும் பெயரெச்சம் 'கதுவாய்' என்ற பெயர் கொண்டு முடிந்தன வென்று கொள்வதே உசிதம். அங்ஙனமாயின் 'கதுவாய் வேல்', 'கதுவாயெஃகு என்பவற்றை இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன் றொக்க வேற்றுமைத் தொகையாயெடுத்துப் பொருள் கொள்ள வேண்டும்.

இங்கே கொண்ட கொள்கையை நிராகரிக்கக் கருதுவார் மனத்துக் 'கதவுவாய்' எங்ஙனம் 'கதுவாய்' என்றாயிற்றென ஓர் ஆசங்கை நிகழலாம். அன்னரது ஆசங்கையைத் தீர்க்க 20-ம் பரிபாடலில் வரும் "கதுவாயவன் கள்வன் கள்வி நானல்லேன்" என்னுமடிக்குப் (82) பரிமேலழகர் எழுதியிருக்கும் உரையொன்றே போதுமென எண்ணுகின்றேன். இத்தொகுதியாரின் மனப்பாங்கையொட்டி வடுப்பட்ட கள்வனெனப் பொருள் கூறுது, "யான் கள்வியல்லேன், அவன் கள்வன், அவனைக் கதுவுவாயாக" என்று உரை வரைந்தனர். இவ்வுரையில் 'கதுவுவாய்' என்பது 'வு' கரங் கெட்டு 'கதுவாய்' என நிற்றலையே நாம் கவனிக்க வேண்டும். ஒரு வினைச் சொற்கண் வரும் இவ்வித வேறுபாடு ஒரு பெயர்ச் சொற்கண் வந்தமையாதெனக் கூறலாமோ? ஏவல் வினையாகிய 'கதுவுவாய்' என்னுஞ்

சொல்லிலும் வினைத்தொகையாய் நிற்கும் 'கதவுவாய்' என்னும் சொல்லிலும் வந்த 'வு' கரக் கேடு இலக்கண வரம்பு கடந்து வந்த எழுத்துக் கேடேயாகும். இவை, ஒலி நூல் கூறும் சில இயற்கை நியதி யநுசரித்தெழுந்தனவாம். இலக்கண நூலிற் காட்டப்பெற்ற புணர்ச்சியால் வரும் 'கெடுதல்' என்னும் விகாரங்களினும் மொழி வளர்ச்சிப் போக்கிலியன்ற விகாரங்களே பன்னூறு மடங்கு அதிக மென்று கூறலாம். அதுபற்றி, 'கதுவுவாய்' என்னும் மொழியிலுற்ற 'வு' கரக் கேடு ஆச்சரியந் தரத்தக்கதன்று. ஒலி நூல் வழி உற்று நோக்குவார்க்கு அதுவோர் சாதாரண நிகழ்ச்சியேயாம்.

(ஏவல்வினை) கதுவு + ஆய் — கதுவ் + ஆய்
— கது + வ் + ஆய்
— கதுவாய்
(வினைத்தொகை) கதுவு + வாய் — கது + வாய்
— கதுவாய்

இப்புணர்ச்சிகளில் வந்த 'வு' கரக் கேடு ஒலியுச்சாரணப் போக்கில் மக்கள் தம் முயற்சியைச் சுருக்கி இலகுப் படுத்த இயற்கையிற் கையாடிய முறையினோர் நிகழ்ச்சியே யாகும். முடிவாக, இலக்கிய நூலாராய்ச்சியானும் ஒலி நூற் சித்தாந்தத் தானும் 'கதுவு வாய்' என்பது 'கதுவாய்' எனத் திரிந்து வரலுளதெனவும் அத் திரிதற்குத் தக்க காரணமுளதெனவும் பெறப்பட்டன.

## 14. "எய்யாதாகின்று"

" பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்த
லெய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே "

(புறம். 148 : 5-7)

இதற்குப் பண்டையுரையாசிரியது உரை :—" பிறர்க்கீயும் பெருமையில்லாத அரசரைப் புகழும் புகழ்ச்சியை விரும்பி அவ்வரசர் செய்யாதனவற்றைச் சொல்லி அவர் குணங்களைக் கூறுதலை அறியாததாயிற்று எம்முடைய சிறிய செவ்விய நா." தொல்காப்பியரது சூத்திரத்தினைப் பின்பற்றி 'எய்யாமை' அறியாமை யெனக் கொண்டு, இவ் வழுவிய வுரை வரைவாராயினர் பண்டையுரையாசிரியர். இவ்வடிகளின் பொருள் நன்கு விளங்க முன்னடிகளையும் இங்குத் தருகின்றேன்.

> " கறங்கு மிசை யருவிய பிறங்கு மலை நள்ளிநின்
> னசைவி ரேன்ற ணசைவள னேத்தி
> நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
> கூடு விளங்கு வியனகர்ப் பரிசின் முற்றளிப்பப்
> பீடின் மன்னர் ... ... ... ..." (புறம். 148 : 1-5)

இதில் வன்பரணர் என்னும் புலவர் அவர் காலத்துச் சிற்றரசர்கள் கொடைத்திறத்தையும் முடியுடை வேந்தர்கள் பரிசிலளியாத் தன்மையையும் வேற்றுமை விளங்குமாறு ஒப்பிடுகின்றனர்; அதனோடு புலவர்கள் சிற்றரசர்களைப் புகழுமிடத்து மெய்யே கூறுதலையும் பேரரசர்களை வாழ்த்துங்கால் பொய்ம்மொழி புனைந்து கூற வேண்டுதலையுஞ் சுட்டி, அப்புலவர்கள் அடையும் வருத்தத்தினையும் வெளியிடுகின்றனர். செய்யுளின் சுருங்கிய கருத்தாவது சிற்றரசர்களின் மெய்ப்புகழை யெடுத்துக் கூறிப் பெரும்பரிசில் பெறுகின்ற புலவர்கள், முடியுடை வேந்தர்பால் பொய்யாகப் புனைந்துரைத்துப் புகழ் பல பாராட்டியும் சிறு பரிசிலேனும் பெருது போகின்றனர் என்பதே. இவ் வேற்றுமையினை வற்புறுத்தும் புலவர் செய்யுளை அப்பொருளெழுவதற்கிடமின்றிச் செய்து முடிக்கின்றது எய்யாமை, அறியாமை என்று தொல்காப்பியர் தந்தபொருள். உண்மையில்,

> " செய்யா கூறிக் கிளத்தல்
> எய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே "

என்னுமடிகளின் பொருள், எமது சிறிய செவ்விய நாவால் (முடிவேந்தர்கள்) செய்யாதனவற்றையெல்லாம் செய்தனவாக எடுத்துக் கூறுந்தொழில் அளவிட்டு முடித்தற் கரிதாயிருக்கின்றது என்பது தான். நாவிற்கு தந்த இரண்டு அடைமொழிகளின் பொருளுசிதத்தையும் இங்கே கவனிக்க வேண்டும். செவ்விய நாவாதலினல் பொய்யுரைக்கக் கூசுகின்றதென்றும், சிறு நாவாதலினல் அளவிடற்கரிய பொய்யுரைத்தலிற் றளர்வடைகின்றதென்றும், புலவர் சூசிப்பித்தனர். பண்டையுரையாசிரியர் இம் முறையிற் பொருள் தராது நள்ளி அளித்த பரிசிலையும் வேந்தரைப் புகழாது போயினமையையும் காரண காரிய சம்பந்தத்திலிசைத்துப் பொருள் கூறி விட்டனர். நள்ளியின் பரிசிலால் புலவர்கள் வேந்தர்களைப் புகழாது போயின ரெனின், அப் பரிசில் பெருதிருப்பரேல் வேந்தர்களைப் பொய்யாகவுங் கூடப் புகழத் தலைப்படுவர் புலவர் என்பது போதரும். அங்ஙனமாயின், புலவர் நாவிற்குத் தந்த 'சிறுமை' 'செம்மை' யென்னுமிரு அடை மொழிகளும் பயனில்லா வீண் விசேஷண பதங்களாய் முடியுமன்ரே? நள்ளிபாற் பெற்ற பரிசிலால் வேந்தரைப் புகழாது போயினர் புலவர் என்று வருதலேயன்றி அவர் தமது செம்மை யுணர்ச்சியாற் பொய் கூருது நிறுத்தினரென்று கருத இடமில்லா தாகின்றது.

பண்டைப் புலவர் செய்யுளின் உண்மைப் பொருள் விளங்காமைக்கு எய்யாமை, அறியாமையென்ற தப்புரையே காரணமாகும். எய்யாமையென்ற சொல்லைக் குறித்துத் **தொல்காப்பிய உரிச்சொல்லாராய்ச்சி** என்னும் நூலில்- விரிவாக வெடுத்துக் கூறுவதனல் இங்கே அதன் பொருளை மட்டும் இவ்வாறு சுட்டி நிறுத்துகின்றேன்.

## 15. " நள் "

'' நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணி ''

(புறம். 149 : 1-2)

'நள் ளென் மாலை' யென்பதற்கு 'நள்ளென்னும் ஓசையையுடைய மாலை' என்று பொருள் வரைந்திருக்கின்றனர் பண்டையுரையாசிரியர்.

"தடவும் கயவும் நளியும் பெருமை." (உரி. 23)
"நளியென் கிளவி செறிவு மாகும்." (உரி. 25)

என்று சூத்திரமியற்றினர் தொல்காப்பியர். ஆயின், இருவர் தந்த பொருளும் நள், நளியென்னுஞ் சொற்கட்குப் பண்டைப் புலவர் கொண்டிருந்த கருத்தோடு முரண்படுகின்றது. பண்டைப் புலவர் வழக்கில் நள், நளி, நளிர் என்ற சொற்கள் 'இருள்' என்ற பொருள் தரலை எளிதின் உணரலாம். இவை ஒள், ஒளி, ஒளிர் என்பவற்றின் நேராய எதிரிடைச் சொற்கள். இருட்டுப் பொருளை நள், நளி, நளிர் தருமென்பதற்குக் கீழே தரப்படும் உதாரணங்களே தக்க சான்ரும்.

"நள்ளிரும் பொய்கையுந் தீயுமோரற்றே." (புறம். 246 : 15)
"கடன்மீன் றுஞ்சு நள்ளென் யாமத்து." (அகம். 142 : 20)
"நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே." (குறு. 163 : 5)
"நளியிரு முந்நீர்." (புறம். 66 : 1)
"நளிகட லிருங்குட்டத்து" (புறம். 26 : 1)
"நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பில்.(அகம். 242 : 18)

இவற்றுள் 1, 4, உதாரணங்களினல் வெளியாமுண்மை ஒன்றுளது ; அதாவது ஒரு கருத்தினை வலியுறுத்துவதற்கு அக் கருத்தினையே தரும் இரண்டு பதங்களை ஒன்றுபடப் புணர்த்தும் பண்டைப் புலவரது முறை. 'நள்ளிரும்', 'நளியிரும்' என்ற தொடர்களில் வந்துள்ள மூன்று பதங்களும் இருட்டுப் பொருளையே தந்தன. இவ்வித ஒரு பொருளிருமொழி புணர்த்துவதனல் இருண்ட தன்மையின் மிகுதியைக் குறித்தனர் பண்டைப் புலவர் என்பது வெளிப்படை. சங்கச் செய்யுட்களில் இம்முறை பரக்கக் கையாடப் பெற்றதெனக் கீழ் வரும் ஒரு பொருட் பன்மொழித் தொடர்கள் காட்டும்;

" தோல் பெயரிய எறுழ் முன்பு " (புறம். 7 : 6)
" வீழிகு பெயல் " (சிறு. 13)
" ஏந்து குவவு மொய்ம்பின் " (அகம். 222 : 6)
" சுரிவண ரைம்பால் " (அகம். 223 : 12)
" நெடுஞ்சேணிடை " (அகம். 3 : 18)
" வால்வெள் ளெயிறு " (குறுந். 169 : 3)
" நெடு நிமிர் தெருவில் " (நற். 50 : 4)

சில இடங்களில் மூன்று சொற்களைப் புணர்த்தியுமுள்ளார்.

" உரு முர றதிர் குர றலைஇ " (அகம். 278 : 5)
" விண்ணதி ரிமிழிசை " (மலை. 2)

இவ்வொரு பொருளைத் தரும் பல சொல் புணர்த்தும் முறையைத் தழுவி 'நள்ளிரும்', 'நளியிரும்' என்னுந் தொடர்களைப் பொருள் விளக்க வேண்டும். தொல்காப்பியர் தந்த இரு பொருளும் பிற் காலத்தனவேயாம்; அவை, பண்டைச் செய்யுட்குப் பொருந்துவனவல்ல. " நளிமுகை யுடைந்த நறுங்கா ரடுக்கத்து " (அக. 238 : 15) என்னுமடியை விளக்கத் தொல்காப்பியர் தந்த இரு பொருளும் பயன்படா. அடுக்கத்தின் இருளை வருணிக்கப் புகுந்த புலவர் அதனை முகை விரியலா மலரோடு இங்கு ஒப்பிட்டனர்.

நள், நளி, நளிர் என்னும் பதங்கள் முதன் முதல் 'இருள்' என்றபொருளைத் தந்து நின்றதெனத் தாபித்தற்கு இதர திரவிட பாஷைகளைத் துருவி நோக்கின், தெலுங்கில் இன்னும் இப்பொருளில் இப்பதம் நின்று நிலவுகின்றதனை யறிந்து கொள்ளலாம். ஆயின், அம் மொழியில் லகர ளகர வேற்றுமை பிறழ்ச்சியுற்றுப் போயினமையால், நள், 'நல்' லென்ற ரூபத்தில் நிலவிக் கருமை பொருளைத் தருகின்றது. நல்ல மானு (Black Wood), நல்லமந்து (Opium), நல்லபூச (Black-Beads), நல்ல தனமு (Blackness), நல்லஞ்சிகாடு (Black-Bird), முதலிய சொற்களை நோக்குக இதனல் நள்ளென்னும் பதத்தின் இருள், இருமை, கருமையென்னும் பொருள் எத்துணைப் பழமை வாய்ந்துள்ளதென எளிதின் நிச்சயிக்கலாம்.

நள், நளி, நளிர் என்பன ஆதிகாலத்துப் புலவர் வழக்கில் அவை பொருள் வேற்றுமையைச் சுட்டிலவென்று கீழே தரப்படும் அடிகள் நன்கு காட்டும்.

" **நள்**ளிரும் பொய்கை " (புறம். 246 : 15)
" **நளி**யிரு முந்நீர் " (புறம் 66 : 1)
" **நளி** முகையுடைந்த " (அகம். 238 : 15)
" **நளிர்** முகைச் சிலம்பில் " (அகம். 242 : 18)

இவற்றுள் கடைசியடியை அகம் 238-ல் வரும் 'இருண் முகைச் சிலம்பு' (4) என்னும் தொடரையொட்டிப் பொருள் செய்து கொள்ளவேண்டும். இவற்றையெல்லாம் **தொல் காப்பிய உரிச்சொல்லாராய்ச்சி** யென்னும் வியாசத்தில் விரித்துக் **கூறுவதனுல்** அங்கே இச்சொல்லின் பொருள் விளக்கத்தைக் கண்டு கொள்ளலாம்.

## 16. " தா "

" தன் மலைப் பிறந்த தாவினன் பொன் " (புறம். 152 : 28)

'தாவினன் பொன்' என்பதற்கு வலியில்லாத நல்ல பொன்னென்று பொருள் கூறினர் பண்டை யுரையாசிரியர். அகம் 37-ல் வரும் 'பொங்கழி முகந்த தாவி னுண்டுகள்' என்னுமடியில் (3) 'தாவினுண்டுகள்' என்பதற்கும் வலி யில்லாத கூளம் என்று உரை வரையப்பட்டிருக்கின்றது. மாறுபட்ட இரு வேறு பொருளாம் 'கூளம், 'பொன்' என்பன வற்றை ஒரு பொருள் கருதியே 'தாவில்' என்ற அடை மொழிப் பெய்தனர் பண்டைப்புலவர் என்பது இசையாது.

'தா' என்ற உரிச் சொல்லுக்குத் தொல்காப்பியர் கூறி யிருக்கும் 'வலி', 'வருத்தம்' என்ற இரு பொருளையுங் கொண்டு 'தா' வருமிடங்களிலெல்லாம் உசிதம் கருதாமற் பொருத்தி விடுவதனுலேயே இவ்வித இடர்ப்பாடுகள் நிகழ்கின்றன. இங்கே 'தா' என்னும் உரிச் சொல்லின்

உற்பத்தியைச் சிறிது ஊன்றியாராயின் அது இருவேறு வினைப்பகுதிகளினின்றும் பிறந்து, இரு வேறு பொருட்டொகுதிகளைக் குறித்து நிற்கக் காணலாம். தா அல்லது தாவு (to jump) என்பது ஒரு வினைப்பகுதி. இதினின்று உதித்த 'தா', பரத்தல், வலி முதலிய பல பொருட்களைத் தந்தது. தவ் அல்லது தப் (to destray) என்பது வேறோர் வினைப்பகுதி. இதினின்று உதித்த 'தா' கேடு, குறைவு, நீக்கம், தவறுதல், வருத்தம் முதலிய பல பொருட்களையு முதவினது. இவ் விருவிதப் பிறப்பு வேற்றுமையும் உணர்ந்தாலன்றித் 'தா' என்ற சொல்லின் நேர் பொருளைத் தரவியலாது. முற் காட்டிய பொருள்களில் வலியில்லாத கூளம் என்பது பொருந்தும்; ஆயின் தாவினன் பொன் என்பதற்குக் கேடில்லாத நல்ல பொன்னென்றுதான் பொருள் கூற வேண்டும். கீழே தரப்படும் உதாரணங்கள் இங்கே காட்டிய வேற்றுமையினை இனிது விளக்கும்:

**தாவு என்ற வினைப் பகுதி**

"கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றென" (குறு. 69 : 1)
"தவ்வென் றசை இத் தாதுளி மறைப்ப" (நெடு. 185)
"தாதவி ழலரி தாசினை பிளந்து" (குறிஞ்சி. 149)

**தவ் என்ற வினைப் பகுதி**

"தாவற விளங்கிய ஆய்பொன்" (மது. 445)
"தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்" (திரு. 89)
"தாவின்று கழிகவெற் கொள்ளாக் கூற்றே" (நற். 271 : 12)
"பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு" (புறம். 373 : 35-36)

## 17. "யாண்"

"... ... ... சேட்டிருங்கோவே
யாண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
வொலியற் கண்ணிப் புலிகடி மாஅல்" (புறம். 201 : 13-15)

கபிலரது செய்யுளில் வரும் இவ்வடிகட்குப் பண்டை யுரையாசிரியர் கூறிய பொருள் :—"பெரிய இருங்கோவே நீ தான் ஆண்டன்மையைக் கடப்பாடாக உடைமையாற் பாணர்க்குச் செய்யக்கடவ முறைமையை யுதவிய ழைத்த கண்ணியை யுடைய புலி கடிமாலே".

பாணர்க்குப் பொருளளித்து உதவிபுரிவதற்கு ஆண்டன் மையினால் வருங் கடப்பாடியாது? இது பொருத்த மில்லா வுரையன்றோ? தொல்காப்பிய அளவு கோலைக் கொண்டே பண்டைப் புலவர் செய்யுட்களை யளந்து மதித் தமையால் வந்த தடுமாற்றமே இது. தொல்காப்பியர் தமது நூலுரிச்சொல்லியலில், யாண், வனப்பென்றும், யாணர், புதிதுபடல் என்றும் வரையறுத்து முடித்துவிட்டனர். மேற்காட்டிய வடிகளில் வரும் சொல்லை 'ஆண்' – எனக் கொள்ளாது 'யாண்' எனக் கொள்ளின் வனப்புப் பொருள் பாண் கடனாற்ற லோடிசையாது. அது பற்றியே 'யாண்' என்பதனை 'ஆண்' எனக் கொண்டு இவ்வுரை வரையலாயிற் றென்று ஊகிக்கலாம். ஆயின் பண்டைப் புலவர் வழக்கில் யாண், யாணர் என்னுஞ் சொற்கள் ஒரு பேதமின்றி விளையுள், செல்வம் என்ற பொருளைத் தந்து, பின்னர்ப் புது வருவாயினைச் சுட்டிப் புதுமைப் பொருளளித்துக், கடைசி யாக வனப்புப் பொருளைக் குறிக்கவந்தன. வனப்பு என்ற பொருளில். இச் சொற்களைப் பண்டைப் புலவர் பிரயோகிக்கவே இல்லை. அப்பொருள் பிற்காலத் தெழுந்ததே யாகும். 'யாணர்' என்ற பதம் போல 'யாண்' என்ற பதமும் இயற்கையாலாய விளையுளைச் சுட்டிச் 'செல்வம்' என்ற பொருளை ஆதியிற்றந்து நின்றது. இப் பொருளைப் பெய்து கபிலரது அடிகளை விளக்கின் மிக்க பொருத்தமாய பொருள் வந்தமைவதைக் காணலாம். 'யாண் கடனுடைமையிற் பாண் கடனாற்றிய' என்ற தொட ருக்குச் செல்வமுடையார்பால் நிகழுங் கடப்பாட்டினாற் பாணர்கட்குச் செய்யவேண்டிய உதவிகளைச் செய்து முடித்த' வெனப் பொருள் கொள்ள வேண்டும். பாணர்க்கு

உதவி புரிதல் செல்வவான்களின் கடப்பாடாதலினற் புலவர் அதனை யெடுத்து வற்புறுத்தினர். உதவி புரிதற்கும் ஆண்டன்மைக்கும் பொருத்தமுளதென யாரே கூறுவர்?

## 18. "இடுக"

" இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய் யோன்றலையே"
(புறம். 239 : 20-21)

இதற்குப் பண்டையுரையாசிரியர் கூறுவது:—" இப் புகழை விரும்புவோனது தலையை வாளான் அறுத்துப் போகடினும் போகடுக; அன்றிச் சுடினும் சுடுக; பட்டபடி படுக" என்பதே. இது நம்பி நெடுஞ்செழியன் என்னும் பாண்டியர் படைத்தலைவன் ஒருவனைக் குறித்துப் பேரெயின் முறுவலார் பாடிய பாட்டில் வருவது. 'இடுக' என்பதற்கு 'அறுத்துப் போகடுக' என்ற பொருள் எங்ஙனம் வந்ததோ? நம்பி நெடுஞ்செழியன் இறந்தபின் அவனைப் புதைப்பதோ, சுடுவதோ வென்ற ஓர் தர்க்கம் நிகழ்ந்துழி, அச்சந்தர்ப்பத்திற் கூறிய கூற்றாக இச் செய்யுள் இயற்றப் பட்டிருப்பது வெளியாம். இரு கட்சியாருடைய கொள்கை யினாலும் பல புகழையுந் தேடித் தன் பெயரை நிலைநிறுத்திய அப் பெரியோனுடைய வாழ்க்கைப் பயன் அழிவுறாதெனப் புலவர் ஈங்கே வற்புறுத்துகின்றனர். 'இடுக' என்பது 'போகடுக' என்ற சாதாரணப் பொருளைத் தருமேயாயினும், 'சுடுக' வென்ற சொல்லோடு தொடர்புற்று வந்தமையால், ஈண்டு அது புதைத்தலைக் குறித்ததெனக் கொள்ளலே நேர்மை * இம் மாதிரிச் சங்கேதப் பொருள் தரும் பதங்களை உலக வழக்கை மறந்து பொதுமையான பொருள் பயக்கத்தக்கவாறு திரித்து உரைவரைவது இலக்கியப் பொருள்கோளிற் பெரிதும் இடர்ப்பாடு தரும்.

* "இடுகாட்டுள் ஏற்றைப் பனை" (நாலடி. 96) எனப் பிணம் புதைக்குமிடம் 'இடுகாடு' என வழங்கப் படுதல் கவனிக்கத் தகும். பிணம் புதைக்குமிடத்தை இப் பெயரால் நாஞ்சில் நாட்டில் இன்றும் வழங்குவர்.

# 19. "தடம்"

"வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்"
(புறம். 241 : 3)

"தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்
வளைக்கை விறலி" (புறம். 135 : 3-4)

இவ்வடிகளில் வரும் 'தடம்' என்பதற்குத் தொல் காப்பியரது சூத்திரத்திற் றந்த 'பெருமை', 'கோட்டம்' என்னும் இரு பொருள்களையுங் கூறி, மெய்ப்பொருள் தராது போயினர் பண்டையுரையாசிரியர். தொல்காப்பியர் தந்த 'பெருமை' என்ற பொருள் அதன் பொதுத் தன்மை யால் விளக்கமுறாது பல பொருளையுஞ் சுட்டத்தக்கதாயிருக் கின்றது. அவர் பிறிதோர் உரிச் சொற் சூத்திரத்திற் கூறும் 'பெருப்பம்' என்றே இதனையுங் கொண்டு பௌதிகப் பொருள்களின் பருமனைப் 'பெருமை' குறித்த தென நாம் ஒருவாறு எண்ணினும், எவ்விதப் பருமனை அது குறித்ததெனக் கூற வழியின்றித் திகைக்க வேண்டிய தாகவே முடிகின்றது. ஒரு பொருளின் நீளம், வீதி, உயரம் என்பவற்றுள் எதனைத் 'தடம்' சுட்டிற்று? அன்றி இவையெல்லாந் திரண்டதாலாய ஒரு பருமனைச் சுட்டிற்ரு? இவ்வினைக்கட்குத் தெள்ளிய விடை தராது 'தடம்', 'பெருமை'யென வாளாகூறி நிறுத்துவது இலக்கியப் பொருள்கோண்முறை இழுக்கிவிட்டதென்றே காட்டும். பிற் காலப் புலவர் வழக்கில் 'தடம்' என்ற சொல் எத்துணைப் பொருள் வரையறையற்றுப் பொதுமையுற்று விளக்கமிழந்து போயினும், பண்டைப் புலவர் வழக்கில் அது நீட்சிப் பொருளையே தந்ததெனத் திட்டமாகக் கூறலாம். அதிலும் ஆதியில் தாழ்ந்து நீடலையே 'தடம்'குறித்ததெனப் பண்டைச் செய்யுட்கள் தெளிவு பெறக் காட்டுகின்றன. "தாடோய் தடக்கை" யென்னின் முழந்தாளளவு தாழ்வுற நீண்ட கையென்றே பொருள் தரும். கீழ் நோக்கிய நீட்சியிலிருந்து பின்னர் எல்லாவித நீட்சியையும்; அதன் பின்னர் நீட்சியைக் குறியாது தானே பரப்பினையுஞ் சுட்டி, அச் சொல்லின்

பொருள் மாறுதலடைந்து போயிற்று. பண்டைப் புலவர் செய்யுட்களையும் பிற்காலப் புலவர் செய்யுட்களையும் ஒத்து நோக்கிச் செய்யும் சரித்திர ரீதி தழுவிய ஆராய்ச்சி யால் வெளிப்படும் உண்மையே இது. ‘தடவு நிலைப் பெண்ணை’, ‘தடங் கோட்டாமா’ என்னுந் தொடர்களில் வரும் தடவு, தடம் என்ற சொற்கட்கு நீண்ட வென்ற பொருளே கொள்ள வேண்டும். ‘தடம்’ என்ற சொல் தானே எவ்வாறு உற்பத்தியாயிற்றென நான் இப் பொழுது எழுதிவரும் “**தொல்காப்பிய உரிச்சொல் லாராய்ச்சி**” என்ற நூலில் விளக்குவதனல் அதனை இங்கே விரித்தலாவசியமின்று. ‘தடவரல்’ என்ற சொல்லின் பொருளுரையில் உடல் வளைவைக் கொண்டு புகுத்தியிருக் கின்றனர் பண்டையுரையாசிரியர். அது எத்துணைப் பொருந்து மென்றுராய்ந்தறிய முன்னடிகளையும் இங்கே தருகின்றேன்.

> “கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை
> யருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித்
> தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்
> வளைக்கை விறலி.” (புறம். 135 : 1-4)

இதற்குப் பண்டையுரையாசிரியர் தந்த உரை :—

“புலியியங்கும் சிகரமுயர்ந்த நெடிய மலையின்கண் ஏறுதற்கரிய பிளப்பின்கட் சிறு வழியை யேறுதலான் வருத்தமுற்று உடல் வளைவைப் பொருந்திய பயில அடியிட்டு நடக்கின்ற மெல்லிய நடையினையுடைய வளையை யணிந்த கையையுடைய விறலி.”

பண்டையிலக்கிய உரையாசிரியர்களின் முதலணி நெற்றியில் நிற்கத் தக்க கூரிய அறிவும் சீரிய திறமையும் வாய்ந்த இவ்வுரையாசிரியரே இழுக்கினமை தொல்காப் பியர் சூத்திரத்தினை இப் பண்டைச் செய்யுளுரையிற் பொருத்தினமையால் நேரிட்டதேயாம். அன்றோ ‘பயில அடியிட்டு நடக்கும்’ என்ற மெய்ப் பொருளைத் தந்து, அதனைத் தொல்காப்பியரது சூத்திரப் பொருளோடு

பொருத்த உடல் வளேவையும் கொண்டு வந்து நுழைத்து, ஒருவாறு சரிப்படுத்த நோக்கினர். ஆயினும் கோட்டப் பொருள் இவ்வடிகளிற் பொருந்து மாறில்லே. தடவரல் என்பது நீடித்துவரல், காலம் நீடித்து வரல், தாழ்த்து வரல், என்ற பொருளேத் தருவதாம். இதுவே இத் தொடரின் பண்டைக்காலப் பொருள்; பிற்காலத்தில் 'தடவி வரல்' என்ற பொருள்படுமாறு மாறுதலடைந்து போயிற்று. 'தடம்' நீட்சிப் பொருளேத் தரும் பதமெனப் பிற் காலத்தார் அறியாது போயினமையே இவ்வித விபரீதப் பொருள் வந்தேறக் காரணமாயமைந்தது. புறம் 241-ல் வரும் "வச்சிரத் தடக்கை" என்ற தொடருக்கு "வச்சி ராயுதத்தையுடைய விசாலமாகிய கை"யெனப் பண்டை யுரையாசிரியர் பொருள் கூறியது பொருத்தமில்லுரை யெனத் தள்ளாதிருக்க இடமில்லே; நீண்ட கையென்றே பொருள் தந்திருக்க வேண்டும். இதுவும் தொல்காப்பியர் 'தடம்' என்ற பதத்திற்குப் 'பெருமை' என்ற விளக்கமுருத வோர் பொருள் வகுத்தமையால் வந்த தவறுதலே யாகும்.

## 20. "உரை"

"... ... ... ... பல்லா
னிரையொடு வந்த வுரையனுகி" (புறம். 260 : 18-19)

இதற்குப் 'பலவாகிய ஆனிரையுடனே வந்த சொல்லே யுடையனுய்' என்று பொருள் கூறியிருக்கின்றனர். 'உரை' சொல்லேக் குறித்துப் பின் அச் சொல்லால் வரும் புகழையுங் குறிப்பதாய ஓர் பதம். இங்கே 'உரை' புகழைச் சுட்டியதேயன்றிக் கேவலம் 'சொல்' என்ற பொருளே மாத்திரம் தரவில்லே. புறம்.71-ல் வரும், 'உரைசா வந்துவஞ் சாத்தனு மாதனழிசியும்' என்ற தொடரில் (12-13) 'உரை' புகழ்ப் பொருளே எங்ஙனந் தந்ததோ அங்ஙனமே ஈண்டும் தந்ததெனக் கொள்ளவேண்டும்.

# 21. "பாறு"

" பாறு மயிர்க் குடுமி யெண்ணெய் நீவி " (புறம். 279-9)

இங்கே 'பாறு மயிர்' என்பதை 'விரிந்த மயி'ரெனப் பொருள் கூறி, புறம். 377 : 2 "பாறு தலை மயிர் நனைய" என்னுமடியில் வரும் 'பாறு மயிர்' என்பது 'பரந்து மேனோக்கிய மயிர்' எனவுங் கொண்டனர் பதிப்பாசிரியர். இரண்டாவது பொருளில் விரிந்த அல்லது பரந்த வென்ற பொருளோடு மேனோக்கும் பண்பும் இசைக்கப்பட்டிருக்கின்றது. ஆயின், 'பாறு' வென்ற சொல்லின் பொருளில் பதிப்பாசிரியர் கூறியிருக்கும் கருத்துக்களொன்றேனும் சுட்டப்படவில்லை. கட்டப்பட்டுக் கீழ் நோக்கிய மயிரானல் (மயிரின் மேனோக்கும் கீழ் நோக்கும் விசேடமாய பண்புகளே) 'பாறு மயிர்' என்று கூறல் ஒவ்வாதோ? பாறு மயிர், பாறு பயிர், பாறு மரம், முதலிய அனைத்திற்கும் பொருந்தப் 'பாறு' என்ற மொழிக்குப் பொருள் கூறுவதே தகுதி. அங்ஙனமாயின், 'பாறு மயிர்' என்னுந் தொடரை தழைத்தலற்றுப் பொலிவழிந்த மயிர் எனப் பொருள்படுத்தவேண்டும். வளர்ச்சிவளன் குன்றிக் கேடுறும் நிலைக்கே 'பாறுதல்' என்று பெயர். இம் மொழி உலக வழக்கில் இன்றும் நின்று நிலவுகின்றது.

" பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின் " (புறம். 359 : 1)
" பாறுதலை யோமை " (அகம். 21 : 15)
" பண்டைத் தொல்வினை பாறுக வென்றே "
(சிலப். நாடுகாண்காதை 164)

எனவரும் அடிகளையும் ஒப்பிட்டு நோக்குக. இவற்றில் பதிப்பாசிரியர் தந்த பொருளைப் பெய்து வரும் பொருத்தக் கேட்டை நோக்குக.

பாழ்பட்ட இடமாகிய பறந்தலை, புல் முதலியன தழைத லில்லாப் பாறை, பார் (ஒரு வகை நிலம்), பாறுதல் இவை யெல்லாம் ஒரு பகுதியடியில் நின்றும் கிளைத்த சொற்களே யென்று ஊகிக்கலாம்.

## 22. "குரால்"

" அஞ்சு வரு குராஅற் குரலுந் தூற்றும் " (புறம். 280 : 5)

" குழிகொள் சின்னீர் குராஅ லுண்டலிற்
சேறு கிளைத் திட்ட " (புறம். 325 : 3-4)

முன்னடியில் வரும் குரால் என்பதற்குக், "கூகைப் பெடை ; கோட்டானுமாம்" என்று பொருள் கூறி, பின்னை யதில் வரும் குரால், "ஒருவகைப்பசு ; கோட்டானுமாம்" என்று கொண்டனர். "மரம்பயில் கூகையைக் கோட்டா னென்றலும்" என்ற தொல்காப்பிய மரபியற் சூத்திரத்திற் கூறுவது போலக் கூகையே கோட்டானெனவும் வழங்கப் படுமாதலான், கூகைப் பெடையென்று பொருள் கூறிய தன் பின்னர்க் கோட்டானுமாம் என்று மிகுத்துரைத்ததின் காரணம் யாதோ? இரண்டாவது செய்யுளில் 'கோட்டான்' என்பது பொருத்தமில்லாத பொருளே. குரால் என்னுஞ் சொல்லுக்கு கூகைப் பெடை, பசு எனப் பொருள் பதிப் பாசிரியர் தந்தமையால், அது விலங்கு பறவை முதலிய வற்றிற் சிலவினங்களின் பெண்ணைக் குறிக்குஞ் சொல்லென மயங்கிவிட்டனரோ வென்றையுறலாம். அவ்வாறு பெண் ணினத்தைக் குரால் சுட்டவில்லை யென்பது பிங்கலந்தைச் சூத்திரத்தினலும் முல்லைக் கலியடியாலும் வெளியாம்.

" கூகை குடிஞை குராஅல் கௌசிகம்
ஊமனி சாசரி யுலுகங் கோட்டான்." (பிங்கலந்தை)

இதனல் குரால் கூகைப் பெடையைச் சுட்டாது கூகைக்குப் பொதுமையில் அமைந்ததோர் பெயரென விளங்கும்.

" முக்கண்ண னுருவே போல் முரண் மிகு குராலும் "
(முல்லைக் கலி. 4 : 12)

இங்கே 'குரால்' குராற்பசுவைக் குறியாது குராலேற் றைக் குறித்தது. குராலின் தாதுப்பொருள் நோக்கி இங்கே பொருள் கொள்வதே நலம். பறவையினைக் குறிப்பினும் அன்றி விலங்கினைக் குறிப்பினும் பால் வகை சுட்டாது,

நிறவகையைச் சுட்டுவதே குரால் எனக் கொள்ளின் உண்மையோ டொட்டிய பொருள் தருவதாகும். “கபிலங் குரால் புகர் புற்கெனு நிறமே” என்று பிங்கலத்தினும், “பூசிய குரால்புற் கென்றல் புகர்கபி லமுமா மென்ப” என்று சூடாமணியிலும் குரால்நிறத்தைப் புகர் நிறமெனக் கொண்டமை காண்க. இப்பொழுது ‘புகர்’ என்பது ‘போர்’ என உலக வழக்கில் மயங்கி வரலாயிற்று. இது துய்ய வெண்மையிற் றீர்ந்த ஒரு நிற வகையைக் குறிக்கும். இதனையே ‘புல்லை’ யென்றும் வழங்குவர். ‘புல்லை’ ‘புல்’ என்னும் பண்படியில் நின்றுதித்தது போன்றே ‘குரால்’ ஒளி அல்லது நிறப்பொருள் தரும் ‘குரு’ வென்ற பண் படியில் நின்றும் பிறந்த தென ஊகிக்கலாம். “குருவுங் கெழுவு நிறனு கும்மே” என்பது தொல்காப்பியம். இப்பகுதி யடியாகப் பிறந்த பெயர்களே குருகு (பறவை), குரு (மண்), குருத்து, குருந்து, குருடு, குருளை முதலியன. ஒளி மழுக் கத்தை குருடு, குருகு, குரால், என்பன பலவிதத்திற் காட்டின. ‘குருளை’ என்னும் விலங்கின் பிள்ளை மரபைச் சுட்டும் பதம், புலி, முயல், பன்றி, நாய், நரி முதலிய சிலவற்றின் குட்டிகளுக்கே உரித்தான பெயர். இப் பலவித விலங்கின் தொகுதியில் குட்டிகளெல்லாம் பிறந்து சில நாள் வரை கண் திறவாமற் குருடாய் இருப்பது பற்றியே ‘குருளை’ என்ற பெயர் அக்குட்டிகளுக்கு வழங்கப் பெற்றதென அறிய வேண்டும்.

> “ புன்புற மயிரும் பூவாக் கட்புலம் புறத்து நாரு
> வன்பறழ் வாயிற் கவ்வி வல்லிய மிரிந்த மாதோ ”

என்னும் கம்பரின் இயற்கை தழுவிய வருணனை தானும் இங்கு ஊன்றி நோக்கத் தக்கது. இதனால் குருளை, குருடு முதலிய சொற்கள் கண்ணின் ஒளி மழுக்கத்தைக் குறித்தன வென்பது வெளிப்படை. குறு—மையில் நின்றும் உதித்த சொல் குருளை எனக் கொண்டது Tamil Lexicon என்ற அகராதி. அது பொருத்தமில்லாச் சொல் வரலாறே.

குரால் என்ற சொல்லின் பிறப்பு நோக்கிக் கண்ட பொருள் இங்ஙனமிருக்க, அது கூகைப் பெடையையும் பசுவையுங் குறியாதோ வெனின், சில சந்தர்ப்பங்களிற் குறிக்கலாம். இங்கெடுத்துக் கொண்ட செய்யுளடிகளில் முதலடியில் வரும் குராலைக் கூகையென்றாலே போதும்; பின்னைய அடியிற் குரால் நிறவேறு குறிக்கப்பட்டதெனக் கொள்வது தகுதி. குரால் நீருண்டலினால் சேறு கிளைத்திடப் பெற்றதெனக் கூறியிருத்தலிற் பசுவென்று கொள்ளாது ஏறெனக் கொள்வது உசிதமாயிருக்கும். அன்றிப் பசுவெனக் கொள்ளினும் குரால் நிறப்பசு வென்னாது "ஓர்வகைப்பசு" வெனக் கூறவந்த காரணம் புலப்படவில்லை.

## 23. "புரவு"

"கன்றுடை மரையாத் துஞ்சுஞ் சீறூர்க்
கோளிவண் வேண்டேம் புரவே." (புறம். 297 : 4-5)

"நெல்லரி தொழுவர் கூர்வாண் மருங்கிற்
பின்னை மறத்தோ டரியக் கல்செத்
தள்ளல் யாமைக் கூன் புறத் துரிஞ்சு
நெல்லமல் புரவி னிலங்கை கிழவோன்." (புறம். 379 : 3-6)

இவற்றுள் முன் செய்யுளில் வரும் புரவுக்கு 'இறையிலி நில' மென்றும், பின்னையதிற்றோன்றும் அதே மொழிக்கு 'விளைநில' மென்றும் பொருள் கூறியுள்ளார். இரண்டும் வழுவிய உரையே. விளைநிலம் எனின் ஒரு வயலையும் குறிக்கும்; ஆயின் ஒரு வயலைப் புரவென்று கூறுதல் பொருந்துமோ? விளைநிலப்பரப்பு அல்லது தொகுதி என்பதே புரவென்ற சொல்லின் பொருள். அப்பொருளில் இறையிலித் தன்மை வந்து சேர்தற்கும் யாண்டும் ஆதார மில்லை யென்றே சொல்லலாம்.

"புரவு தொடுத் துண்குவை யாயினும்" (புறம். 260 : 9)

என்னுமடிக்குப் பண்டையுரையாசிரியர், "நமக்கு விட்ட விளைநிலங்களைக் கைப்பற்றி உண்பாயாயினும்" எனப்

பொருள் கூறினமையே " இறையிலி நிலம் " என்னும் பொருள் மிகுத்துரை வரைவதே என நாட்டும்.

" புரவுக் கடன் பூண்ட வண்மையானே " (புறம். 149 : 5)
" பலர் புரவெதிர்ந்த வறத்துறை நின்னே " (புறம். 175 . 10)

இவ்வடிகளில் புரவு, ஓம்புதல், காத்தல் என்னும் பொருளைத் தந்தது. ஓம்புதற்காக அரசற்கு இறுக்கும் இறையையும் இம் மொழி பின் குறிக்கலாயிற்று.

" குடிபுர விரக்குங் கூரி லாண்மை " (புறம். 75 : 4)
" இடுக திறையே புரவெதிர்ந் தோர்க் கென "
(பதிற்று. 80 : 10)

இவ்வடியில் புரவு, கொடையென்ற பொருளையும் பயந்தது. இவற்றோடு ஓம்பத் தக்க விளைநிலப் பரப்பிற்கும் புரவு ஒரு பெயராய் அமைந்தது. விளை நிலத் தொகுதியைக் குறிக்கும் புரவென்ற சொல்லின் பிரயோகம் தென் திருவிதாங் கோட்டைச் சேர்ந்த நாஞ்சிநாட்டில் இன்றும் நின்று நிலவுகின்றது.* இச் சாதாரண மொழிக்கு " இறையிலி நிலம் " என்ற விபரீதப் பொருள் ஏன் புணர்த்த வேண்டும்?

ஓம்புதல் என்னும் பொருள் தரும் 'புர' வென்ற வினையடியில் நின்றும் உதித்த பெயரே 'புரவு'. உழுது பயிரிட்டுக் காக்கத் தக்கதாய நிலத்தைப் புரவென்றும், அதற்குப் புறத்தே கிடக்கும் காட்டினைப் புறவென்றும் வழங்கலாயிற்றென வூகிக்க இடமுண்டு.

## 24. "போலாய்"

" துறுகன் மறையினு முய்குவை போலாய்." (புறம். 300 : 2)

இவ்வடிக்குப் பதிப்பாசிரியர் தரும் பொருளாவது :—
"துறு கல்லிலே உன்னை மறைத்துக் கொள்வாயாயினும் பிழைப்பாய்". 'மறையினும்', 'மறைத்துக் கொள்வா

* இந் நாட்டில் விளைநிலங்களுக்கு நடுவண் அமைந்த ஓர் ஊருக்குப் 'புரவுசேரி' எனப் பெயர் வழங்குதலும் ஈண்டுக் கருதத்தகும்.

யாயினும் என்னும் பதங்களில் வந்துள்ள ' உம் ' எப்பொருளில் வந்தது? பதிப்பாசிரியர் தந்த உரையின் வாசக அமைப்பை நோக்குங்கால் துறுகல்லிலே மறைதல் பிழையாது போதற்கு ஒரு காரணமாய் முடியுமென்று கொள்ள வேண்டும். எனின் அது கருத்து முரணுமே. " போலாய் " என்பதனை 'போன்ருயல்லை' யென்னும் பொருள் தரும் முன்னிலை எதிர்மறைக் குறிப்பு வினையாய்க் கொள்ளின், புலவரது கருத்து தெள்ளிதின் விளங்கும். நீ துறு கல்லில் மறையினும் உய்குவை போன்ருயல்லை; உய்வதரிது, உய்யாயென்றபடி. இங்ஙனம் வற்புறுத்தக் காரணம் பின்னடிகள் காட்டின.

> " நெருந லெல்லை நீ யெறிந்தோன் றம்பி
> யகற் பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
> ... ... ... தேருமானின்னே " (புறம். 300 : 3-6)

நீ கொன்றவனுடைய தம்பி கொடுஞ்சினத்தினனாய் நின்னை யெதிர்த்துப் போர் புரியத் தேடுகின்றான்; அவன் கையில்நின்றும் நீ பிழைப்பதரிது என்பதே செய்யுளின் கருத்து.

> " ... ... ... ... தீர்வது
> போலாதென் மெய்க்கனலு நோய் " (நெய்தற்கலி, 29:44-45)

> " ... ... ... ... மடலேறி
> நிறுக்குவன் போல்வல் யானீபடு பழியே (குறிஞ்சிக்கலி, 22:23)

இவ்வடிகளில் வந்துள்ள 'போலாது' 'போல்வல்' என்பன எங்ஙனம் படர்க்கைக் குறிப்பு வினையாயும் தன்மைக் குறிப்பு வினையாயும் நிற்கின்றனவோ, அங்ஙனமே எடுத்துக் கொண்ட செய்யுளில் வரும் 'போலாய்' முன்னிலைக் குறிப்பு வினையாய் நிற்கின்றது. முன்னையதைப் போலவே இதுவும் எதிர்மறை வினை தான். ' போலாய் ' என்பதனை 'எதிர்மறை வினைச் சொல்லெனக் கருதாது, 'போலும்' என்ற இடைச் சொல்லா லமைந்த அசைநிலை யென

மருண்டமையே இவ்விதப் பொருள்தரப் பதிப்பாசிரியரைத் தூண்டியிருக்கலாம்.

## 25 "வயலை"

" வயலைக் கொடியின் வாடிய மருங்குல் " (புறம். 305 : 1)

வயலைக் கொடியை பசலைக் கொடி யென்றனர். இக் காலத்துச் சில வீட்டு முன்றிலில் நட்டுப் போற்றப்படும் பசலைக் கொடியைச் சுட்டினர் போலும். இக் கொடி தொன்று தொட்டே நம் நாட்டது தானே வென்று ஒருதலை யாகக் கூறவியலாது. வயளை, வயணை எனச் சிதைந்து இன்றும் மலை நாட்டில் வழங்கிவரும் ஒரு சிவந்த கொடியின் பெயரே வயலை என்றெண்ண இடமுண்டு. பசலை, பசலி யென்னும் கொடியன்று இது. பண்டைத் தமிழ்ப் புலவர் கூறிய 'பசலை' பிரிவாற்று மகளிர் மேனியிற் படர்ந்த பசந்த நிறத்திற்கும் மென்மைக்கும் இளமைக்கும் பெயராய பசலையேயன்றி ஒரு கொடியைக் குறித்தாகத் தோன்ற வில்லை.

## 26. "உகரச்சுட்டு"

" வம்பலன் போலத் தோன்று முதுக்காண் " (புறம். 307 : 3)

" இக்கரை நின்றிவர்ந் துக்கரை கொளலே " (புறம். 357 : 9)

இவற்றுள் வரும் 'உதுக்காண்' என்பதற்கு 'அவ் விடத்தே பார்' என்றும், 'உக்கரை' என்பதற்கு 'அக்கரை' என்றும் பொருள் கொண்டனர். உகரம் சுட்டுப் பொருளைக் குறிக்கும் பொழுதும், உவர், உமண், உயர், உப்பு, உவல் (தழை) என்னுஞ் சொற்களின் அடிநிலையாய்த் தோன்றி நிற்கும் பொழுதும், வெவ்வேறு பொருளைத் தருகின்றது. சுட்டுப் பொருளில் உகரம் முன்னிலை யிடத்தையும் அதற்

கணித்தான இடத்தையும் குறிக்கும். இது தன்மையிடத்திற்கும் படர்க்கையிடத்திற்கும் இடை நிகழ்வதாய இடம். 'உதுக்காண்' என்பதற்கு 'உன்னருகே யுள்ள இடத்தைப் பார்ப்பாயாக' என்பது பொருள். 'உக்கரை' இச் செய்யுளில் வீட்டுலகைக் குறித்தமையான் 'உம்பர்' என்னும் சொற்போன்று மேலுள்ள இடத்தை அது குறித்து நிற்கின்றது. இக்கரை, இம்பர் என்னும் மொழிகள் உக்கரை, உம்பர் என்பவற்றிற்கு எதிர்மறைச் சொற்களாயிணைந்து நிற்பினும், உக்கரை, உம்பர் அல்லாது அக்கரை, அம்பர் என வேறிடம் இல்லாமை பற்றி அவற்றைச் சுட்டாக எடுத்தலமையாது. மொழி வழக்கில் 'இம்பர்' முதலியன ஒருபுடை உதித்த போலிச் சுட்டெனவே கூறலாம். உக்கரை என்னுஞ் சொல்லின் உகரத்தை உம்பர் என்னுஞ் சொல்லின் உகரத்தைப் போல மேலிடம் குறிக்கும் உகரமாகவே கொள்ள வேண்டும். உமண், உவர் என்பவற்றிலும் உகரம் மேலிடப் பொருண்மையை ஒரு காலத்தில் தந்து, இப்பொழுது மறைதலுற்று நிற்கின்றது. இந்த மேலிடப் பொருண்மை தரும் உகரத்தையும் விரவாது வேற்றுமைப் படுத்தியே பொருள் கூற வேண்டும்.

"விடுத்தேன் வாழியர் குரிசி லுதுக்காண்" (புறம். 210 : 12)

என்னுமடியில் 'உதுக்காண்' என்பதற்கு 'இதனைப் பாராய்' என்றே பண்டையுரையாசிரியர் பொருள் கூறினர். பதிப்பாசிரியரைப் பின்பற்றி 'அதனைப் பாராய்' என்று பொருள்தரின் இழுக்காதோ? முன்னிலை இடத்தைத் தன்மையிடஞ் சுட்டும் 'இதனை' என்று எங்ஙனம் கூறினரெனின், 'இது' என்பது தன்மைக்கும் முன்னிலைக்கும் அணித்தாய இடமாதலினால், தன்மையிடங் கொண்டு முன்னிலையிடத்தைச் சுட்டினரெனக் கோடலமையும்.

நற்றிணை 96-ம் பாடற்கண்ணே இது, உது, அது வென்ற மூன்று சுட்டுக்களையும் புலவர் அழகு பெற அமைத்திருக்

கின்றனர்.[1] பரிமேலழகரும் பரிபாடலுரையில் எழுதிய வோர் குறிப்பால் சுட்டெழுத்துக்களின் வேற்றுமையைத் தெளிவுறக் காட்டியுள்ளார். அவர் கூறுவது :—" இவை யென்றது நணியவற்றை; உவையென்றது அவற்றினுஞ் சேயவற்றை; அவையென்றது அவற்றினுஞ் சேயவற்றை; பிறவென்றது காணப்படாதவற்றை "[2] என்பதே. இவ் வாறெல்லாம் பண்டைப் புலவர்கள் வரையறை செய்து பொருள் வேற்றுமைப் படுத்தினரே யாயினும் தன்மையிடத் திற்கும் முன்னிலையிடத்திற்கும் அணிமை சேய்மைக்கண் மதிக்கத் தக்க பெரு வேற்றுமை நிகழாமை பற்றி உகரச் சுட்டுப் பிற்கால வழக்காற்றில் இறந்தொழிந்துவிட்ட தென்றே சொல்லலாம்.

## 27. "களர்ப்படு, பூவற்படு"

" களர்ப்படு கூவற் றோண்டி நாளும் "        (புறம். 311 : 1)
" பூவற் படுவிற் கூவற் றோண்டிய "        (புறம். 319 : 1)

---

1. இதுவே, நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை ததைந்த வெண்மண லொருசிறைப்
புதுவது புணர்ந்த பொழிலே; உதுவே,
பொம்மற் படுதிரை நம்மோ டாடிப்
புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பால்
துவரின ரருளிய துறையே; அதுவே,
கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்
அம்பகை நெறித்தழை யணிபெறத் தைஇத்
தமியர் சென்ற கானல்: என்றாங்கு
உள்ளுதோ றுள்ளுதோ றுருகிப்
பைஇப் பையப் பசந்தனை பசப்பே !        (நற். 96)

2. அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவும்
ஏம மார்ந்த நிற்பிரிந்து
மேவல் சான்றன வெல்லாம்        (பரி. 4 : 33–35)

என்னும் அடிகளுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரையில் இக்குறிப்பு உள்ளது.

இவ்வடிகளில் முன்னையதில் வரும் 'களர்' என்பதற்கு உவர் நிலமெனப் பொருள் கூறிப் பின்னையதில் 'படு'வை மடுவென்றனர். அடிகளின் பொருளை விளக்க இவ்வுரைகள் பயன்படுவனவேயல்ல. இப் பொருளுரையால் இவ்வடிகள் களர் நில மடுவிற் கூவற்றோண்டி, செம்மண் நில மடுவிற் கூவற்றோண்டியென வரும். மடு வகைகளை நிலத்தாற் குறிப்பது பண்டைப் புலவர்களுடைய வழக்கோ? மடுவென்ற நீர் நிலையிற்றான் கூவற்றோண்டுவது எங்ஙனம்? கூவற்றோண்டலை நிலை நிறுத்துவான் இங்கு மடுவென்பது சாதாரண மடுவன்றென்றும் நீர் வற்றி வறந்த மடுவென்றும் எடுக்க வேண்டுமோ? இந்த அசம்பாவிதமெல்லாம் 'படு' வின் மெய்ப் பொருள் கண்டு கொள்ளாமையால் ஏற்பட்டவையேயாம்.

மேலும் தனித்து வரும் 'படு' மடுப் பொருளைத் தரினும், 'களர்ப்படு', 'பூவற்படு' என்னும் தொடர்களிலும் அம் மொழி அப் பொருள் பயக்க வேண்டுமென்ற நியதியுண்டோ? 'படு' வென்ற சொல்லின் பொருளைப் பிற்கால நிகண்டுகளைக் கொண்டு நிர்ணயித்தல் ஒரு சிறிதும் இயலாது. அங்கே குளம், படு, மடு என்னுஞ் சொற்களெல்லாம் வேற்றுமையிழக்குமாறு தொகுக்கப்பட்டுப் போயின. இலக்கியப் பிரயோகம் ஒன்றே நமக்கிதில் வழிகாட்டியாய் அமையவேண்டும்.

ஆங்கு நோக்கினோ சிறுபாணாற்றுப் படை 153-ல் 'பனி நீர்ப் படு' வென்றும், புறநானூறு 332-ல் 'தெண்ணீர்ப்படு' வென்றும், நற்றிணை 33-ல் 'கல்லுடைப் படு'வென்றும், அகநானூறு 79-ல் 'வல்லுவர்ப்படு' வென்றும் வந்திருக்கக் காண்கின்றோம். அகநானூற்றில் வந்த 'படு'வுக்கு, 'கிணறு' எனப் பொருள் கூறினர் அந்நூல் உரையாசிரியர்; நற்றிணையில் வந்த 'படு'வுக்கு, 'குழி' யென்று பொருள் தந்தனர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்; சிறுபாணாற்றுப்படைப் 'படு'வுக்கு, நச்சினார்க்கினியர் 'குளம்' எனப் பொருள் கூறிவிட்டு, 'மடுவுமாம்' என்று

பிறிதோர் பொருளும் வரைந்தனர். இவ்வுரையால் குளம் வேறு மடு வேறென்பது வெளிப்படை. 'மடு'வென்ற சொல்லின் பொருளை ஆராயின், அது ஒரு பொய்கையிலோ ஆற்றிலோ சிலவிடங்களில் ஏற்பட்ட ஆழ்ந்த நீர்க் கட்டினைக் குறிக்குமென்று தெரிகின்றது. இதனைக் குட்டமென்றும் இலஞ்சியென்றும் வழங்குவர். புறம். 37, 243, செய்யுள் களுக்குப் பண்டையுரையாசிரியர் வகுத்த உரை இதனை நன்கு நிலை நிறுத்தும். அங்ஙனமாயின் கூவற்ருேண்டத் தக்க படு மடுவாயிருத்தற் கியலாதென்பது தேற்றம்.

இக் குழப்பமனைத்தும் நீங்கி மெய்ப் பொருள் காண வேண்டுமாயின் களர்ப்படு, பூவற்படு என்ற தொடர்களைப் பிரிக்காது அவை, உவர் நிலம், செம்மண்ணிலம் என்பவற்றைச் சுட்டின வென்று கொள்ள வேண்டும். களர் = உவர், களர்ப்படு = உவர் நிலம், பூவல் = செம்மண், பூவற்படு = செம்மண்ணிலம். கள, பூ என்பன நிலப் பண்பை உணர்த்தும் உரிச் சொற்களும், களர், பூவல் என்பன அவ்வுரிச் சொல்லடியாகப் பிறந்த பெயர்ச் சொற்களுமா மெனல் பொருந்தும். 'படு' எனும் பெயர்ச்சொல்லை இவற்ருேடு சேர்க்கக் களர்ப்படு, பூவற்படு வெனும் ஒட்டுப் பெயர்களைத் தந்து, சிற்சில பண்பமைந்த நிலவேறுபாட்டினை அது காட்டி நிற்கும். அகநானூறு 79 : 3-ல் வரும் 'உவர்ப்படு' என்ற தொடரும் இதே மாதிரி எழுந்ததென்னலாம். 'படு' என்ற ஈற்றுச் சொல்லே 'பாடு' வென நீண்டு களர்ப்பாடு, பூவற்பாடு, செவ்வற்பாடு, கரும்பாடு, கரிசற்பாடு, மணற்பாடு எனப் பல்வகை நிலப் பண்பின் வேற்றுமைகளைச் சுட்டித் தற்கால வழக்கிலும் நிகழ்கின்றது.

மொழிகள் நீட்டல், குறுக்கல் முதலிய விகாரங்களால் புத்துருவம் வாய்ப்பது இலக்கிய வழக்கிலும் உலக வழக்கிலும் சர்வ சாதாரணமே. இதனை மறந்து 'களர்ப் பாடு' என வழக்கில் நிகழ்கின்றதேயன்றி 'களர்ப்படு' வென்று வரவில்லையே வென ஆசங்கித்து நிற்பார் நிலை மலையைச் சுலப சாத்தியமாய் விழுங்கி விட்டு

உரலை விழுங்குவதில் விக்குற்று நிற்பது போல் தோன்றுநிற்கும். இனி, அன்னாரின் உட்கிடக்கைப்படி இலக்கிய வழக்குப் போன்றே உலக வழக்கும் நடைபெற வேண்டுமெனின் இலக்கிய வழக்கு உலகவழக்கு என்ற பாகுபாடுதான் எப்பொருட்டு? கம்பராமாயணத்தில் 'கண்ணடி' என்று வந்திருக்க, வழக்கில் 'கண்ணாடி' யென்றியல்வதால் இரண்டு சொற்களும் ஒரு பொருளைக் குறிக்கவில்லையென்று வாதம் நிகழ்த்துவரோ? Tamil Lexicon என்னும் புதிய அகராதியில் 'ச' வென்ற எழுத்தின் கீழ் நோக்கவே சமுகம், சமூகம்; சபினம், சபீனம்; சமு, சமூ; சரளம், சராளம்; சல்லரி, சல்லாரி;—என்னும் ஜோடிப் பதங்கள் ஒரு சில பக்கத்துள் அகப்பட்டன. நீட்டல் விகாரத்தால் இவற்றிற் பொருள் வேற்றுமை புகவோ, அன்றி, அகராதியில் நின்றும் இவை நீக்கப்படவோ காண்கிலோம். 'சமுக்காளம்' என்று அகராதியில் வந்திருந்த போதிலும் 'சமுக்களம்' என்று அநேக இடங்களில் வழங்குகின்றதே. அதனால் அவ்வழக்கை நிராகரிக்கலாமோ? எவ்விதம் நோக்கினும் உலக வழக்கில் நிகழும் களர்ப்பாடு, பூவற்பாடு என்ற பதங்களே பண்டையிலக்கியத்தில் களர்ப்படு, பூவற்படு வென்று நிற்கின்றவென ஐயமறத் துணியலாம்.

## 28. "பம்பு"

" முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பி (புறம். 320 : 1)

'பம்பி' என்பதனைப் 'பரவி' யென்றனர். 'நெருங்கி' 'செறிந்து' வெனக் கூறுதலே நேர் பொருள். 'பரப்பு' என்ற பொருளும் இம் மொழி பிற்காலத்தில் அடைந்துள்ளது. ஒரு சொல், அதற்கு ஆதியிலமைந்த பொருளையும், அதனோடு காரணகாரிய சம்பந்தத்தினாலோ பிற வழியினாலோ பொருத்தமுடைய பிற பொருள்களையும் தருமென்பதற்கு 'பரப்பு, என்ற சொல்லைக் குறித்த திவாகர

பிறிதோர் பொருளும் வரைந்தனர். இவ்வுரையால் குளம் வேறு மடு வேறென்பது வெளிப்படை. 'மடு'வென்ற சொல்லின் பொருளை ஆராயின், அது ஒரு பொய்கையிலோ ஆற்றிலோ சிலவிடங்களில் ஏற்பட்ட ஆழ்ந்த நீர்க் கட்டினைக் குறிக்குமென்று தெரிகின்றது. இதனைக் குட்டமென்றும் இலஞ்சியென்றும் வழங்குவர். புறம். 37, 243, செய்யுள் களுக்குப் பண்டையுரையாசிரியர் வகுத்த உரை இதனை நன்கு நிலை நிறுத்தும். அங்ஙனமாயின் கூவற்றோண்டத் தக்க படு மடுவாயிருத்தற் கியலாதென்பது தேற்றம்.

இக் குழப்பமனைத்தும் நீங்கி மெய்ப் பொருள் காண வேண்டுமாயின் களர்ப்படு, பூவற்படு என்ற தொடர்களைப் பிரிக்காது அவை, உவர் நிலம், செம்மண்ணிலம் என்பவற்றைச் சுட்டின வென்று கொள்ள வேண்டும். களர் = உவர், களர்ப்படு = உவர் நிலம், பூவல் = செம்மண், பூவற்படு = செம்மண்ணிலம். கள, பூ என்பன நிலப் பண்பை உணர்த்தும் உரிச் சொற்களும், களர், பூவல் என்பன அவ்வுரிச் சொல்லடியாகப் பிறந்த பெயர்ச் சொற்களுமா மெனல் பொருந்தும். 'படு' எனும் பெயர்ச்சொல்லை இவற்றோடு சேர்க்கக் களர்ப்படு, பூவற்படு வெனும் ஒட்டுப் பெயர்களைத் தந்து, சிற்சில பண்பமைந்த நிலவேறுபாட்டினை அது காட்டி நிற்கும். அகநானூறு 79 : 3-ல் வரும் 'உவர்ப்படு' என்ற தொடரும் இதே மாதிரி எழுந்ததென்னலாம். 'படு' என்ற ஈற்றுச் சொல்லே 'பாடு' வென நீண்டு களர்ப்பாடு, பூவற்பாடு, செவ்வற்பாடு, கரும்பாடு, கரிசற்பாடு, மணற்பாடு எனப் பல்வகை நிலப் பண்பின் வேற்றுமைகளைச் சுட்டித் தற்கால வழக்கிலும் நிகழ்கின்றது.

மொழிகள் நீட்டல், குறுக்கல் முதலிய விகாரங்களால் புத்துருவம் வாய்ப்பது இலக்கிய வழக்கிலும் உலக வழக்கிலும் சர்வ சாதாரணமே. இதனை மறந்து 'களர்ப் பாடு' என வழக்கில் நிகழ்கின்றதேயன்றி 'களர்ப்படு' வென்று வரவில்லையே வென ஆசங்கித்து நிற்பார் நிலை மலையைச் சுலப சாத்தியமாய் விழுங்கி விட்டு

உரலை விழுங்குவதில் விக்குற்று நிற்பது போல் தோன்றுநிற்கும். இனி, அன்னாரின் உட்கிடக்கைப்படி இலக்கிய வழக்குப் போன்றே உலக வழக்கும் நடைபெற வேண்டுமெனின் இலக்கிய வழக்கு உலகவழக்கு என்ற பாகுபாடுதான் எப்பொருட்டு? கம்பராமாயணத்தில் 'கண்ணடி' என்று வந்திருக்க, வழக்கில் 'கண்ணாடி' யென்றியல்வதால் இரண்டு சொற்களும் ஒரு பொருளைக் குறிக்கவில்லையென்று வாதம் நிகழ்த்துவரோ? Tamil Lexicon என்னும் புதிய அகராதியில் 'ச' வென்ற எழுத்தின் கீழ் நோக்கவே சமுகம், சமூகம்; சபினம், சபீனம்; சமு, சமூ; சரளம், சராளம்; சல்லரி, சல்லாரி;—என்னும் ஜோடிப் பதங்கள் ஒரு சில பக்கத்துள் அகப்பட்டன. நீட்டல் விகாரத்தால் இவற்றிற் பொருள் வேற்றுமை புகவோ, அன்றி, அகராதியில் நின்றும் இவை நீக்கப்படவோ காண்கிலோம். 'சமுக்காளம்' என்று அகராதியில் வந்திருந்த போதிலும் 'சமுக்களம்' என்று அநேக இடங்களில் வழங்குகின்றதே. அதனால் அவ்வழக்கை நிராகரிக்கலாமோ? எவ்விதம் நோக்கினும் உலக வழக்கில் நிகழும் களர்ப்பாடு, பூவற்பாடு என்ற பதங்களே பண்டையிலக்கியத்தில் களர்ப்படு, பூவற்படு வென்று நிற்கின்றவென ஐயமறத் துணியலாம்.

## 28. "பம்பு"

" முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பி (புறம். 320 : 1)

'பம்பி' என்பதனைப் 'பரவி' யென்றனர். 'நெருங்கி' 'செறிந்து' வெனக் கூறுதலே நேர் பொருள். 'பரப்பு' என்ற பொருளும் இம் மொழி பிற்காலத்தில் அடைந்துள்ளது. ஒரு சொல், அதற்கு ஆதியிலமைந்த பொருளையும், அதனோடு காரணகாரிய சம்பந்தத்தினாலோ பிற வழியினாலோ பொருத்தமுடைய பிற பொருள்களையும் தருமென்பதற்கு 'பரப்பு, என்ற சொல்லைக் குறித்த திவாகர

சூத்திரமே ஒரு நல்ல எடுத்துக்காட்டாக அமையும். எல்லா வகைப் பரப்பும் அதில் தரப்பட்டுப் போயின.

> " பாய்தலு ஞெமிர்தலும் பம்பும் பரவையும்
> பரவலுந் தாவலும் அழுவமும் பரப்பே." (திவாகரம்)

செறிதல் என்னும் பண்பு, நாளடைவில் செறிதலால் ஏற்பட்ட பல்வேறு நீட்சிப் பொருளேயும் தந்திருக்கின்ற தென இச் சூத்திரமே புலப்படுத்தும். அது பாய்தல், தாவல் என்ற நீட்சியையும் (Length), ஞெமிர்தல் என்ற நிவப்பு அல்லது உயரத்தையும் (Height), அழுவம் என்ற ஆழத்தையும் (Depth), பரவல், பரவை, பரப்பு என்ற விரிவைவும் (Extent) சுட்ட வந்தது. உலக வழக்கில் இங்ஙனம் மாறுதலடைய வழியுளதேனும் இலக்கிய வழக்கில் சொற்களின் பொருள் பிறழ்ச்சியுறு வண்ணம் புலவர் காத்தே வந்திருக்கின்றனர். இலக்கியமென்பதே பலவாறு வேற்றுமையடையும் மொழியியலைச் சிற்சில வரம்பினுட் பெய்து; பொருளை வரையறைசெய்து, சொற்கள் தம்முள் மயங்காவாறு ஒரு நிலைப்படுத்துவதே யாகும். உயரிய நூலியற்றும் பெரும் புலவர்கள் சொற்களின் நுண்ணிய வேற்றுமைகளை ஆராய்ந்தறிந்து அவற்றைக் கையாடினும், கல்வியில்லா சாதாரண மக்களும் முதிர்ந்த கல்வியிலராய்ச் சிறுநூற் புனைவாரும் இவ்வேற்றுமை களை உற்றுணராது சொற்களைத் தம்முள் மயங்க எடுத்தாளுவர். ஒரு சொல்லின் பரியாய பதங்களைத் திரட்ட வேண்டுமென்ற நோக்கமுடைய நிகண்டாசிரியர்களும், உலக வழக்கையும் கீழ்த்தர இலக்கிய வழக்கையும் சில சமயம் அநுசரித்து நுண்ணிய வேற்றுமைகளைப் பாராட்டாது ஒருவித சம்பந்தப்பட்ட சொற்களை ஒரே செய்யுட் கூட்டி னுட் கொண்டடைத்து விடுவர். ஆதலால் சொற்களின் பொருள் வேற்றுமை தெரியப் புகுவார்க்கு உயரிய இலக்கியமே சிறந்த கருவியாவதல்லது நிகண்டாசிரியர்கள் வழிகாட்டிகளாய் அமையத்தக்காரல்லர்.

"பம்பி மேகம் பரந்தது பானுவால்" என்ற கம்ப ராமாயண அடியொன்றே பம்புதல் வேறு பரவுதல் வேறெனத் தெளியக் காட்டும். இதனோடு பம்பை என்ற இசைக் கருவியின் பெயர் உற்பத்தியும் 'பம்பு' என்ற சொல்லின் பொருளைத் தெளிவுறுத்தும். இசை பரப்புதல் இசைக் கருவிகளனைத்திற்கும் ஒத்த பண்பே; ஆயின் இசையைச் செறித்துப் பம்பச் செய்யும் பண்பு 'பம்பை' என்னும் கருவிக்கே விசேடமாயமைந்ததென அதனொலி கேட்பார் ஒப்புக்கொள்ளாதிரார்.

## 29. "பீள்"

"பொரிப்புறப் பூழின் போர்வல் சேவல்

— — ...

கவியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்.

(புறம். 321 : 1–6)

இதற்கு, "பீள்—கரு. வரகின் பீளிற் சேவல் ஒளிக்கும்; பீள் என்றது கதிர்ப்போரை" என்று பொருள் தந்திருக்கின்றனர். பீள், கதிர்ப் போர் என்பது இலக்கிய வழக்கில்லா ஒரு நூதன சிருஷ்டியென்று சொல்லலாம். இச் செய்யுளில் 'பீள்' நாற்று அல்லது இளம் பயிரைக் குறித்தது. "பெருகிய விளஞ்சூல் பீட்டை பீளிளங் கதிரின் பேரே" என்னுஞ் சூடாமணி அடியால் 'பீள்' இளம்பயிரினைக் குறிக்குஞ் சொல்லென அறியலாம். இஃதன்றி, கரு, சூல், சினை என்ற பொருளையும் இச்சொல் தரும். கருவிற் சேவல் ஒளித்தல் செல்லாமை பற்றி அப் பொருள் இங்குப் பொருந்துவதன்று. வரகு நாற்றுள்ளே பூழின் சேவல் ஒளித்ததனைப் புலவர் கூறுகின்றார்.

பீள், பிள்ளை, பீட்டை, பிறப்பு, பேறு முதலியவற்றின் பகுதியடி ஒற்றுமை ஆராயத்தக்கது.

## 30. "கருப்பை"

" புதுவர கரிகாற் கருப்பை பார்க்கும் "  (புறம். 322 : 3)

" பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும் "  (புறம். 324 : 7)

இப் பாடல்களில் வரும் 'கருப்பைக்கு' எலியென்று பொருள் தரப்பட்டிருக்கின்றது இங்கும், வேண்டிய அடைமொழி விடுத்தமையால் நேருரை தராது போயினர். இது காரெலியைக் குறிக்கும் பதமெனத் திவாகரமே தெளியக் காட்டும். குருப்பையென்றும் மருவி வழங்கும். வெள்ளையாட்டை வெள்ளையென்று கூறுவது போல (புறம். 324 : 9) கறுப்பெலியைக் கருப்பையென்றனர் போலும்.

கறுப்பு, கருமை என்ற சொற்களில் றகர ரகர வேற்றுமை நாளடைவில் அருகிமாய்ந்ததெனக் கூறுவதா. அன்றி அத்துணைப் பாராட்டபடவில்லையென்று துணிவதா? இறுத்தல், இருத்தல்; முறி, முரி; பாறை, பார்; பிறிவு பிரிவு முதலிய வேறு பல சொற்களிலும் அவ்வேற்றுமை போற்றப்படாமை காண்கின்ரும்.

## 31. "தண்பணை"

" தண்பணை யாளும் வேந்தர்க்கு "  (புறம். 322 : 9)

'தண்பணை' என்ற சொல்லுக்கு 'மருத நிலத்தைச் சார்ந்தவூர்கள்' என்று பொருள் கூறினர். அது மருத நிலத்தைக் குறிப்பதேயன்றி மருத நிலவூரை குறித்தற்கு இலக்கிய வழக்கில்லை.

" மென்புனல் வைப்பினித் தண்பணை யூரே "  (புறம். 341 : 19)

" பன்னல் வேலியிப் பணைநல் லூரே "  (புறம். 345 : 20)

" ஏமஞ்சால் சிறப்பினிப் பணைநல் லூரே "  (புறம். 351 : 12)

என்னுமடிகளில் பணையிலிருந்து ஊரைப் பிரித்துக் காட்டியது கொண்டு நாம் அறியவேண்டியதென்ன? வயல் என்ற பொருள் பயக்கும் 'பண்ணை' மருவி 'பணை' ஆயிற்றென ஊகிக்கலாம். பண்ணைக்கு அடியாய 'பண்' என்ற சொல்லும் 'செய்' என்ற சொல்லும் முதன்முதல் ஒரு தொழிலைச் சுட்டிப் பின் அத் தொழிலின் நிலைக்களத்தையும் சுட்ட உதவினவெனத் தோன்றுகின்றது.

## 32. "கொளீஇ"

> " நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய
> மங்குல் மாப்புகை " (புறம். 329 : 3-4)

என்னும் அடிகளில் 'கொளீஇ' என்பதற்கு, 'கொளுத்துதலால், 'சேர்த்தலால்' எனப்பொருள் கொண்டனர் பதிப்பாசிரியர். 'கொள்' என்னும் அடியிற் பிறந்த 'கொளுத்து' என்ற பிறவினை 'கொள்ளச் செய்து' அல்லது 'சேர்த்து' என்ற மூலப் பொருள் தரினும், இங்கு அது புகைதரத்தக்க 'கொளுத்த'ாதலால் 'எரித்து' என்னும் பொருள் குறித்ததாகவே கொள்ளவேண்டும்.

> " விளக்கங் கொளீஇ " (மதுரைக்காஞ்சி, 556)
>
> " இரும்பு செய் விளக்கின்
> ஈர்ந்திரிக் கொளீஇ " (நெடுநல் வாடை, 42)
>
> " நெய்யுமிழ் சுரையர்
> நெடுந் திரிக் கொளீஇ " (முல்லைப்பாட்டு, 48)

என்னும் அடிகளில் 'கொளீஇ' எனும் பதத்தை ஏற்றி, எரித்து, கொளுத்தி என்றே பொருள் கொண்டனர் நச்சினார்க்கினியர். 'சேர்த்து' என்ற தாதுப் பொருள் இவ் வடிகளிற் பொருந்தாது. இலக்கியங்களுக்கு உரை விளக்கஞ் செய்யுங்கால் தாதுப் பொருளை ஒட்டிச் செல்வது சில சமயம் பயனிலதாய் முடியு மென்பதனை இது நன்கு காட்டும்.

## 33. "கல்லுறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்"

"கல்லுறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்" (புறம். *331:1*)

இதன் அடிப்போக்கைக் கருதாது மனம்போன போக்கில் " இயற்றிய வல்லுவர்க் கூவல் " என்று வழுக்கொளப் பிரித்தெடுத்து, அதற்குக் 'கிணறு' என ஒரே சொற்கொண்டு பொருளும் வகுக்கப்பட்டிருக்கின்றது. 'கூவல்' என்னும் பதமே கிணறென்னும் பொருளைத் தந்துநிற்க, 'இயற்றிய', 'வல்', 'உவர்' என்ற மூன்று அடைப் பதங்கட்கும் உரை கூறாது விட்டமை எம்முறைபற்றி? அவற்றின் பொருள் வெளிப்படையெனக் கருதின் குறிப்பினுள் அவற்றைக் கொண்டு வந்திருக்க வேண்டாமே. கொண்டு வந்திருக்கும் நிலையில் அவற்றைப் பொருள் விரியாது விடுவது அவை அர்த்தம் பயவா அடைமொழிகளென மயங்க வைத்தலாகாதோ? அடி முழுமைக்கும் உவர்மிக்க நிலத்தில் கல்லையுடைத்துச் செய்த கிணறு அல்லது கல்லையுடைத் தகழ்ந்த மிக்க உவர்ச்சுவைத்தாய நீரையுடைய கிணறு என்று பொருள் கூறலாம். இவ்வாறு கூறுதலை விடுத்து, 'கூவல்' என்ற சொல்லுக்கு மட்டிலும் அகராதிப் பொருள் தந்தமையால் யாது பயன்? கற்கொண்டு கட்டப்பெற்ற கிணறு என்று பிறிதோர் வழியிற் பொருள் கூறக் கிடப்பினும், மதுரைக் காஞ்சி (730) " கல்லிடித் தியற்றிய விட்டுவாய்க் கிடங்கின் " என்னுமடியை ஒப்பிடின் முன்னையப் பொருள்கோளே உசிதமெனத் தோன்றுகின்றது.

## 34. "மொக்குள்"

" நீருட் பட்ட மாரிப் பேருறை
மொக்கு ளன்ன பொகுட்டு விழிக்கண்ண "
(புறம். *333 : 1–2*)

இதில் 'மொக்கு'ளைச் சேற்றிலெழுந்த 'கொப்புளம்' என்றார். "கொப்புள் பொகுட்டுச் சேற்றெழு குமிழி" என்ற பிங்கலந்தை சூத்திரமே இவ்வுரைதரத் தூண்டிற்றென எண்ணலாம். ஆயினும் இங்கு நீரிலெழுந்த குமிழியெனக் கூறுவதே பொருத்தம். முயலின் கண்ணை வருணிப்பதிற் சேறும் வேண்டுமோ? சேற்றிலெழா மொக்குளைப் பிங்கலந்தை கூறாமைபற்றிச் சேறின்றி மொக்குள் எழாதென முடிவு செய்யலாமோ? செய்யுளிலும் "நீருட் பட்ட மாரிப் பேருறை மொக்குள்" என்றே வந்திருக்கின்றது. மாரிப் பேருறை குளங்களில் வீழ மொக்குள் தோன்றுவதியற்கை. இவ்வியற்கைத் தோற்றம் அறிந்து கொள்ளுதற்கரியதுமன்று. "நீரிற் குமிழி நிறை செல்வம்" என்னும் சாதாரண அடியைக் கொண்டேனும் நேருரை தந்திருக்கலாம்.

## 35. "படப்பை"

> "... ... ... ... குறுமுயல்
> புன்றலைச் சிறுஅர் மன்றத் தார்ப்பிற்
> படப்பொடுங் கும்மே............" (புறம். 334 : 2-4)

இதில் படப்பு என்ற சொல்லுக்கு வைக்கோற் போர் எனப் பொருள் கூறி, 'படப்பை' யென்றுங் கூறியிருக்கின்றனர் பதிப்பாசிரியர். படப்பு, படப்பை என்னும் இரண்டு சொற்களும் 'படு' என்ற ஒரே வினையடியில் நின்றும் பிறந்தனவேயாயினும், மொழி வழக்கில் வெவ்வேறு பொருளையே குறிக்கலாயின. தோட்டம், பக்கம், கொல்லை, பூந்தோட்டம் முதலிய பொருள் பயக்கும் 'படப்பை' யென்னுஞ் சொல்லைப் 'படப்பு' எனுஞ் சொல்லாக மயங்கல் கூடுமா?

> "பாசவற் படப்பை யாரெயில் பல தந்து" (புறம். 6 : 14)
> "பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே" (புறம். 98 : 20)
> "பெண்ணையம் படப்பை நாடு கிழவோயே" (புறம். 126 : 23)
> "தண்புனற் படப்பை யெம் மூராங்கண்" (புறம். 166 : 29)

இவ்வடிகளில் படப்பை, பக்கம் என்ற பொருள் தந்து நிற்கின்றது.

"வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த" (புறம். 140 : 3)
"இடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த" (புறம். 197 : 10)

இங்கு மனைப்பக்கத்துள்ள தோட்டத்தைக் குறித்தது. படப்பை வேறு, படப்பு வேறென்று காட்ட இவற்றினும் வேறு உதாரணங்கள் வேண்டா.

## 36. "கொண்டியள்"

"பெருஞ்சீ ரருங்கொண் டியளே" (புறம். : 338 : 5)

இத்தொடரைக் கண்ணழித்துக் 'கொண்டிச் சீரள்' என வியைத்து மிகுதியான சீரையுடையவள் என்று பொருள் கூறினர். 'கொண்டி' என்னுஞ் சொல் போரிற் கொள்ளை யடிக்கப்படும் பொருளையும், பின்னர்க் கொள்ளப்படும் திறையையும் சுட்டிற்று.

"கொண்டி மிகைபட தண்டமிழ் செறித்து"
(பதிற்றுப்பத்து 63 : 9)
"தொல் கொண்டித் துவன்றிருக்கை" (பட்டினப்பாலை, 212)
"கொண்டி மகளிர்" (பட்டினப்பாலை, 246)
"... ... ... ... போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவனாயின்" (புறம். 51 ; 5–6)

இவ்வடிகளில் 'கொண்டி' என்ற சொல்லின் பிரயோகம் நோக்குக. எடுத்துக்கொண்ட அடியில் 'கொண்டியள்' என்பது கொள்ளைப் பொருளாகக் கொள்ளத்தக்காள் என்று பொருள்படும். பெருஞ்சீர் வாய்ந்து கொள்ளற் கரியளாயிருப்பவளென்றும் பொருள் விரித்தல் பொருந்தும். சீர் என்ற சொல்லுக்குப் 'பெரு' வென்னும் உரிச்சொல் லடைமொழி இசைந்து நிற்க, மிகுதிப் பொருள் பயக்கும்

'கொண்டி' என்னும் பிறிதோர் அடைமொழி புணர்த்தல் வேண்டா. அன்றியும் கொண்டி என்ற சொல்லே அடியில் இல்லை; 'கொண்டியள்' என்பதே ஆங்குள்ள சொல். இதனைச் சொற்பிறப் புணர்த்தப் பிரிக்கலாமே; தவிரப் பொருளுணர்த்தப் பிரித்தல் வழுவரிய முறையாம்.

## 37. "மாற்றம்"



"புலிக்கணத் தன்ன கருங்கட் சுற்றமொடு
மாற்ற மாறுன் மறலிய சினத்தன்" (புறம். 341 : 7-8)

இதில் 'மாற்றம்' மாறுபட்டுரைக்குஞ் சொல் என்றனர். இது அத்துணைச் சிறப்புடைய பொருளன்று. மாற்றம் என்பதனைக் கேவலம் 'சொல்' எனக் கொண்டால், அடியின் பொருள் சிறக்கும். புலிக்கூட்டம்போலும் தறுகண்மை யுடைய சுற்றத்தாரோடும் உரையாடானாய் நின்ற எமன் போலுங் கொடிய சினத்தன் என்பது அடிகளின் திரண்ட பொருள். புறம் 377 : 27-ல் குறிக்கப்படும் சின நிலையினும்* மிக்கவோர் சின நிலையை இங்கே புலவர் வர்ணித்துள்ளா ரெனக் கொள்வது சரியாயிருக்கும். மறலியைத்தானே சினத்திற்கு வேண்டிய உவமானப் பொருளாய்க் கவிஞர் கொண்டமையால், கீழ்ப்படியில் வரத்தக்க சிறுசின நிலையை இங்கே சுட்டினரென்னல் இயலாது. மாற்றப்படுவது மாற்றம். உரையாடற்குச் 'சொல்' இன்றியமையாக் கருவியாதலால் அது 'மாற்றம்' எனப்பட்டது. 'மாற்றமாறுன்' என்பது 'உரையாடான்' என்பதுவே. இவனுடைய சினத்தைப் பிறர் மாற்ற நோக்கினும் மாறுத சினமுடையவன் என்று பிறிதோர் வழி பொருள் கொள்ளலாகாதோ வெனின், அப் பொருண் முறை 'சுற்றமொடு' என்னும் தொடரோடு பொருந்துவதன்று.

* "கதழிசை வன்கணினர்"

## 38. "நிரல்"

" நிரலல் லோர்க்குத் தரலோ வில்லென " (புறம். 345 : 14)

இவ்வடியில் வரும் 'நிரல்' என்பது 'வரிசை' என்றனர். வரிசை, ஒழுங்கு என்ற பொருளோடு முறை, தகுதி, தரம், சிறப்பு முதலிய பல பொருள்களைத் தரினும், 'நிரல்' என்ற சொல்லின் பொருளைத் தரவில்லை. வரிசை முறையென்று பதிப்பாசிரியரே இந்நூல் 533-ம் பக்கத்திற் குறித்துள்ளார். நிரல், நேர், ஒப்புமை, புரைதல் இவை யாவும் ஒரு பொருளைக் குறிப்பன. இங்கே பண்பு, நலன், அன்பு, செல்வம், கல்வி, குடிப்பிறப்பு, ஒழுக்கம், கீர்த்தி முதலிய வற்றில் ஒப்புமைவாயாதார்க்குப் பெண் கொடுத்தல் இல்லையெனக் கூறியதாய்ப் பொருள் கொள்ளவேண்டும். நிரலை வரிசையெனக் கொண்டால் இப்பொருள் வருமோ? மணம்புணர்வார் தம்முள் ஒப்புமை வேண்டுவர் என்பதை

" ... ... ... எம் சிறு நல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ வன்றே " (நற்றிணை 45 : 9-10)

" புரைய ரல்லோர் வரையல ளிவளென " (புறம். 343 : 12)

என்னும் அடிகள் தெளியக் காட்டும். அப்புரைதல், ஒப்புமையை 'நிரல்' என்னுஞ் சொல் சுட்டிற்றெனக் குறிஞ்சிப் பாட்டு 30-ல் வரும் "குடி நிரலுடைமையும்" என்னும் தொடர் நன்கு நிலைநிறுத்தும்.

## 39. "குடை"

" அவல் வகுத்த பசுங்குடையாற்
புதன் முல்லைப் பூப்பறிக் குந்து " (புறம். 352 : 3-4)

'குடை' என்ற சொல்லுக்கு 'பனமட்டையாற் செய்யப் பட்ட ஒரு கருவி ; பனம் பட்டையெனத் தென்னாட்டில் வழங்கும்' எனவொரு குறிப்பு எழுதியிருக்கின்றனர்.

தென்னாட்டிலுள்ளார் யாரும் பனம்பட்டை பனையோலை யாற் செய்யப்படுவதென்றும் பனமட்டையாற் செய்யப்படு வதன்றென்றும் அறிவர். இச்சொல் கீழ்த்தந்த அடிகளிலும் வந்திருக்கின்றது.

> “ ... ... ... பசுவெள் ளமலை
> வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
> விரும்பனங் குடையின் மிசையும்
> பெரும் புலர் வைகறை (புறம். 177 : 14–17)

இவ்வடிகளில் வரும் ‘குடை’ என்னும் பதம் தற்காலத்து வழங்கிவரும் ‘குடலை’ என்னுஞ் சொல்லின் முன்னுருவே. குடையோலை குடலையென்று மருவிற்றெனவும் கொள்ள லாம். “குட்” என்னும் பகுதியடி வளைந்து குழிந்த பண்பைச் சுட்டும் ஓர் மூல தாதுவாம். இதிலிருந்து கிளைத்த சொற்கள் பல. குட்டம், குண்டு, குடல், குடம், குட்டை, குடை, கூடு, கூடை, கூண்டு முதலிய பெயர்கள் யாவும் வளைந்து குழிந்த தன்மையுள்ள பொருள்களைக் குறிப்பனவாம். டாக்டர் கால்டுவெல் ‘குடல்’ என்பது குடை என்னும் வினையில் நின்றும் பிறந்ததெனக் கருதினர். எல்லாப் பெயர்களும் வினையடியிலிருந்து பிறக்கவேண்டுமென்ற வட மொழியிற் சில வாசிரியர்கள் மதத்தைப் பின்பற்றாது தமிழ் மொழியிற் பண்படியிலிருந்து உதித்த பெயர்களும் வினை களும் பலப்பலவென்று நாம் அறிந்துகொள்ளவேண்டும். குடை என்னும் வினையே ‘குட்’ என்னும் தாதுவிலிருந்து உதித்திருக்கலாம்.

## 40. “வள்ளி”

> “ ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர் ” (புறம். 352 : 5)

இதில் ‘வள்ளி’யை வளையென்றனர். இது சரியுரை யாகாது. ஆம்பல் வள்ளி என்பது ஆம்பற்றண்டினை உணர்த்திற்று. கொடியெனப் பொருள்படும் ‘வல்லியை’

வள்ளியென மலைநாட்டில் இன்றும் வழங்கி வருகின்றனர். அவ்வழக்கினைப் பதிப்பாசிரியர் அறிந்திருப்பரேல் இவ் விதப் பொருண் மயக்கம் நேர இடமில்லை. புறம் 63 : 12-ல் இவ்வடியே வந்திருக்க அதற்குப் பண்டையுரையாசிரியர் ''ஆம்பற்றண்டாற் செய்த வளையணிந்த கையினையுடைய மகளிர்'' எனப் பொருள் தந்துள்ளார். வள்ளியைத் தண் டெனக் கொள்ளாது தொடியின் பொருளாகத் தரப்பட்ட வளையென மருண்டது யாதுபற்றியோ? வள்ளி கொடி யெனும் பொருளைத் தருமென்பதற்கு

''வள்ளி மருங்குல் வயங்கிழையணிய'' (புறம். 316 : 9)

''மலர்ந்த வள்ளியங் கானம்'' (ஐங்குறுநூறு 250)

முதலிய அடிகள் சான்ரும்.

"நறுமலர் வள்ளிப் பூ நயந்தோயே" என்னும் 14-ம் பரிபாடலடியில் (22) வள்ளி, வள்ளிநாயகியையும் கொடி யையுஞ் சுட்டி இரு பொருண்மைப்பட நிற்பது வெளிப்படை.

## 41. "உகை"

''கயலார் நாரை யுகைத்த வாளை'' (புறம். 354 : 5)

என்னும் அடிக்கு "கயன் மீனை உண்ணுகின்ற நாரையை உகைத்த வாளைமீன்" என்று பொருள் கூறியிருக்கின்றனர். நாரையை உகைக்கும் வாளைமீன் யாரும் கண்டறியா ஓர் இயற்கை விசேடமே! உயர்வு நவிற்சியணியே அணியாகக் கொண்ட பிற்காலப் புலவர் வாக்கில் இவ்வித இயற்கை முரண் உதிப்பது சாதாரணமேயாயினும் பண்டைப் புலவர் செய்யுளில் இப்பொருள்கோள் நெறியைக் கையாடுதல் வழுக்குரை விளைப்பதாமே. உகைத்த, செலுத்திய, உதறித் தள்ளியவெனப் பொருள்தர, இங்கே எடுத்துக்கொண்ட வடி, கயல்மீனை உண்ணும் நாரை (விழுங்கமாட்டாது) உதறியெறிந்துவிட்ட வாளைமீன் என்ற இயற்கையோ டொட்டிய பொருளைத் தெள்ளிதில் தரக் காணலாம்.

உகு, உகுத்தல், உகை, உகைத்தல் என்பவை பொதுவில் இடப்பெயர்ச்சி வகைகளை உணர்த்தும் மொழி களாகும்.

இதனோடு மலைபடுகடாம் அடிகளை (145-148) ஒப்பிடுக.

" தீயினன்ன வொண் செங் காந்தட்
டுவற் கலித்த புதுமுகை யூன்செத்
தறியா தெடுத்த புன்புறச் சேவ
லூஉ னன்மையி னுண்ணு துகுத்தென."

இங்கே 'உகைத்து' என்பது 'உகுத்து' என்ற வுருவத் தோடு நிற்கின்றது; எனினும் பொருள் வேறுபடாதிருப்பது நன்கு விளங்கும்.

## 42. "களரி"

" களரி பரந்து கள்ளி போகி " (புறம். 356 : 1)

இதில் 'களரி'க்குக் காடெனப் பொருள் வரைந்தனர். எவ்விதக் காடெனக் குறித்தாரில்லை. பிற்கால நிகண்டு களில் தரப்பட்ட பொதுப் பொருளை எடுத்துக் கூறுதல் பண்டை இலக்கியப் பொருள் கோளில் தவறிழைக்கு மென்பது ஒருதலை. உவர் பொங்கிப் பரந்த பாழ்நிலமே களரியெனப்பட்டது. காடென ஓரிடத்துப் பிங்கலந்தை கூறினும், பிறிதோரிடத்தில் " கரம்பு களரி பெரும்பாழ் நிலமே " என்று விளக்கியிருப்பதனையும்,

" உளரென்னு மாத்திரைய ரல்லார் பயவாக்
களரனையர் கல்லா தவர் " (குறள். 406)

என்னும் குறளாசிரியர் பிரயோகத்தினையும் நாம் இங்கு மனக் கொள்ளவேண்டும். இவ்விதப் பாழ் நிலமே பண்டைக் காலத்திற் சுடுகாடாகவும் இடுகாடாகவும் இருந்தமையால் அதனையே பிங்கலந்தை காடென்று கூறிற்றென எண்

ணற்கும் இடமுளது. எங்ஙனமாயினும் மரச்செறி வோங்கிய காட்டை அம்மொழி சுட்டவில்லையென்பது தேற்றம். 'களரி' என்னுஞ் சொல் பின்னர், போர்க்களத்தையும், பணிக்களரியையும், அரங்கத்தையும் குறிக்க வந்ததேனும் 'களர்' என்ற அடியிற் பிறந்த அளர், அளம் என்பவைபோல உவர்ப்பாடாய நிலக்கூறுபாட்டையே முதன் முதல் அது உணர்த்தியிருக்க வேண்டும். களரி பரந்ததென்றால் உவர் பரந்ததென்பதே. செடி கொடிகள் தழைத்துக் காடு படாதிருப்பதே களர்நில இயற்கை. இதனைக் கீழே தரப்படும் அடிகள் நன்கு விளக்கும்.

" கள்ளி போகிய களரியம் பறந்தலை " (புறம். 225 : 7)

இதற்கு "கள்ளியோங்கிய களர்நிலமாகிய பாழ்பட்டவிடத்து" என்று உரைவரைந்தனர் பண்டையுரையாசிரியர்.

" அதளெறிந்தன்ன நெடுவெண் களரி
ஞெருவ ஞட்டும் புல்வாய் போல " (புறம். 193 : 1-2)

" ... ... ... ... ...காழியர்
கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழியக்
களரி பரந்த கன்னெடு மருங்கின் " (அகம். 89 : 7-9)

" பைங்கண் யானைப் பரூஉத்தா ளுதைத்த
வெண்புறக் களரி விடுநீ றாடி " (நற்றிணை 41 : 1-2)

இவற்றிலடங்கிய வருணனையாலும், ஆடியெனக் காட்டும் அடைமொழிகளினாலும், காடில்லா நிலமே களரி என்பது எளிதிற் பெறலாம். களரி இங்ஙனம் பாழ்நிலத்தைக் குறிப்பதாயிருக்க அதற்குக் காடெனப் பொருள் தருவது பொருந்துமா ?

## 43. " வைகல் "

" காடுமுன் னினரே நாடு கொண்டோரும்
நினக்கும் வருதல் வைக லற்றே " (புறம். 359 : 8-9)

இதில் 'வைகல்' 'கழிதல்' என்றனர். இச்சொல்லுக்கு இப் பொருள் எங்ஙனம் வந்ததோ தெரியவில்லை. 'கழிவு நாள்' என்பது பிங்கலந்தை வைகலுக்குத் தந்த பரியாய பதம். கழிவு நாளெனின் யாது? நெருநல், நேற்று என்னும் நாளா? அன்றி நாட் பகல் கழிவுற்ற நேரமா? இவற்றுள் முன்னைய பொருளில் 'வைகல்' வந்திருக்கின்றதெனக்கூற இடமில்லை. அதனால் அதன் பொருள் 'கழிவு பெற்று முடியப் போகும் நாள்' என்றே முடிக்கவேண்டும். 'வைகல்' என்னும் மொழி இப்பொருளில் இன்றும் மலைநாட்டாரிடை வழங்கி வருகின்றது. எனினும் தமிழ் நாட்டில் இப்பொருள் வழக்கு பிற்காலத்து இறந்து போயிற்றென்றே கூறலாம். சூரியன் உதிப்பதற்கு முன்னிகழும் விடியற்காலத்தை வைகறை யென்றும், அது அத்தம் சென்றடைவதற்கு முன்னிகழும் சமயத்தை வைகல் என்றும் பண்டே வழங்கி வந்தனர். இச்சொற்களின் அடியாய 'வைகு' என்ற பதம் 'தங்கு' என்ற பொருளைத் தருவது ''வைகுறு விடியல்" (புறம். 233:8) "வைகுபுலர் விடியல்" (அகம். 37:5) "வைகார்ப்பு" (பதிற்றுப் பத்து 41 : 22) முதலிய தொடர்களால் வெளியாம். வைகல் முதன்முதல் இரவினைச் சுட்டிப் பின் ஒரு நாள் முழுவதை யுமே சுட்டிற்றெனலாம். ஆயினும் பண்டைப் புலவர் வழக்கில் வரும் வைகலுக்கும் பிற்காலத்தார் பிரயோகித்த வைகலுக்கும் ஒரு வேற்றுமையுண்டென ஊகிக்க இட முளது. பிற்காலத்தார்க்கு வைகல் எல்லா நாளையுஞ் சுட்டினும் பண்டைப் புலவருக்கு தங்கிவரும் பின்னுளை மட்டிலுமே சுட்டிய பதமாக அது நின்றிருக்க வேண்டும்.

" இன்னு வைகல் வாரா முன்னே " (புறம். 363 : 16)

என்னுமடியை நோக்குக. இம்முறைப்படி, எடுத்துக் கொண்ட இரண்டடிக்கும் உரைதரின் "நினக்கும் நின் வாழ் நாளின் இனிவரும் நாட்களில் அங்ஙனமே வரும்" என்று பொருள் கூறவேண்டும். இது பொருத்தமாய உரையாகவு மிருக்கும்.

பகல், பகு + அல், அல்லைப் பகுப்பதெனவும், வைகல், வைகல், வைகு + அல், அல்லது இருள் தங்குவதெனவும் பகுதியடி பிரித்துக் கூறுதலும் இழுக்காது.

## 44. " வெள்ளென "

" கொள்ளென விடுவை யாயின் வெள்ளென
வாண்டுநீ பெயர்ந்த பின்னு
மீண்டுநீடு விளங்குநீ யெய்திய புகழே " (புறம். 359 : 16-18)

இதில் 'வெள்ளென' என்பதற்கு யாவர்க்குந் தெரிய' வென பொருளுரைத்தனர். புறம். 207-ம் பாடலடியில்* வரும் 'வெள்ளென' என்னும் பதத்திற்குப் பண்டையுரையாசிரியர் கூறிய பொருளை இங்கே பின்பற்றினரெனத் தெரிகின்றது. ஆயின் அப்பொருள் இங்குப் பொருந்துவதன்றெனக் காட்டல் எளிதே. "யாவரும் அறிய மாண்ட பின்" என்று கூறுவதனல் வரும் பொருட் சிறப்பு யாது? சிலர் அறியாமலும் மாள்லாம் என்ற கொள்கையை அகற்றவோ? வெள்ளென என்பதற்கு 'வெறுமையுற' வென்று பொருள் கூறலே சிறப்பு. (இவ்வுலகம்) வெறுமையுற நீ (நின்னுடலுமுயிரும்) பெயர்ந்து அங்கு ஏகினும், நின் புகழானது இங்கு நிலைபெற்று நெடிது விளங்கும் எனக் கொள்வது கவிஞரின் உட்கிடையை நன்கு காட்டும். நின் புலாலுடம்பு நீங்கலால் உலகம் வெறுமையுறினும் நின் புகழுடம்பால் பின்னர் அது நிரம்பி நிற்குமென்பதே புலவர் இங்கே வற்புறுத்திய பொருள்.

வெளி, வெள்ளிடை, வெள்ளில் (பாடை), வெள்வசி (வெறும் பிளப்பு) முதலிய மொழிகள் வெறுமைப் பொருள் பயந்து நிற்பது இங்கு ஒப்பிடத்தக்கது.

---

* " உள்ள முள்ளவிந் தடங்காது வெள்ளென
நோவா தோன்வயிற் றிரங்கி
வாயா வன்கதிக் குலமருவோரே." (புறம். 207 : 9-11)

# 45. " வளி வழக்கு "

" வளிவழக் கறுத்த வங்கம் போல " (புறம். 368 : 9)

என்னும் உவமான வாக்கியத்திற்குக் 'காற்றால் போக்குதலொழிக்கப் பெற்ற கப்பல்போல' வென்று பொருள் கூறியிருக்கின்றனர். அதாவது காற்று மிக்கு வீசியதால் செல்லுதல் தடையுற்றுக் கிடக்கும் கப்பல்போல வென்பதே. வளி வழங்கி வங்க வழக்கத்தை அறுத்த தெனப் பொருள் கொள்வதே இது. விளக்கப் புகுந்த உவமேயங்கொண்டு ஆராய்ந்து நோக்கின், கவி உத்தேசித்த உவமானம் இஃதன்றென்பது வெளியாம். உயிர் துறந்தமை யால் இயக்கமற்றுக் கிடக்கின்ற குதிரைகளுக்கெடுத்த உவமானமாதலினால், காற்றில்லாது ஓடுதலற்றுக் கிடக் கின்ற (பாய்மரக்) கப்பல்போல என்பதுதான் பொருத்த மான பொருள். உவமேயத்திலும் உவமானப் பொருளிலும் இயக்கும் சக்தியாய உயிர் அல்லது காற்று இல்லாதாகல் தான் அவற்றுள் நிகழும் சாதாரண தருமம். இவ்வடியும் திணைமொழி ஐம்பது 1!-ல் வரும் "வழி நீரறுத்த சுரம்" என்னுமடியும் செய்வினையைச் செயப்பாட்டு வினையாய்த் திரிப்பதாய ஒரே இலக்கணவமைதி பெற்று நிற்கின்றன. 'வழி நீரறுத்த சுரம்' வழி நீரறுக்கப்பட்ட சுரமெனப் பொருள் தந்ததுபோல் 'கால் வழக்கறுத்த வங்கம்' என்ப தனைக் கால்வழக்கு அறுக்கப்பட்ட வங்கமென்று கொள்ள வேண்டும். இங்கே கால் வழக்கு என்னும் ஒரு சொன்னீர் மைபட்ட தொடரை மூன்றும் வேற்றுமையுருபும் பொருளு முடன் றொக்க தொகைநிலை என்னலாம். பதிப்பாசிரியர் இங்ஙனம் கொள்ளாது இத்தொடரைப் பிரித்து கால் வழக் கறுத்த வங்கமெனக் கூறினர், அதாவது கால் வங்க வழக்கை அறுத்ததென்று. இவ்வாறுரைக்க சொல்லிலக் கணம் இடந்தரினும் பொருண்முறையில் உவமானச் சிதைவு அதனால் ஏற்படுவது வெளிப்படை 'கால்' என்ற எழுவாய் இங்கே கால் வீசுதலைக் குறிக்குமேயன்றி கால்

இல்லாமையைச் சுட்டாது. இப்பண்பும் இயங்குதல் இல்லாமையோடு சாதாரண தருமமாய்ப் புலவரது பாட்டில் அமைவதால் பதிப்பாசிரியர் தந்த பொருள் பொருத்தமிலதாய் முடிகின்றது.

## 46. “வேய்வை”

“ தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணு விருந்திற் போர்வை
யரிக் குரற் றடாரி (புறம். 369 : 19–21)

இதில் ‘தேய்வை வெண்காழ்’ சந்தனக் கட்டை யென்றும், ‘வேய்வை’ குற்றமென்றும் பொருள் கூறியிருக்கின்றனர். சந்தனத்தின் வெள்ளிய கட்டைபோன்று வெண்மை வாய்ந்த போர்வையெனினே உவமானம் பொருந்தும். ‘வேய்வை’ குற்றமெனப் பிங்கல முதலிய நிகண்டுகளிற் காணவில்லை. பொருநராற்றுப்படை 17-வது அடிக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையை மேலே தந்த பொருட்கு ஓர் சான்றெனக் கருதியிருக்கவும் கூடும்.

“ ஆய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பின் ” (பொருந : 16–17)

இதற்கு “அழகினையுடைய தினையரிசியிற் குற்றலரிசியை ஒத்த குற்றம் போகிய விரலாலசைக்கும் நரம்பு” என்று நச்சினார்க்கினியர் பொருள் தந்தனர். இங்கே ‘குற்றம்’ என்ற சொல் வடிக்கப்பெரு நரம்பின்மேல் போர்த்த ‘கொடும்பு’ அல்லது ‘சிலும்பு’ என்பதனைக் குறிக்கும். நரம்பு, கயிறு முதலியன அரிலற உருவப்படுதலைத் தீற்றலெனவுங் கூறுவர். மதுரைக் காஞ்சி 732-ம் அடி “கொல்லேற்றுப் பைங்தோல் சீவாது போர்த்த மாக்கண் முரசம்” என்பதற்கு ‘கோறற்றொழிலையுடைய ஏற்றினது செவ்வித்தோலை மயிர் சீவாமற் போர்த்த பெரிய

கண்ணையுடைய முரசம்' என்று பொருள் வரைந்தனர் நச்சினர்க்கினியர். நற்றிணை 93-ம் செய்யுளிலும் மயிர் சீவாத தோலையுடைய முரசத்தைச் சுட்டியே "மயிர்க்கண் முரசம்" (11) என்ற தொடர் வந்திருப்பதனையும் நோக்குக. சீவுவதற்குமுன் தோல்மேற் போர்த்திருப்பனவற்றையே "வேய்வை" யென்று புலவர் கூறினர்; சீவுவதால் இவ் வேய்வை நீக்கப்பட்டுத் தோல் குற்றம் நீங்கிற்றென உரைத்தனர் உரையாசிரியர். ஆகவே, வழுவெனும் பொருளில் வரும் 'குற்றம்' என்ற பதத்தை வேய்வைக்குப் பரியாயப் பெயராய்க் கொள்ள நச்சினர்க்கினியர் உரையும் இடந்தராது.

## 47. "போழ்"

"நாரும் போழுஞ் செய்துண் டோராங்கு" (புறம். 370 : 2)

என்னுமடியை விளக்குவான் 'போழ்' பனங்குருத்தென்றும், 'உண்டு', சுவைத்துண்டென்றும் பதிப்பாசிரியர் பொருள் கூறலாயினர். 'செய்து' என்னும் வினையெச்சச் செறிவால் ஏற்பட்ட பொருளைக் கவனியாது விடுத்தது எதனலோ? இவ்வடிக்குப் பனைநாரையும் பனங் குருத்தையுஞ் சுவைத் துண்டெனப் பொருள் எழுதியது அக்கால மனிதரை மிருக நிலையினின்றும் ஒரு படியேனும் உயர்ந்தாரல்லரெனக் காட்டுதற்குப் போலும்! 'போழ்' பனங்குருத்தென்பது வழுப்பொதியுரையாம். தமிழ் நிகண்டுகளிலோ இலக்கிய நூல்களிலோ அச்சொல் குருத்தென்னும் பொருள் தரக் காண்கிலம். வகிர், பிளப்பு, தோடு என்னும் பொருளை அது தந்ததெனப் பெரும்பாணுற்றுப்படை 307, மலைபடு கடாம் 198, கலித்தொகை 22 : 21 முதலிய பாடலடிகள் தெளியக் காட்டும். புறம். 82 : 4 "போழ் தூண்டுசியின்" என்ற தொடரிலும் போழ், வார் என்னும் பொருளையே பயந்தது. எடுத்துக்கொண்ட அடிக்குச் சரியாய பொருள்:— பனைநார், பனையோலைப் போழ் முதலியவற்ருற் செய்யப்படும்

பொருள்களை விற்றுண்டென்பதே. இங்ஙனமிருக்க, நாரை யும் குருத்தையும் சுவைத்துண்டெனக் கூறுதல் பொருளை முற்றிலும் திரிப்பதன்றோ ?

" கட்டி னிணக்கு மிழிசினன் கையது
போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ " (புறம். 82:3-4)

என்னுமடிகள் பனம் போழாற் கட்டிலைப் பிணிக்கும் புலை மகனைக் காட்டி அக்காலத்துக் கையாடப் பெற்ற ஒரு தொழிலையும் விளக்கின. புறம். 375 : 5ம் அடியும்* இதனையே குறித்தது. இவ்விதத் தொழில் அக்காலத்து நடைபெற்றிருந்ததெனக் கலித்தொகையும் சான்று பகர் கின்றது.

" மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழிற் புனைந்த வரிப்புட்டில் (கலித்தொகை, 117 : 8)

என்னுமடிகள் மேலே தந்த உரையினை வலியுறுத்தும்.

## 48. " வாள்மடல் "

" எருது களிறாக வாண்மட லோச்சி " (புறம். 370 : 16)

'வாள்மடல்' என்ற தொடருக்குப் பனங்கருக்கெனப் பொருள் கூறினர். வாள்போன்ற மடல் அல்லது மட்டை யென்று பொருள் தருவதே பொருத்தம். எருதைத் துரத்து வோன் கைக்கொள்ளும் கோல் அல்லது கழியைத்தான் இங்கு மடலெனப் புலவர் கூறினர். போர்க்களத்தை ஓர் நெற்களத்தோடுவமிக்கப் புக்க கவிஞர் வீரர் கைக்கொண்ட வாளை எருது துரத்தும் மடலென உருவகப் படுத்தினர். மடலும் வாள்போல் கூரியதாயிருக்க வேண்டுமெனக் கருதின் கருக்கு மட்டையெனக் கூறுது பனங் கருக்கெனத் தருதல் குன்றக்கூறிக் கருத்து வேறுபாடுறச் செய்வதேயாம்.

* " நாரும் போழுங் கிணையொடு சுருக்கி "

## 49. "பறவை"

" பழு மர முள்ளிய பறவை போல " (புறம். 370 : 11)

இவ்வடியின் பொருள் வெளிப்படையே. இதனை விளக்கப் பொருநராற்றுப்படை மேற்கோளும் எடுத்துத் தந்தனர். அங்கு நச்சினார்க்கினியர் வரைந்திருக்கும் உரை யாவது:—"பழுத்த மரத்தை நினைத்துச் செல்கின்ற புட் போல" என்பதே. இந்த மேற்கோளையுந் தந்து, பொருளை இதனினும் திருத்தி விளக்குவார்போல "பழுத்த மரத்தை நினைத்துச் செல்கின்ற வௌவால்" என்றனர். வௌவால் இங்கே எங்ஙனம் புகுந்ததோ விளங்கவில்லை.

" மரம் பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
யிரந்தழைப்பார் யாருமிங் கில்லை "

என்னுமடிகளைத் தொடர்ந்தா, அன்றி, கிளி, குயில் முதலிய புட்கள் எல்லாவற்றையும் நீக்கக் கருதியா, இவ்வுரை தரப் பட்டது? எனினும், 'பறவை' என்ற பொதுப் பெயர்ச் சொல் 'வௌவால்' என்னும் சிறப்புப் பொருள் பயக்க இவ்வடி இடந்தரவில்லை.

## 50. "இறை நல்கும்"

" விருந்திறை நல்கும் நாட னெங்கோன் " (புறம். 374 : 15)

" விருந்திறை நல்கியோனே " (புறம. 392 : 19)

முன்னைய அடியில் 'இறை நல்கும்' என்பதனை 'இறுக்கும், கொடுக்கும்' எனக் கொண்டார். அங்ஙன மாயின் விருந்து கொடுக்கும் நாடன் எம்மிறைவன் என்று அவ்வடி பொருள்படும். பொருள் சிறக்க வேண்டுமாயின் விருந்ினர்க்கே திறை கொடுக்கும் எம்மிறைவன் எனக் கொளல் வேண்டும். பிற அரசர்களுக்கு இவன் திறை

கொடுத்த விலாதவன் என்ற குறிப்புப் பொருள் பயக்கு மாறு விருந்தை விருந்தினரென்றெடுக்க வேண்டிய திருக்க, அம்மொழியைக் கேவலம் ஓர் தொழிலின் பெயராயெண்ணிப் பொருள் கொள்வது அத்தொனிப் பொருளைத் தர மாட்டாது. கொடு, செலுத்து என்ற அர்த்தம் பயக்கும் 'இறு' என்னுமடியினின்று 'இறை' உதித்ததேயாயினும், 'திறை'ப் பொருளையும் இலக்கிய வழக்கில் அது சுட்டுவதாம். இப்பொருளைத் தள்ளிவிட்டுத் தாதுப் பொருள் கூறுதல் இலக்கியப் பொருண் முறையாகாது. சொல்லுற்பத்தியை விளக்கத் தாதுப் பொருள் தரல் வேண்டுமேயன்றி இலக்கியப் பொருள் விளக்கத்தில் அதனைத் தருதல் அநேக இடங்களில் உண்மைப் பொருள் இழத்தற்கும் செய்யுள் வனப்பைச் சிதைத்தற்கும் ஓர் பெரு வழியாயமையும்.

## 51. " புதவு "

" புனலம் புதவின் மிழலையொடு " (புறம். 24 : 19–20)

" நிறைக்குளப் புதவின் மகிழ்ந்த னெஞகி " (புறம். 376 : 20)

அரும்பத முதலியவற்றின் அகராதி 596-ம் பக்கத்தில் 'புதவு' என்ற சொல்லுக்கு 'கதவு' என்னும் பொருள் கூறப்பட்டிருக்கின்றது. இதற்குச் சான்று புறம். 24, 376-ம் பாடல்களெனவுஞ் சுட்டினர். இவ்விரண்டு பாடல்களிலும் 'புதவு' என்னுஞ் சொல் 'கதவு' என்ற பொருளைத் தரவில்லையென்பது வெளிப்படை. 24-வது பாடலுக்கு உரையெழுதிய பண்டையுரையாசிரியர் புதவென்பது 'வாய்த்தலை' என்று தெளிவாகப் பொருள் கூறியிருக்க, 376-ம் பாடலுக்கு உரையெழுதப் புக்க பதிப்பாசிரியர் 499-ம் பக்கத்தில் அச்சொல்லை குளத்தின் வாய்த்தலையென்று குறித்துவிட்டு, 596-ம் பக்கத்தில் 'கதவு' என்று பொருள்படுத்தினது திகைப்புக்கு இடமாகின்றது. வாய்த்தலை என்ற சொல்லின் பொருள்தான் உள்ளவாறுணரப்

பட்டதோவென யாரும் ஐயுறுவர். 'புதவம்' என்னுஞ் சொல் பிற்காலத்தே பெற்ற கதவெனும் பொருளை இப் பாடல்களிற் பொருத்தி இடர்ப்பட்டது அவ்வையத்தை வலியுறச் செய்யும்.

> " காவிரி புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
> யோவிறந் தொலிக்கும் ஒலியே யல்லது "
> (சிலப். நாடுகாண் காதை, 108–109)

என்னுமடிகள் வாய்த்தலையின் பொருளை மருட்சிக்கு இடனின்றித் தருகின்றன. இது தற்காலத்தில் மடை, மடை முகம், மதகு எனப் பல பெயரால் வழங்கிவருகின்றது. இதிலிருந்து பிரிந்தோடும் நீர்க்காலுக்கு 'வாய்க்கால்' என்று பெயர். வாய்த்தலை, வாய்க்கால் என்பவற்றின் வேற்று மையை, சிந்தாமணி நாமகளிலம்பகம் 40-ம் செய்யுளுரைக் கண் நச்சினார்க்கினியர் நன்கு விளக்கியிருக்கின்றனர். ஓர் இல்லின் வாயிலையும் ஓர் குளத்தின் மடையையும் 'புதவு' என்ற சொல் முதன்முதற் குறித்ததெனச் சொல்லலாம்.

> " உயர்ந் தோங்கிய நிரைப் புதவின்
> நெடுமதி னிரைஞாயில் " (மதுரைக்காஞ்சி, 65–66)

> " புனல் வாயில் பூம் பொய்கை " (பதிற்றுப்பத்து, 13 : 8)

> " கேழலுழுத விருஞ்சேறு கிளைப்பின்
> யாமையின் புலவு நாறு முட்டையைத்
> தேனா ரும்பற் கிழங்கொடு பெறூஉ
> மிழுமென வொலிக்கும் புனலம் புதவிற்
> பெருமா விலங்கை " (புறம். 176 : 2–6)

> " புதவக் கதவம் புடைத்தன ரொருநாள் "
> (சிலப். கட்டுரை காதை, 43)

முதலிய அடிகள் இதனை நன்கு காட்டும். இதன்பின் வாயிலின் கதவுக்கும் மதகின் நீரையடைக்கும் பலகைக்கும் 'புதவு' அல்லது 'புதவம்' ஒரு பெயராய் முடிந்தது.

உதாரணம் :—

" பொய்கை வாயிற் புனல்பொரு புதவின் " (பதிற்று. 27 : 9)

" புதவம் பலவுள போகிடை கழியன
வொட்டுப் புதவமொன் றுண்டத னும்பர்
(சிலப். காடுகாண் காதை, 119–120)

பட்டினப்பாலை 243 : "கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடி" என்னு மடியில் வரும் 'புதவம்' எழுதினரது பிசகால் வந்ததேயாம். அதன் மெய்யுருவம், அறுகம் புல்லென்ற பொருள் தரும் 'பதவம்' என்றேயிருக்க வேண்டும். அகநானூறு 14-வது பாடலில் வருஞ் சொல்லோடு ஒப்பிடுக.*

இவ்வாறு கதவு, மதகுப் பலகை எனப் பல பொருளைப் 'புதவு' என்ற சொல் தரினும், புறநானூறு 24, 376-ல் வரும் அச்சொற் பிரயோகத்திற்கு 'வாய்த்தலை' அல்லது 'மடைமுகம்' என்றே பொருள் கொள்ளல் பொருத்த முடைத்து.

'புதவு' என்னுஞ் சொல் தொளை, துவாரம் எனப் பொருள் தரும் 'புத்' என்ற பண்டைப் பண்படியினின்று பிறந்ததென்னலாம். புதை, பொத்தல், பொந்து, புரை, புற்று முதலிய சொற்களனைத்தும் இவ்வடியினின்றும் உதித்து வேறுபட்டனவேயென ஊகிக்க இடமுண்டு.

## 52. " கதழிசை "

" கதழிசை வன்க ணினர் " (புறம். 377 : 27)

இதில் 'கதழிசை' என்பதை 'விரைதல் பொருந்திய' வென்று பதிப்பாசிரியர் பொருள் கொண்டார். ஆயின், எடுத்துக்கொண்ட அடியின் பொருள் 'விரைந்து செல்லும் வன் கண்ணினர்' என்பதாம். விரைந்த செலவுக்கும் வன் கண்மைக்கும் ஒரு பொருத்தமிருப்பதாகத் தெரியவில்லை. இப்பொருண் முறையால் அடி பொருட் சிறப்புப் பெற்ற

---

* " பதவுமேய லருந்து மதவு நடை நல்லான் " (14 : 9)

தெனக் கூறவும் இடமில்லை. இத்தொடரை 'விரைந்திசைக்கும் அல்லது உரையாடும் தறுகண்மையை யுடையார்' என்று பொருள் கொண்டால் பொருட் பொலிவோடு வாள் வீரரின் தறுகண்மைக்கும் அவரது சினக் குறிப்பாய விரைந் துரையாடற்கும் ஒரு பொருத்தமும் ஏற்படும். 'இசை' என்பதனைப் 'பொருந்திய' வெனக் கொள்ளாது 'இசைக்கு' மெனக் கொள்ள வேண்டும்.

அடியில் 'கதழ்வு' என வந்திருப்பின், பதிப்பாசிரியர் கூறிய 'பொருந்திய' என்ற உரை ஒருகால் இலக்கண வழியிலேனும் இயைவதாகும். 'கதழ்' என்னும் உரிச்சொல் லுருவத்திலேயே* அம்மொழி அடிக்கண் ணிற்றலினலும், அதனை ஓர் பெயர்ச் சொல்லாய்க் கோடல் அமையாதாதலாலும், 'கதழ் பொருந்திய' வெனக் கூறவியையாது. 'பொருந்திய' என்பதனைப் பொருத்த வேண்டுமேல், 'கதழ்வு' என்ற பண்புப் பெயர் உருவத்தில் 'கதழ்' என்னும் உரிச்சொல்லை மாற்ற வேண்டும். தமிழ் இலக்கணப் பரப்பில் உரிச் சொற்களும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பண்புப் பெயர்களும் வேற்றுமை பாராட்டப் பெருது பெரிதும் விரவலுற்றுக் கிடக்கின்றன.

## 53. " தொழுவர் "

" நெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கில் " (புறம். 379 : 3)

இவ்வடியில் 'தொழுவர்' என்பதனைத் தொழில் செய்வோரெனப் பொருளெழுதினர். இது நச்சினர்க்கினியருரையைப் பின்பற்றியதேயாம். புறநானூற்றுரையாசிரியர் தொழுவர் என்பதை உழவர் என்று கொண்டனர். இவ் வேற்றுமை ஒருபுறமிருக்க, தொழிலென்ற பொருளில்

---

* " கார்மலி கதழ்பெய றலைஇ யேற்ற " என்னும் பரிபாடலடிக்கு (14 : 1) உரையெழுதிய பரிமேலழகர் உரிச்சொல்லுருவத்தில் வைத்தே "மிக்க கதழ்பெயலை மேகம் பெய்தலால்" என்றெழுதியதனையும் நோக்குக.

'தொழு' வந்திருப்பதாகத் தெரியவில்லை. கூட்டத்தைக் குறிக்கும் தொழு (தொழுதி) என்னுமடியினின்று பிறந்த 'தொழுவர்' என்னுஞ் சொல்லை, 'கூட்டத்தார்' என்று கொள்ளல் பொருத்த முடைத்தெனத் தோன்றுகின்றது.

" நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர் " (புறம். 209 : 2)
" நெல்லரியு மிருந்தொழுவர் " (புறம். 24 : 1)

என்னுமடிகளிலும் இப்பொருள் இயையும். அன்றி, பசு, எருது நிரைகளையுடையாரென்றும் பொருள் கூறலாம். புறம். 320 : 5-ல் வரும் "தீர் தொழிற் றனிக்கலை" என்ற தொடர் 'தொழில்' என்னுஞ் சொல்லுக்குக் கூட்டப் பொருளுமுண் டென நன்கு விளக்கும். பதிப்பாசிரியர் இதற்கு 'தொழில் தீர்ந்த ஆண்மான்' என்று பொருள் கூறினரேனும், தன்னின மாகிய மான் கூட்டத்தைப் பிரிந்து தனித்த ஆண்மான் என்று விளக்கிக் கூறியிருக்கலாம். அகம். 252 : 11 "தொழின் மழை பொழிந்த பானாட் கங்குல்" என்னு மடியிலும் 'தொழில்' மிகுதிப் பொருள் தந்ததெனக் கொள்ள இடமுளது. மிகுதிப் பொருளைத் தரும் 'கணமழை' என்ற தொடரையும் இதனோடொப்பிடுக. தொழு, 'தொழில்' என மாறியதுபோல் தொழுதி, தொடுவென வேறு பல்லுருவத்திலும் வரும்.

" இரும் பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா " (புறம். 44 : 1)
" கடுவய நாகுபோ னோக்கித் தொடுவாயில் "
(கலித்தொகை, 116 : 6)

என்னுமடிகளின் பிரயோகங்களை நோக்குக. தொடு 'தோடு' என்ற உருவத்தோடு தொகுதியைச் சுட்டிற்று. உதாரணம் :—

" கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோடு "
(ஐங்குறுநூறு, 333)
" தோடமை யரிச்சிலம் பொலிப்ப " (அகநானூறு 49 : 17)
" அரிமான் வழங்குஞ் சாரற் பிறமான்
றோடுகொ ளினநிரை." (பதிற்றுப்பத்து, 12 : 5–6)

'செயல்' என்னும் பொருளில் வரும் தொழிலும் முதன் முதல் கூட்டச் செயலேயே குறித்திருக்கவேண்டுமென் றூகிக் கலாம். தொழு, 'தொறு' வென்ற உருவத்திற் பசு நிரையை உணர்த்திப் பின் அந்நிரை நிற்பதற்கான இடத் தையும் உணர்த்தினதெனக் கொள்ளலாம். தொழுகு, தொழுவு, தொறுவிடம், தோழம் என்பன பிங்கலந்தை கூறுமாறு 'தொழு'வின் பரியாயப் பெயர்களாம். வணங் குதல் என்னும் பொருள் தரும் 'தொழுதல்' கூட்டமாய்ச் சேர்ந்து வணங்கலேயே ஆதியிற் குறித்திருக்க வேண்டும். கன்று காலியின் திரள் நிற்கும் இடத்திற்கு 'தொடுகு', 'தொறுப்பட்டு' எனப் பெயர் வழங்கலும் இங்கே கவனிக்கற் பாலது.

பண்டை இலக்கியங்களை விளக்கப் புகுந்த உரையாசிரி யர்களின் உதவியால் இக் கொள்கையை நிலைநிறுத்தல் சாலாது. அவ்விலக்கியங்கள் தோன்றி எத்தனையோ நூற் றுண்டுகள் கழிந்த பின்னர்தான் இவ்வுரையாசிரியர்கள் தோன்றி உரை வகுக்கலாயினர். பண்டை இலக்கியங்களை உள்ளவாறுணர இவர்களுரை பெருங் கருவியாயிருப்பினும், பிற்காலத்திற் பண்டை வழக்காறுகள் பல ஒழிந்து போயினமையால், சில விடங்களில் இவ்வாசிரியர்களும் திகைக்கத்தக்க சந்தர்ப்பங்களும் ஏற்படுகின்றன. இஃதன் றியும் பண்டையுரையாசிரியர்கள் இலக்கிய உரையாசிரியர் களே தவிர மொழி வளர்ச்சித் தத்துவங்களை விளக்கப் புகுந்த மொழி நூலாளர்க ளாகார். அதுபற்றி இங்கே கூறப்பட்ட விஷயம் ஒரு தலையாக முடிவு செய்து நிறுத்த இடம் பெருது போயினும், தமிழறிஞர்களுடைய ஆழ்ந்த நுண்ணிய ஆராய்ச்சிக்கு இது உரித்தானதாயிருக்குமென எண்ணுகின்றேன்.

## 54. " பாணி "

" விரல்விசை தவிர்க்கு மரலையில் பாணியில் " (புறம், 381 : 14)

இதில் 'பாணியில்' என்பதற்குப் 'பாட்டால்' என்றுரை வரைந்தனர். பிற்கால நூற்பொருளுரையில் இப்பொருள் சில சமயம் பொருந்தினும் பண்டைச் செய்யுட்களுக்கு இது சிறிதும் பொருந்தாது. 'தாளத்தால்' என்றே பொருள் கூறியிருக்க வேண்டும். பாணி, இசைப் பாட்டெனத் திவா கரம் கூறிற்றேனும் அதனுள்ளமைந்த உண்மை தாளத் தோடியலும் பாட்டென்பதே. மலைபடுகடாம் 539: "விருந்திற் பாணி கழிப்பி" என்பதில் வரும் 'பாணி' விறலி யரின் பாட்டைக் குறித்தலினால் தாளத்தோடமைந்த பாட் டையே சுட்டுவதாம். தாளத்திற்குப் பெயராயிருந்த பாணி பின் தாளத்தொடுபட்ட பாட்டுக்கும் பெயராய் வந்தது; எனினும், தாளமிசையாப் பாட்டை அது சுட்ட வில்லை. எடுத்துக்கொண்ட அடியில் விரல் விசை தவிர்ப்பது தாள வரிசையோ பாட்டோவென எளிதில் உய்த்துண ரலாம்.

> "நொடி தரு பாணிய பதலை" (மலைபடு, 11)
>
> " ... ... ... ... ... தடாரி
> இரு சீர்ப் பாணிக் கேற்ப" (பொருநர். 70–71)
>
> "ஒண்ணுத லரிவையர் பாணி தூங்க" (பொருநர். 10)
>
> "பாடுவார் பாடல் பரவல் பழிச்சுத
> லாடுவா ராட லமர்ந்தசீர்ப் பாணி" (பரிபாடல், 10 : 116-117)
>
> "பாணி முழவிசை யருவிநீர் ததும்ப" (பரிபாடல், 21 : 36)

இவ்வடிகளில் வரும் பாணிக்குப் பண்டையுரையாசிரியர்கள் பாணியாகிய தாளமென்றே பொருள் கூறினமையும் இங்கே கவனிக்கத்தக்கது.

> "ஆடலும் பாடலும் பாணியுந் தூக்கும்"
> (சிலப். அரங்கேற்று காதை : 16)
>
> "பாடலு மெழாலும் பண்ணும் பாணியும்"
> (சிலப். நூற்கட்டுரை

என்னுமடிகள் பாடல் வேறு பாணி வேறெனக் காட்டும்.*

" பாணியுந் தூக்குஞ் சீரு மென்றிவை
மாணிழை யரிவை காப்ப
வாணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி "
(கலி. கடவுள் வாழ்த்து : 15-17)

என்னுமடிகளின் உரையில் தாளத்திற்குப் பாணி, சீர், தூக்கு என்ற மூன்று உறுப்புக்கள் உளவென நச்சினார்க்கினியர் நன்கு விளக்கியிருக்கின்றனர்.

மலைநாட்டில் பல கோயில்களில் 'பாணி' என்னுந் தாளக்கருவியொன்றில் தாளமமைத்துக் கொட்டுதலைப் 'பாணி கொட்டல்' என இன்றும் வழங்கி வருகின்றனர். இதனால், 'பாணி'யைப் பாட்டெனக் கூறுதல் பொருந்தாதென்பதும், இசைப் பாட்டென்னின் ஒருவிதம் பொருந்துமென்பதும், தாளம் அல்லது தாளவுறுப்பெனப் பொருள் கூறுதலே தக்கதென்பதும் பெறப்பட்டன.

## 55. " கொண்டி "

" கடற்படை யடற் கொண்டி
மண்டுற்ற மலிர் நோன்றாட்
டண் சோழ நாட்டுப் பொருந!" (புறம். 382 : 1–3)

இதில் 'கொண்டி' பொருளின் மிகுதியென்றும், 'மலிர்' நீருற்றென்றும் பொருள் கொண்டனர். இவை பொருந்துமா? போரில் வெற்றியுற்றுக் கொள்ளையிற் கொண்ட பொருளைக் குறிப்பது 'கொண்டி' என்று முன்னரே (36-வது குறிப்பு நோக்குக) காட்டப்பட்டது. அங்ஙனம் கொள்ளையிற் கொள்ளும் பொருள் பல காரணங்களால் மிகுந்திருக்கு

---

* " ஆடல் பாட லிசையே தமிழே
பண்ணே பாணி தூக்கே முடமே
தேசிக மென்றிவை யாசி னுணர்ந்து "
(சிலப். அரங்கேற்று காதை : 45-47)

மென்பது இயற்கையே. இதுபற்றித்தான் மிகுதிப் பொருளைக் 'கொள்ளை' யென்னுஞ் சொல் தருவதாயிற்று. அப்பிரயோகத்தை "கொள்ளை மழை பொழிந்தது" என்னும் சாதாரண வாசகத்திற் காணலாம். ஆகு பெயராய்ப் பொருண் மிகுதியைக் குறிக்கினும், இங்கே 'கொண்டி' என்னுஞ் சொல் சூறையாடிய பொருளைச் சுட்டிற்றென்று கொள்வதே உசிதம். 'மலிர்' நீருற்றென்னும் பொருளில் பொருத்தமான பொருள் தரக் காணோம். "மற நோன்றாள்" என்ற பாடபேதமிருக்க அதனைத் தள்ளிவிட்டுப் பதிப்பாசிரியர் "மலிர் நோன்றாள்" எனக் கொண்டதன் காரணம் யாதோ?

எடுத்துக்கொண்ட அடிகளின் திரண்ட பொருளாவது: கடல் போலும் படையையும், போரிற் கொண்ட கொள்ளைப் பொருளையும், மிக்குச் சென்ற மறத்தினையும், வன்மை வாய்ந்த முயற்சியினையுமுடைய சோணாட்டு வேந்தன் என்பதே.

## 56. "பொருநன்"

> "தண் சோழ நாட்டுப் பொருந
> னலங்குளை யணியிவுளி
> நலங் கிள்ளி நசைப் பொருநரேம்" (புறம். 382 : 3–5)

இதில் 'பொருநன்' உவமிக்கப்படுபவன் என்று நச்சினார்க்கினியர் உரையை ஒட்டி உரை வரைந்தனர். அது இங்கே பொருந்துவதன்று. பொருநன் என்னுஞ் சொல் போர்வீரனையும் கூத்தனையும் கிணைப்பாணனையுங் குறிக்கும். சந்தர்ப்பமும் அடைமொழித் தகுதியும் நோக்கிப் பொருள் வேற்றுமைப் படுத்திக் கூறவேண்டும். இங்கே முன்னைய 'பொருநன்' போர்வீரனாகிய வேந்தனையும், பின்னைய 'பொருநர்' கிணைப்பாணரையும் குறிக்கின்றன வென்பது வெளிப்படை. சிறுபாணாற்றுப் படையில் வரும் "பொரு

நர்க்காயினும் புலவர்க்காயினும்" என்ற அடியிலும் (203) 'பொருநர்' கிணைப்பாணரைச் சுட்டிற்று. இதனையொழித்து 'உவமிக்கப்படுபவன்' என உரை வரைவதால் உண்டாம் பொருட் சிறப்பு யாது? யாரோடு உவமிக்கப் படுபவன் என்னும் வினவிற்கு விடையிறுத்தலும் எளிதன்று. போர் வீரனைச் சுட்டும் 'பொருநன்', கூத்தனைச் சுட்டும் 'பொருநன்' என்ற இரண்டு சொற்களும் உருவத்தால் ஒற்றுமையுற்று நிற்பினும் பிறப்பு நோக்கின் வேற்றுமையுள்ளன வென்றறிவோம். முன்னையது 'யுத்தஞ் செய்' என்ற பொருளைத் தரும் 'பொரு' (போர்) என்ற வினையடியினின்று உதித்த பெயர்; பின்னையதோ 'ஒவ்வு' என்னும் பொருள் தரும் 'பொருவு' (போல்) என்ற வினையடியினின்று வந்த பெயர். கூத்தர்கள் நாடகபாத்திரங்களாய் அமைந்து கதை நிகழ்த்துழி அக்கதை நாயகன் நாயகி என்பாரை ஒருவிதம் ஒவ்வ நோக்குபவராதலினால் அவர் 'பொருநர்' எனப் பட்டனர். பொருதற்றொழில் செய்யாமையினாற் "பொராஅப் பொருநர்" எனவும் ஒரு புலவர் இவரைச் சாதுரியமாயழைத்தனர். ஆகவே, 'உவமிக்கப்படுபவன்' என்ற பொருள் பின்னைய மொழிக்குச் சில சமயம் பொருந்துமே தவிர முன்னையதற்குப் பொருந்துவதன்றென்பது தேற்றம்.

## 57. " காழ் "

> " எனதே, கிடைக்கா ழன்ன தெண்கண் மாக்கிணை
> கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோல்" (புறம். 382 : 18)

இதில் 'கிடைக்காழ்' நெட்டியின் காம்பென்றனர். இவ்வுவமானத்திற்குத் தக்க உவமேயம் யாதென நோக்கின், சிறுகோல் என்றே கொள்ள வேண்டும். ஆயின் கிணையடிக்கும் வன்மையுற்ற கோலுக்கு மெல்லிய கிடைக்காழை உவமானப் பொருளாகப் புலவர் கூறியிருப்பரோ வென்ற ஐயம் எழாதிருக்க விடமில்லை. 'காழ்' என்னுஞ் சொல்லின் பல்வேறு பொருள்களையும் அவை தம்முள்ளியலும் சம்பந்தத்



28. நூற்சரடு (THREAD)
27. பூமாலை (GARLAND OF FLOWERS)
26. மணிவடம் (GARLAND OF GEMS)
25. முத்து (PEARL)
24. இரத்தினம் (GEM)
23. பளிங்கு (CRYSTAL)
22. பருக்கை கல் (GRAVEL)
20. மிக்கபொருள் e.g. காழ்த்த பொருள்
21. உறைத்த சுவை e.g. காழ்த்த சுவை
HARDNESS
வன்மை
INSIDE CHARACTER
உள்ளிருக்கும் தன்மை
17. சாரம் (ESSENCE)
19. முற்றிய பகை e.g. காழ்த்த பகை
18. மனவுறுதி
(புணர்ந்துரை வகை MATAPHORICAL EXTENSION)
14. வித்து (SEED)
15. கொட்டை
16. கனியின் தோல் (அண்மை நியதி LAW OF PROPINQUITY)
(HARDNESS INSIDE CHARACTER
வன்மையும் உள்ளிருக்கும் தன்மையும்)
6. விறகு (FIREWOOD)
7. கட்டுத்தறி
8. தூண்
9. தண்டு
10. பரிக்கோல்
11. தாழ்
12. காம்பு
13. இரும்புக்கோல் (ஒப்புமை நியதி LAW OF SIMILARITY)
5. கழி (RAFTER) (பொதுவுறல் நியதி LAW OF GENERALIZATION)
மரவயிரத்தாலாக்கப்பட்ட பொருள் (ஓரியல் நியதி LAW OF IDENTITY)
4. இரும்பிலி (SATIN EBONY) (சிறப்புறல் நியதி LAW OF SPECIALIZATION)
3. மரவயிரம் (BLACK CORE OF TIMBER) (ஓரியல் நியதி LAW OF IDENTITY)
2. குற்றம் (உருவகப்பொருள் MATAPHORICAL EXTENSION)
1. காழ் (கருமைசுட்டும் உரிச்சொல்) BLACKNESS. cf காழகம் = கரிய ஆடை

தினையும் நோக்காது, 'காம்பு' என்று உரை வகுத்தல் விபரீதப் பொருள் புணர்ப்பதேயாகும். ஒரு சொல்லின் பொருள் காலகதியில் எவ்வாறெல்லாம் வேற்றுமையுற்றுப் பிரிந்துவிடுகின்றதெனக் காட்ட இந்தக் 'காழ்' என்ற சொல்லின் சரித்திரமே போதிய சான்றும். தமிழ்ப் புது அகராதியில் (Tamil Lexicon) இம்மொழியின் பொருள் களனைத்தும் தொகுக்கப் பெற்றிருப்பினும், மொழி வளர்ச்சி நூலார் ஒப்பத்தக்க விதத்தில் அவை ஆங்கு நோக்கப் படவில்லையென்பது வெளிப்படை. இம் மொழிமுதலி லின்று கிளைத்த பல்வேறு சாகைகளையும் அவை கிளைத்த முறைகளையும் எதிர்ப்பக்கத்தில் தரப்படும் படம் நன்கு விளக்கிக்காட்டும். ஜீவ சந்துக்களின் ஜனன சம்பந்தங் களைத் தெரிவிக்க ஓர் மரவுருவத்தமைந்த படம் எங்ஙனம் தகுதி வாய்ந்துள்ளதோ அங்ஙனமே மொழிகளின் பிறப் புணர்த்துதற்கும் அம்மாதிரிப் படம் பொருத்த முடையது.

எதிர்ப்பக்கத்திலே காணும் படத்தைக் கூர்ந்து நோக்கின், 'காழ்' என்னும் உரிச் சொல்லடியில் நின்று கால தேச வேற்றுமைகளினால் 28 கிளைகள் கிளைத்து, 28 வெவ் வேறு பொருள்களைச் சுட்டி நிற்கக் காண்போம். இவையெல் லாம் மாந்தர் மனத்துள் நிகழும் பல சேர்க்கை நியதிகளால் (Laws of Association) எழுந்தன வென்பது மொழிநூலார் சித்தாந்தம்.

ஓரியல் நியதி (Law of Identity)
ஒப்புமை நியதி (Law of Similarity)
அண்மை நியதி (Law of Propinquity)
வேற்றுமை நியதி (Law of Contrast)
சிறப்புறல் நியதி (Law of Specialization)
பொதுவுறல் நியதி (Law of Generalisation)

முதலிய பல்வேறு சேர்க்கை நியதிகள் அநுசரித்து இம் மொழிப் பொருள் வேற்றுமையடைந்து போயிருப்பதனைக் காணலாம். 'காழ்' என்னும் 'காம்பு'ப் பொருள் எவ்வாறு

வந்து பொருந்திற்றென்பதனையும் இப் படம் நன்கு தெளிக்கும். காழாலாக்கப்பட்ட பல பொருள்களில் ஆயுதங்களின் பிடியும் ஒன்றும்.

> " ... ... ... நோன்காழ்
> இரும்பு தலை யாத்த திருந்துதுளை விழுக்கோல் "
> (பெரும்பாண். 90-91)

என்னும் அடிகளை நோக்குக. இப்பிடியைக் (Handle) காம்பென்றும் அழைப்பர். இப் 'பிடி'ப் பொருள் தரும் காம்பைச் சுட்டுவதற்குக் 'காழ்' உதவுமேயன்றி வெற்றிலைக் காம்பை அது சுட்ட வருமா? மேற்காட்டிய அடியில் வரும் 'காழ்' என்ற சொல்லுக்குக் 'காம்பு' வெனப் பொருள் கொள்ளின் அடியிற் பொருத்தமாய பொருள் வந்தமையுமா வென்று நோக்குக. மொழியின் பிறப்பை நோக்கினும், அடியினுள் வரும் உவமான உவமேயப் பொருத்தம் நோக்கினும், 'காம்பு'ப் பொருள் இங்குப் பொருந்துவதற்கு இடமேயில்லை. அடியில் 'கிடைக் காழ்' என்ற தொடர் கிடேச்சுக் கொடியின் உட்பக்கத்தைக் குறித்து நிற்கின்றது. வெண்மையும், மென்மையும், தொய்வும் அப்பாகம் உடைத்தாயிருத்தலால் கிணையின் 'தெண்கண்'ணுக்குப் புலவர் அதனை உவமானப் பொருளாக்கினர். கருமையைக் குறிக்கும் அடியினின்றும் பிறந்த சொல்லுக்கு வெண்மைப் பொருள் வந்தியைவது எங்ஙனமென்று ஐயுற வேண்டுவதில்லை. "வெண்காழ் தாய வண்காற் பந்தர்" என்னுமடியை நோக்குக. காழ் 'ஒளி' யென்னும் பொருளையுந் தருமென இங்கே தந்த படம் காட்டும். சொற்களின் பொருள் வளர்ச்சிக் கிரமத்தில் எதிரிடைப் பொருளும் பலவழிகளில் அவற்றை வந்தணுகல் ஓர் சாதாரண நிகழ்ச்சிதானென்பது சொற்பொருளாராய்ச்சி நூலும் (Semantics) சம்மதிக்கும் ஒரு துணிவாம்.

# 58. " தண்டல் "

" யான் றண்டவுந் தான் றண்டான் " (புறம். 384 : 14)

இங்கே 'தண்டவும்' என்பதை 'நீங்கவும்' என்று பொருள் கொண்டனர். அது பொருந்தாது; அமைதல், தணிதல் எனக்கொண்டு அமையவுமெனவே பொருள் கூறவேண்டும். கீழே தரப்படும் அடிகள் இதனைத் தெளிய விளக்கும்.

" தண்டாக் களிப்பி னாடுங் கூத்து " (மணிமேகலை, 6 : 126)

" தண்டா வேட்கை " (சிலப். அடைக்கலக். 170)

" கண்டு தண்டாக் கட்கின்பத்
துண்டு தண்டா மிகு வளத்தான் " (மதுரைக் காஞ்சி 16-17)

" அவிர் துகில் புரையு மவ்வெள் ளருவித்
தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடி "
(குறிஞ்சிப்பாட்டு, 55-56)

" கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது " (புறம். 400 : 8)

இவ்வடிகளிலெல்லாம் தண்டாது தணியாதென்னும் பொருளையே தந்தது. 'வேட்கை தண்டாது' என்பதனை வேட்கை தணியாதெனக் கொண்டு வேட்கை நீங்காதெனக் கூறினும், 'யான் தண்டவும்' என்ற தொடரில் யான் தணியவும் (ஆசை தீரவும்) எனப் பொருள் கொள்ளாது, யான் நீங்கவுமெனக் கொள்ளின் தவறாய் முடியாதோ? "தண்டா வீகைத் தகைமாண் குடுமி" (புறம். 6 : 26) என்ற அடிக்குப் பண்டையுரையாசிரியர் வகுத்த உரையும் இங்கு ஒப்பிடத் தக்கது. வேட்கை தண்டுதல் என்பது வேட்கை தணிதல் எனப் பொருள்பட வேட்கை நீங்கலெனப்பட்டு தண்டுதலுக்கு நீங்கலெனப் பொருள் கூறலாயது போலும். பண்டை நூல்களில் இடப்பெயர்ச்சியாய நீக்கத்தைத் 'தண்டுதல்' என்று எங்கேனும் குறித்திருப்பதாகத் தெரியவில்லை. மனநிகழ்ச்சியில் வரும் ஆசையின் தணிவினையே அது குறித்து நின்றது. தண்டவும் என்பதற்கு ஆசை தணியவும், ஆசை நீங்கவும் என்று பதிப்பாளர் பொருள் கூறியிருந்தனராயின் அது மெய்ப்பொருளாய் முடிந்திருக்கும்.

## 59. "தெண் கண் மாக்கிணை"

"வள்ளுகிர வயலாமை
வெள்ளகடு கண்டன்ன
வீங்கு விசிப் புதுப் போர்வைத்
தெண் கண் மாக்கிணை" (புறம். 387 : 1-4)

இதன் உரையில் கிணைப்பறை ஆமையின் அகடு போல்வதென்றெழுதியிருக்கின்றனர். ஆமையின் வெள்ளகடு போல்வது கிணையில் விசித்த புதுப் போர்வைத் தெண்கண்ணே யன்றி கிணைப்பறையன்று. புறப்பொருள் வெண்பாமாலை 9 : 18 "ஆமை யகடுபோ லங்கட் டடாரி" என்னுமடியிலும் தடாரியின் அழகிய கண்ணே ஆமையின் அகட்டிற்கு உவமேயமாக நிற்கின்றது; இதனைத் தவருகப் பதிப்பாசிரியர் தடாரியெனக் கொண்டனர். கிணையில் விசித்த வெள்ளியதோற் போர்வையை ஆமையின் வெள்ளகட்டிற்குப் புலவர் இங்கே உவமித்திருக்கின்றனர். அப் போர்வையைக் கிணையின் கண்ணெனக் கூறுதல் தமிழ்க் கவிஞரின் உருவக வழக்கு. "தோடு கொண் முரசும் கிழிந்தன கண்ணே" (புறம் 238 : 8) "முழவின் மண்ணார் கண்" (நற்றிணை 100:11) முதலிய அடிகள் அதற்குச் சான்ரும். கிணை உடுக்கைக்கும் போர்ப்பறைக்கும் பொதுப் பெயரேயாயினும், இங்கு அது போர்ப்பறையையே குறித்தது. 'கிணைமகள்' என்னும் தொடரில் கிணை உடுக்கையைக் குறிக்கும். "மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி" (புறம். 393 : 20) என்னுமடியுரையிலும் கிணைப்பறைக்கு முழு மதி யுவமையென்று கூறி வழுவினர். கிணைப்பறைக்கு முழு மதியை ஓர் உவமானப் பொருளாகப் புலவர் எடுத்த காரணத்தை விளக்கினரில்லை. உவமான உவமேயப் பொருள்களின் சாதாரண தர்மத்தை விசதமாக்காது கிணைப்பறை அது போன்றது, இதுபோன்றதெனக் கூறின் யாது பயன்? இவ்வடியில் வரும் 'கிணையை'ப் பொருளாகு பெயராயெடுத்து கிணையின் உறுப்பாய கண்ணை அது சுட்டிற்றெனக் கொள்ளினன்றே மதியென்னும் உவமானப் பொரு

ளோடு இயையத்தக்க உவமேயப் பொருள் பெற முடியும். கிணையின் கண்ணை இங்கு மதியோடுவமித்தது போன்றே யானையின் காற் சுவட்டோடும் புலவர் பலர் உவமதித்திருக் கின்றனர்.

உதாரணம் :—

" கடாஅ யானைக் கால்வழி யன்னவென்
றெடாரித் தெண் கண் " (புறம். 368 : 14-15)

" பெருங் களிற் றடியிற் றோன்று மொருகண்
ணிரும் பறை " (புறம் 263 : 1-2)

## 60. " நகைப் புலவாணர் "

" பகைப் புல மன்னர் பணிதிறை தந்துநின்
நகைப்புல வாணர் நல்குர வகற்றி " (புறம். 387 : 12-13)

இதில் 'நகைப்புலவாணர்' என்னும் தொடர்க்குப் பொருள் புலவர் என்றனர். புலவாணரைப் புலவரெனக் கொள்ளின்' 'நகைப்புலவாணர்' என்னும் தொடருக்கு இது குறைபட வகுத்தவுரையாம். நட்புடைய புலவரென்பதே அத்தொடரின் பொருள். நண்பரெனப் பொருள்படும் '**நகைவர்**', 'பகைவர்' என்ற சொல்லுக்கு எதிரிடைப்பதம்.

" பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்கு " (புறம். 373 : 35)

" நகைவர் குறுகி னல்லது பகைவர்க்கும் " (புறம். 398 : 9)

என்னுமடிகளில் வந்துள்ள பிரயோகம் இங்கே கவனிக்கற் பாலது. நகைப்புலவாணர் என்ற தொடரை, நகைப்புலம் + வாணர் எனப் பிரிக்கின், தன்னொடு நட்புப் பூண்ட நிலத்தில் வாழ்பவர் என்ற பொருளையும் தரும். ஆகவே, பகைப்புலம் நொதுமற்புலம் என்னு மிரண்டும் நீங்க, தன்னாட்டிலோ அல்லது தன்னொடு நேசப்பான்மையிற் சார்ந்த நாட்டிலோ வாழ்வோ ரனைவரையும் அது குறிக்கும். அவருள்ளும் நல் குரவுற்றோர் அரசன் கொடைக்குரியராய் அமைவரன்றோ?

## 61. " திரங்க "

" கான வேம்பின் காய் திரங்க " (புறம். 389 : 2)

'திரங்க' என்பதனை 'உலர' என்றனர். 'நீர் வற்றித் திரைத்தல் அல்லது சுரித்தல் அடைய'வென்று கூறியிருப்பின் நேர் பொருளாம். உலர்ந்ததினால் உளதாம் சுரித்து வலித்த தன்மையைச் சுட்டுவது 'திரங்கல்'. திரங்கியவுடலெனின் உலர்ந்த வுடலன்று; தோல் சுருக்கடைந்த உடலென்றே கொள்ளவேண்டும். சிலப்பதிகாரம், காடுகாண் காதை 77-ல் வரும் 'வரிமரற் றிரங்கிய' என்ற தொடருக்கு அடியார்க்கு நல்லார் வரைந்தவுரையாவது :—"வரியையுடைய மரல் நீர்வற்றித் திரங்கிய வென்பதே; உலர்ந்து திரங்கியவென்பதுதான் அதன் கருத்து. மலைபடுகடாம் "திரங்கு மரனாரிற் பொலியச் சூடி" என்னுமடியிலும் (431) இப் பொருளே வருதல் காண்க. காரண காரியங்களை ஆகுபெயர் முறையால் ஒன்றனை மற்றொன்றாய் மாற்றிக் கூறினும், பொருளுரைக்கும் வழி அவ்வலங்கார நெறியை விடுத்துக் கூறுதலே நேராம். உலர்வதினாற் பெறப்படும் 'திரங்கல்' எனும் தன்மையை உலர்வதெனக் கூறின் பொருந்துமோ ?

## 62. " புன்றலை "

" புன்றலை மடப்பிடி யினையக் கன்றுதந்து " (புறம். 389 : 9)

இதில் புன்றலை, சிவந்த தலையென்றும் இனைய, வருந்தவென்றும் பொருள் கூறியிருக்கின்றனர். இரண்டும் பொருந்தாவுரையே. மலைபடுகடாத்தில் நச்சினார்க்கினியர் உரைத்த உரையைப் பின்பற்றியதனாலும், அவ்வுரையின் உட்கிடக்கையை உற்று நோக்காமையினாலும் வந்த வழுவே முதற்றந்த பொருள். "புன்றலை மகார்" என்ற தொடரை நச்சினார்க்கினியர் "சிவந்த தலையினையுடைய பிள்ளைகள்"

என்றனர். அதாவது கருமை பெருத செம்பட்டை மயிர் நிறைந்த தலையுடைய பிள்ளைகள் என்பதே. இப்பொருள் மக்கட்டொகுதிக் குழவிகட்குப் பொருந்துவதேயாயினும், மடப்பிடியின் தலைவருணனைக்குப் பொருந்துவதோ?

நிறம், ஒளி முதலியவற்றைச் சுட்டும்பொழுது 'புல்லிய' என்பது 'ஒளி மழுங்கிய' என்ற பொருளைத் தரும்.''

'' புல்லென் மருண்மாலைப் பூங்கொடியாள் பூசலிட ''
(சிலப். ஊர்சூழ்வரி, 33)

என்னு மடியை நோக்குக. துய்ய வெண்மையிற் றீர்ந்த நிறமுடைய காளை, பசு முதலியவற்றைப் 'புல்லை'யென்று விளிப்பது இன்றும் வழக்கேயாம். ஆயின் 'புன்றலை மடப் பிடி' என்னும் தொடரில் 'புல்' என்ற உரிச்சொல் நிறஞ் சுட்டுவதன்று; புல்லிய மயிரென்றக்கால் அடர்ச்சியும் வளர்ச்சியு மின்றிப் பாறிப் போய மயிரென்று கொள்ள வேண்டும். உரோமம் அடர்ச்சியுற வளராத் தலை என்பது இங்கே பொருள். ''புல்லணலோனே'' என்ற தொடரைக் கரு நிறம்பெரு இள மயிர் நிறைந்த அணலோன் என்று சிலர் பொருள் கொள்ளினும், 'புல்லிலை வஞ்சி' என்ற தொடரில் அவ்விதப் பொருள்கோள் இசையாது. இலை யடர்ச்சியில்லா வஞ்சியென்று கொள்ளவேண்டும்.

'இனைய' வென்பது வருந்தவென்று பொருள் தருவதா யிருக்க 'வகுத்த' வென வரைந்தது எழுத்தாளர் பிசகா யிருக்கலாமெனத் தோன்றுகின்றது.

## 63. " பெரும்பாட்டீரம் "

'' நிணம் படு குருதிப் பெரும் பாட்டீரத்(து) (புறம். 392 : 7)

இதில் 'குருதிப் பெரும் பாட்டீரத்து என்னும் தொட ருக்கு 'இரத்தப் பெருக்கா லுளதாகிய ஈரத்தையுடைய'

என்று உரை வரைந்திருக்கின்றனர். உழவர் வழக்கில் பெரும்பாட்டீரம் என்ற வயற்பதம் ஒன்றுண்டெனக் கொள்ளாது பதிப்பாசிரியர் அதனை பெரும்பாடு, ஈரமெனப் பிரித்துப் பெரும்பாட்டைக் குருதியோடிசைத்துக் குருதி பெருக்கெனப் பொருள்கொண்டனர். பெரும்பாட்டீர மென்றால் பொடியில் வித்துவதற்கு இசையாததும் தொழிப் பருவத்திற்கு உரித்தானதுமாய ஈரத்தை உணர்த்தும்; இதனைப் பெரும்பதமென்றும் வழங்குவர்.*

‘கார்ப்பெயற் கலித்த பெரும் பாட்டீரத்து (புறம். 120:2) என்னுமடியையும் இங்கே ஒப்பிடுக. உழவர் வழக்கை யொட்டிப் பண்டையுரையாசிரியர் இதற்குக் ‘கார்காலத்து மழையான் மிகுந்த பெரிய செவ்வியையுடைய ஈரத்தின் கண்’ எனப் பொருள் கூறினர். பெரும்பாடு பெரும் பாட்டம் என்ற சொற்றொடர் குருதியின் பெருக்கைக் காட்டியதோடு குருதிப் பொழிவால் ஏற்பட்ட நிலத்தின் ஓர் ஈரப்பதன் அல்லது செவ்வியையும் காட்டிற்றெனக் கோடல் வேண்டும்.

“ பாட்டம் பொய்யாது பரதவர் பகர ”　　(நற்றிணை 38 : 2)

என்னுமடியில் ‘பாட்டம்’ மழைப் பொருள் தந்து நிற்ப தனைக் காண்க.

உலக வழக்கிலும் இன்றும் ‘ஒரு பாட்டம் மழை பெய்த’தெனக் கூறுவர். வழக்கில் மொழி இரட்டித்து வருதல் சாதாரணமே. மோவாய், கட்டம் என்ற ஒரு பொருட் பன்மொழி வழக்கில் ‘மோவாய்க் கட்டம்’ என வந்து மோவாய்க்கட்டை, மோறைக்கட்டையென மருவி நிற்றலை யும் இதனோடொப்பிட்டு நோக்குக.

---

* நாஞ்சினாட்டில் உழவர்களிடையே இவ்வழக்கு பயிலவழங்குகிறது.

# 64. "எஃகு"

"எஃகிரு ளகற்று மேமப் பாசறை" (புறம். 397 : 7)

என்னுமடியின் குறிப்பில் 'எஃகிருள்' குறைந்த இருட்டொன்றும், 'ஏமம்' இன்பமென்றும் பொருள் கூறியிருக்கின்றனர். இவை சந்தர்ப்போசிதமான பொருளேயல்ல. வேல் வாள் முதலிய படைக்கலங்கள் தம்மொளியால் இருளையோட்டும் காவலையுடைய பாசறை என்பது அடிக்குப் பொருத்தமாய பொருள்.

எஃகிருள் குறைந்த விருளெனக் கொள்ள யாது ஆதாரமுளதென அறிகிலேம். எஃகு 'உருக்கு' என்னும் பொருளைத்தந்து, பின் அதனலாம் படைக்கலங்களைச் சுட்டி, அதன்பின் அப்படைக் கலங்களின் பண்பாய கூரிய தன்மையையுங் குறித்தது. அவ்வாறு நோக்கினும் எஃகிருள் கூரிருளாமே தவிரக் குறைந்த விருளாய் வர யாதொரு காரணமுமின்று. 'பஞ்சு பன்னல்' என்னும் பொருளைத் தரும் எஃகுதல் கூரிய தன்மையோடொட்டியெழுந்த பொருளே. மதி நுட்பத்தைக் குறிக்கும் எஃகும் இவ்வாறு உருவக வகையில் வந்ததுவேயாம். எஃகின் மூலப் பொருள் உருக்கப்படுதல் என்பதனைச் சிலப்பதிகாரம் 15-ம் பக்கத்தில் அடியார்க்கு நல்லார் கூறியுள்ள உரை விசதமாய்க் காட்டும். ஆங்கு 'எஃகுபடல்' என்பதை உருக்கப்படுதல் என்று பொருள் கூறிச் செல்கின்றனர். 'அஃகு' என்ற சொல் குறைவுப் பொருளைத் தந்ததேயன்றி 'எஃகு' என்னுஞ் சொல் யாண்டும் அப்பொருள் தந்திலது.

'ஏமம்' என்னுஞ் சொல்லில் இலக்கிய வழக்காற்புக்க பொருள் வேறுபாடு ஆச்சரியம் தரத்தக்கதே யாகும். 'ஏம்' என்னும் பகுதி முதன்முதல் மயக்கத்தைச் சுட்டிற்று; பின் அம்மயக்கத்தின் விடுதலையைக் குறிக்கும் காப்பு, காவல் என்னும் பொருளைத் தந்தது; அதன்பின் அக்காப்பாலுளதாம் இன்பம், ஆசை, முதலியவற்றைக்

குறிக்க வந்தது. மூலப் பொருள் இன்பமல்லா மயக்கத்தைச் சுட்டி நின்றும் நாளடைவில் மயக்கத்திற்கெதிரிடையான இன்பத்தைச் சுட்டும்படி வேற்றுமையடைந்துவிட்டது. 'காழ்' என்ற சொல்லின் சரித்திரமும் இம்மாதிரி எதிரிடைப் பொருள் காலக்கிரமத்தில் மொழிகளில் வந்தேறுமெனக் காட்டிற்றன்றோ? போர் குறித்துத் தங்கும் பாடி வீட்டிற்கும் இன்பத்திற்கும் யாது பொருத்தமோ? ஏமப்பாசறை என்னுந் தொடரில் 'ஏமம்' காவற் பொருளைத் தந்ததென்று கொள்ளலே பொருத்தம். இவ்வடியை முன் பின்னடிகளோடு இணைத்து நோக்கினன்றி மெய்ப்பொருள் விளங்காது.

> " இரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி
> யெஃகிரு ளகற்று மேமப் பாசறை
> வைகறை யரவங் கேளியர் பல்கோட்
> செய்தார் மார்ப வெழுமதி துயிலென "

'பல்கோட் செய்தார் மார்ப நீ காலைச் சமயத்துத் தோன்றி, பாசறையரவங் கேளியர் துயிலெழுமதி' என்று வினைமுடிவு செய்யவேண்டும்.

# பிற்சேர்க்கை-I

## மேலும் சில சொற்கள்*

## 65. "அதரிதிரித்த"

"எருதுகளி றுக வாண்மட லோச்சி
அதரி திரித்த வாளுகு கடாவின்" (புறம். 370 : 16-17)

இதில் வரும் 'அதரிதிரித்த' என்னும் தொடருக்குப் பதிப்பாசிரியர் குறிப்பெழுதாது விடுத்தனர். பண்டையுரையாசிரியர்கள் உரை தந்து விளக்காமையால் இத்தொடர் இப்பொழுது 'அவிழ்க்கலாகா முடிச்சாய்ச்' சமைந்து விட்டது. 'அதரி' என்னும் சொல்லின் உருவம் பெருமாறுதலடைந்து போயினமைபற்றியே அதன் உண்மைத் தோற்றமும் பிறப்பு வகையும் பண்டிதர்கள் கைக்கெட்டாது போயின. ஆயின், மொழி வளர்ச்சி நூலின் தத்துவங்களை ஒருவாறுணர்ந்தார்க்கு இக் கடுமுடிச்சவிழ்க்கக் கழியுமென்றே எண்ணுகிறேன்.

தமிழ் ஒரு சேர்ப்பியல் மொழியென (Agglutinative Language) யாருமறிவர். ஒரு புது மொழியை உண்டு

---

* நூலுள் அமைந்த 64 சொற்களும் நூலாசிரியரால் பிரதி செய்து வைக்கப் பெற்றவை. மேலும் சில சொற்கள் நகல் பிரதி எழுதப்பெறுமல் ஆசிரியரின் கையெழுத்தில் மூலப்படியாகக் காணப்பெற்றன. இவை இப்பொழுது பிரதி செய்யப்பெற்று அகராதியடைவில் பிற்சேர்க்கையாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றை ஆசிரியரே பிரதி செய்து வைத்திருப்பாராயின், இவை மேலும் நன்கு சீர் செய்யப் பெற்றிருக்கலாம். எனினும், ஆசிரியர் தம் நுணுகிய ஆராய்ச்சியை விளக்குவனவாக இவையும் உள்ளமையால் இங்குத் தரப்பட்டுள்ளன.

பண்ணுவதில் அது கையாடுமுறை இரண்டு பழைய மொழி களையெடுத்து ஒன்றுபடச் சேர்ப்பதே. இவ்விரு மொழி களிலும் சிற்சில பாகங்களே புது மொழியினுள் உறுப்பாய் வந்தமைந்து நிற்கும்.

உதாரணமாக 'மகவு' என்ற சொல்லின் பகுதி 'மக' என்பதே. இதுவே குழவிகளைச் சுட்டும் பெயராக முதலியன்றது.

மகவு + அவன் = மக + அவன் = மக + அன் = மகன்

மகவு + அவள் = மக + அவள் = மக + அள் = மகள்

மகன், மகள் என்ற சொற்களுள் எங்ஙனம் இரு மொழிகள் புணர்ந்து தம்முறுப்பிற் சிலவெழுத்துக்களை மட்டிலும் நிறுத்திவிட்டு மறைந்து போயினவோ, அதுபோலவே 'அதரி' எனும் சொல்லினும் இரு மொழிகள் புணர்ந்திருக்க வேண்டுமென்றாகிக்க இடமுண்டு. அது ஒரு காலத்தில் 'அதக்கரி' என்ற உருவத்தோடு நின்றிருக்க வேண்டு மென்றும், காலாந்தரத்தில் அது திரிந்து 'அதரி'யாயிருக்க வேண்டுமென்றும் ஊகிக்கலாம்.

'அதக்கரி' என்றல் என்னவென்று இனி நாம் ஆலோ சிக்க வேண்டும். இச் சேர்க்கை மொழி (Compound word) அதக்கு + அரி என்னு மிரண்டு மொழிகளினல் ஆக்கப்பட்ட தென அறியலாம். அரியை அதக்குதல் என்பதனையே சுட்டி நிற்கின்றது. அரி, அரியப்படும் நெற்கதிரின் பெயர்; அதக்குதல் நெல்லை நெற்கதிரில் நின்றும் பிரிக்கும் தொழிற் கமைந்த பெயர். இம்மொழி பிற்காலத்தில் 'அரக்குதல்' என்று மருவி வழங்கப்பட்டு வருகின்றது. சூடிட்டுக் கடாக் களை அதன்மேற்றிரியச் செய்து அரியில் நின்றும் நெல்லை அதக்கிப் பிரிப்பதனையே 'அதரி திரித்தல்' என்று பண்டைக் காலத்தார் வழங்கினர்.

Tamil Lexicon என்னும் புதிய தமிழ் அகராதியில் 'அரக்குதல்' எனுஞ் சொல் 'அரங்குதல்' என்றதில் நின்றும்

வந்ததெனக் குறிக்கப்பட்டிருக்கின்றது. இது உண்மையென்று தோற்றவில்லை. 'அதக்குதல்' மருவியே 'அரக்குதல்' உதித்ததென்று பலமான நியாயத்தால் ஊகிக்க இடமுண்டு. அம்பு முதலியன போற்றைத்தல், அழிதல், அழுந்துதல், வருந்துதல், உருகுதல் என்ற பலவர்த்தங்களைப் பயக்கும் 'அரங்குதல்' என்ற மொழி 'கசக்குதல்' என்ற பொருளையும் தருகின்றது. 'அதக்குதல்', 'அரக்குதல்' என்ற சொற்கோ 'தேய்த்தல்' என்பதுவே முதற் பொருள். இங்குக் காட்டிய பல பொருள்களைக் கொண்டும் 'அரக்குதற்கும்', 'அதக்குதற்கும்' பொருள் ஒற்றுமையுளதென எளிதில் உணரலாம். இவ்விரண்டிலும் 'தேய்த்துப் பிரித்தல்' 'கசக்கிப் பிரித்தல்' என்ற பிரிக்கும் பொருளே எழுகின்றது. இப் பிரிவுப் பொருள் கொண்டே குழையை மரத்தில் நின்றும் வெட்டிப் பிரிக்குந் தொழிற்கு 'அரக்குதல்' என்று இன்றும் வழங்கலாயினர். நெல்லையெடுத்துக் கையில் வைத்துக் கசக்கி உமிவேறு அரிசி வேறு எனப் பிரித்தற்கும் 'அரக்குதல்' என்று கூறுவர். இதனுல் அரக்குதலின் முன்மொழியாயியன்ற அதக்குதலும் நெல்லைக் கதிரில் நின்று பிரிப்பதைச் சுட்டிற்றென்று கொள்ளின் இழுக்காது.

அதக்கு+அரி, அதக்கரியாய் வரவேண்டியதிருக்க அதரியென வரலாமோவென சங்கிப்பார் இலக்கணப் புணர்ச்சி யளவுகோலைக்கொண்டு இவ்விஷயத்தைத் தீர்மானிக்கத் தொடங்கினர் என்றே கூறவேண்டும். ஆனுல், அம்முறை இங்கு பொருந்துவதன்று. மொழி வளர்ச்சிப் போக்கில் நிகழும் எண்ணிறந்த புணர்ச்சி வேறுபாடுகள் இலக்கண விதியுள் அமைந்தனவாமா? அவைகளை மொழிநூல் கையாடும் முறைகளை ஒட்டித் தீர்மானிக்க வேண்டுமே தவிரப் பிற்காலத்துண்டாய சுருங்கிய இலக்கண விதிகளைக் கொண்டு அறுதியிட்டுரைக்கத் துணிவது ஆறு கடத்தற்காம் ஒரு சிறுவோடங் கொண்டு பெருங்கடலைக் கடக்கப் புகுவதுபோலாம்.

## 66. "ஆம்பல்"

"ஐயவி சிதறி யாம்ப லூதி
யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி" (புறம். 281 : 4-5)

இதில் ஆம்பலை - ஆம்பலங்குழல் என்றனர். சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரையில் வந்த "ஆம்பலங் குழலை" இங்குப் பொருத்தினர்போலும்! இங்கு அம்மொழி ஆம்பற் பண்ணையே குறித்தது. காஞ்சி பண்ணாகவே நிற்றலின் இதனையும் பண்ணாகவே எடுப்பது தகுதி. மேலும், ஆம்பற் குழலென்றால் வாசிப்பாருக்கு மயக்கம் ஊட்டாதோ? அதனைப் பரிகரிக்க அடியார்க்கு நல்லார் கூறிய வண்ணம் "வெண்கலத்தாற் குமுதவடிவாக அணைசு பண்ணிச் செறித்த குழலெ"ன்ற உரையையாவது இங்குத் தந்திருக்கலாமே! அங்கு அடியார்க்கு நல்லார், "கொன்றை, ஆம்பல், முல்லை" என்ற தொடரில் ஆம்பலைக் கருவியாகக் கொள்ளற்கு ஆம்பற் பண்ணும் முல்லைப்பண்ணு முளவேனும் கொன்றையெனவொரு பண்ணில்லாமையால் எல்லாவற்றையும் கருவியாகக் கொள்ள வேண்டுமென்ற நியாயத்தைக் காட்டினர். அது பொருந்துவதே. ஆயின், இங்கோ அந் நியமம் பற்றியே "காஞ்சியும் ஆம்பலும்" வந்தமையால் காஞ்சிப் பண்போல ஆம்பலையும் ஆம்பற் பண்ணாக்க வேண்டாமோ?

## 67. "உக்க"

"ஒருசா ரருவி யார்ப்ப வொருசார்
யாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் டேறல்
கல்லலைத் தொழுகு மன்னே......" (புறம். 115 : 1-4)

இதில் மூன்றாமடிக்குப் பண்டையுரையாசிரியர் கூறிய பொருள், "நிரம்ப வாக்கவேண்டி வடிக்க உக்க இனிய கள்ளாகிய தேறல்" என்பதே. இதில் 'உக்க' என்ற

சொல்லே முக்கியமானது. அதற்குப் பண்டையுரையாசிரியர் பொருள் கூருது போயினர்; பதிப்பாசிரியரும் அதை விளக்கப் புகுந்தாரில்லை. 'உக்க' என்பதற்குச் சிந்தின வென்பது பொருள். குறள் 720-ல் வரும் ''அங்கணத்துளுக்க மமிழ்தற்ருல்" என்னுமடியை இங்கு ஒப்பு நோக்குக. பாணரது மண்டை நிரம்பிச் சிந்தின கள்ளானது கல்லலைத் தொழுகும் என்று எழுதின் பொருள் விளக்கமுறுமே, இவ்வித இடங்களில் பொருள் தரலை விடுத்து, கூவல் என்ருல் கிணறு, கோதென்ருல் சக்கை, மருப்பென்ருல் கொம்பு என்று பொருள் தருவது எதற்கோ?

பண்டையுரையாசிரியர் இச் செய்யுளில்* 'குன்று' என்பதனை எழுவாயாக வைத்து, 'தேறல் கல்லலைத் தொழுகும்' என்பதனைப் பயனிலையாகக் கொண்டனர். குன்று ஒழுகுதல் பொருந்தாமைபற்றி இடத்து நிகழ் பொருளின் ருெழில் இடத்துமேல் ஏறிநின்றதெனக் குறிப் பெழுதி அன்னுர் பொருண்முறையை அமைக்க வேண்டியதாயிற்று. 'குன்று' எனுஞ் சொல்லைக் 'குன்றின்கண்' என ஏழாம் வேற்றுமைத் தொகையாகக் கொள்ளின், தேறல் கல்லலைத் தொழுகும் என்பதே முக்கிய வாசகமாய் வந்து தேறலின் ஒழுக்கைக் காட்டும். இது யாதொரு இலக்கண வமைதியும் வேண்டாத இயற்கைப் பொருள்கோளாதலினுல் உரைகாரர் கொண்டதிலும் பொருத்தமுடைத்து.

## 68. "உவற்றி"

" மாவே, எறிபதத்தா னிடங்காட்டக்
கறுழ் பொருத செவ்வாயான்
எருத்து வவ்விய புலிபோன்றன " (புறம். 4 : 7-9)

---

* " ஒருசா ரருவி யார்ப்ப வொருசார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் டேறல்
கல்லலைத் தொழுகு மன்னே பல்வேல்
அண்ணல் யானை வேந்தர்க்
கின்னு ஞகிய வினியோன் குன்றே " (புறம். 115)

"குதிரைகள், எதிரியை எறியும் காலமுடையான் இட வாய் வலவாயாகிய இடத்தைக் காட்ட முகக் கருவி பொரப் பட்ட செவ்வாயை உடைமையான் மான் முதலாயினவற்றின் கழுத்தைக் கவ்வி உதிரம் உவற்றியுண்ட புலியை யொத்தன"—என்பது இவ்வடிகளுக்குரிய பழையவுரை. இவ்வுரையில் வரும் "கழுத்தைக் கவ்வி உதிரம் உவற்றி யுண்ட புலி" என்னும் தொடரில் உவற்றி என்பதை 'ஊற்றி' எனக் கொண்டார் பதிப்பாசிரியர். (Oriental manuscript Library)-யில் இருக்கும் புறநானூற்றுப் பிரதியில், 'உவற்றி' என்ற சொல்லுக்குப் பதில் 'ஊற்றி' என்றிருப்பதைப் பின் பற்றிக் கூறின உரைபோலும்! ஆயின், அப்பொருள் பொருந்துவதோவென நோக்கின், புலி உதிரத்தை ஊற்றிக் குடித்தல் யாண்டும் நிகழ்வதன்ரும்.

'உவற்றி' என்னும் பிறவினைக்குத் தன்வினை 'உவறு' என்பதே. 'உவறி' என்னும் வினையும் 'உவல்' என்னும் பண்படியாக உதித்த சொல்லே. 'அவல்' பள்ளத்தைக் குறித்ததுபோன்று 'உவல்' மேட்டைக் குறித்திருக்கவேண்டு மென்றாகிக்கலாம். எனில், இலக்கிய வழக்கில் மேட்டுப் பொருளைச் 'சுவல்' என்ற ரூபத்தில் தந்து நிற்கின்றது. தழை என்ற பொருளைத் தரும் 'உவலை', 'உவல்' என்பதையும் தனதாக்கிக் கொண்டது. இப்பொழுது 'உவல்' என்பது 'உவலை'யின் பொருளைத் தரும். உகரச் சுட்டினைக் குறித்துக் குறிப்பெழுதிய விடத்தில் உகரம் மேலிடப் பொருளையு மளிக்குமெனக் கூறினேம். தழைப் பொருள் பயந்த உவல், உவலையெனுஞ் சொற்களும் மேற்கிளர்த்துவரும் தழைக்குப் பெயராய் வருதல் நாம் கவனிக்கற்பாலது. 'உவறு'தல் என்பது ஊறுதல் அல்லது மேற்பொங்குதல் என்ற பொருளைத் தரும். ஆகவே, ஊறச்செய்து அல்லது மேற் பொங்கச் செய்து, என்பதே உவற்றுதல் என்னும் சொற்குப் பொருளாம். கழுத்தைக் கடித்து அதன் உதிரத்தை பொங்கச் செய்து, அதாவது ஊறச் செய்து குடித்தது புலி

யென்றறியக் கிடக்கின்றது. 'ஊற்று' (to pour from a vessel) என்ற சொல் இலக்கிய வழக்கில் பிறிது சுட்டி நிற்ற லால் இங்குப் பொருந்தாது.

## 69. " உறுவர் "

" உறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மான மறப்பின்
றிருங்கோ ளீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே " (புறம் 381 : 23-26)

இதனைப் பொருள் எழுதி விளக்காது, 'உறுவர் – பெரி யோர், அறத்துறை யம்பி – தருமவோடம்' என்று குறிப்புக் களை வரைந்து விடுத்தனர். சிறுவரென்று வந்திருப்பதால் 'உறுவர்' பெரியோரைக் குறிக்கவேண்டுமென்றெண்ணி இவ் வுரை வரையப்பட்டதெனத் தோன்றுகின்றது. அங்ஙன மாயினும் வயதில் முதிர்ந்தோர் என்று கூறியிருக்கலாமே. இது நிற்க.

'உறுவர்' என்றால் 'அடைவோர்' என்பதே. உறுதல், உற்ற என்னும் சொற்களின் பகுதியாய 'உறு' என்பதில் நின்றே உதித்து இம்மொழி அப்பொருளைத் தந்தது. இதற்கும் மேற்கோள் வேண்டுமெனின், பதிற்றுப் பத்து 43-ல் 19-ம் அடியை நோக்கி அறிந்து கொள்ளுக.* இப் பொருள், அடியில் எங்ஙனம் பொருந்துகின்றதென இனி நோக்குவோமாக. துறைக்கண் அடைகின்றவர்களும் சிறுவர் களும் சதாகாலமும் இயக்கிச் செலுத்துகின்ற தருமவோடம் போல் உயரிய மேற்கோள்களே மறப்பில்லா தீர்த்தியக்கும் ஊக்கத்தையுடைய கரும்பனூரன் மகன் என்று பொருள் கொள்ள வேண்டும். புலவர் எடுத்தாண்ட உவமானத்தி னழகு யாதெனின், 'தருமவோடம்' சலிப்பின்றி ஒரு காலத்தும் கிடவாது. துறை கடப்பார் வரும்பொழுது அவர் அதனை இயக்கிச் செலுத்துவர். அவரில்லாத சமயம்

---

* " உறுவர் ஆர ஓம்பா துண்டு
நகைவர் ஆர நன்கலம் சிதறி " (பதிற். 43 : 19-20)

சிறுவர் அதனைச் செலுத்தி விளையாட்டயர்வர். ஒரு மனிதன் தனதாக வைத்துக்கொள்ளும் தனியோடமாயின், சில சமயம் அது ஓடுதலின்றித் தங்கி இளைப்பாற முடியும்; தரும வோடத்திற்கோ சதாகாலமும் இயக்கமே. துறை கடக்கும் பிரயாணிகள் ஒழிந்துபோகச் சிறிதளவேனும் வறிதே கிடக்கலாமென்றாற் சிறுவர் சம்மதியார். அவர் புகுந்து பின்னொரு பிரயாணி வருமளவும் அதனைச் செலுத்தி விளையாடுவர். ஆதலால் தருமவோட்டத்திற்கு எக்காலமும் இயக்கமே இயற்கைநிலையென்றறிந்து கொள்ளவும். இதுவே அதன் 'ஊழ்' என்று செய்யுளில் அழகாகச் சுட்டப் பெற்றது. புலவர் இப்பொருளையெடுத்து எக்காலமும் வினையின்மேற் செல்லும் கரும்பனூரன் மகனுடைய ஊக்கத்தினை விளக்கலாயினர். அவனது ஊக்கமும், ஒருவினை முடிய வேறோர் வினைமேல் சென்றுகொண்டேயிருக்கும் என்னும் உண்மையை வற்புறுத்தவே இவ்வுவமானத்தை எடுத்தாண்டனர். இதனை விளக்காது செல்வது பதிப்பாசிரியர் தர்மம் ஆமோ? 'பெரியோர்' என்ற பொருளுரை கொண்டே அவர் இப்பொருளுணர்ந்தனரோவென்று ஐயுறுகின்றேன். இலக்கியங்களில் எதிரிடைச் சொற் புணர்த்தும் முறை வைத்து நோக்கினும் 'முதியரும் சிறுவரும்' என்று வரவேண்டும் அல்லது 'பெரியோரும் சிறியரும்' என்றிருக்க வேண்டும். அடியில் இவ்விரண்டுமே இல்லை. அதுபற்றி இங்கு கொண்ட பொருளே இசைந்த பொருளென்று கொள்ளவும்.

## 70. " கிழங்கு வீழ்க்கும் "

" முன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்குமே "
(புறம். 109 : 6)

இதில், "கிழங்கு கீழே தாழ வீழ்த்தலை வீழ்த்தலென்றல் மரபு" என்று பதிப்பாசிரியர் குறிப்பெழுதியிருக்கின்றனர். ஓரியன்றல் கையெழுத்துப் பிரதி உரையில்

'தாழ வீழ்க்கு'மென்றேயிருக்கிறது. 'தாழவிருக்கும்' என்பது பிற்காலத்தார் திருத்தம்போலும்! தற்காலத்து இயக்கப் பண்பைக் குறித்து 'வீழ்தல்' என்பதிலிருந்து கிழங்கு வீழ்தலில் அவ்வியக்கம் பயின்று காணப்படாமை யால் இது இயற்கை விரோதம் எனக் கருதி, கிழங்கிருத் தலை 'வீழ்தல்' எனப் புலவர் கூறியது ஒரு மரபு பற்றி யென மருண்டனர். இது கிழங்கு என்ற சொல்லின் பகுதிப்பொருள் நோக்காமையால் வந்த இடர்ப்பாடே. கீழ் நோக்கிச் செல்லுவதே, வளர்வதே, முதிர்வதே கிழங்கு. 'வீழ்' என்ற சொல்லும் அதனையே குறிக்கும். 'வீழ்த் தாழை', 'ஆலம் வீழ்' என்னும் தொடர்களில் கீழ் நோக்கிச் செல்லும் விழுதையே 'வீழ்' சுட்டி நிற்கின்றது. 'வேர்' என்ற சொல்லும் இப்பொருளைத்தர எழுந்ததுவே. "பார்பக வீழ்ந்த வேர்" (நற். *24 : 1*), "நிலம் பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்" (புறம். *364 : 10*) என்று வருவதையும் நோக்குக.

கிழங்கு முதிரமுதிர கீழ் நோக்கிச் செல்லுதல் இயல்பே யாதலின் புலவர் "கிழங்கு வீழ்க்கும்மே" யென்றனர். மதுரைக் காஞ்சியில் வரும் "கீழ் செல வீழ்ந்த கிழங்கொடு" என்னும் தொடரையும் (*534*) ஒப்பிடுக. கிழங்கென்னும் சொல்லே 'கீழ்' என்னும் இடப் பண்பைக் குறித்த பகுதியடி யிற் பிறந்திருக்க, கீழ்நோக்கிச் செல்லும் கிழங்கின் வளர்ச் சியை வீழ்த்தலென்று கூறுதல் மிகவும் பொருத்தமுடை யதே. கிழங்கு மண்ணின் கீழிருப்பதெனக் கொண்டு, அதன் வளர்ச்சியின் இயற்கைப் போக்கைக் கவனியாது, அவ்விருப்பை வீழ்த்த லெனின் கருத்து முரண் ஏற்படு கின்றதேயெனப் பிழைபடவெண்ணி, அம் முரணை நிவர்த் திக்கப்போலும் இவ்வித மரபொன்றியற்றினர். மண்ணின் கீழ் வீழ்ந்து செல்வதை மண்ணின் கீழிருப்பதென மயங்கின மயக்கமே இம்மரபு உண்டுபண்ண ஓர் காரணமாயிற்று.

## 71. "சிறப்புடையாளன் மாண்பு"

" சிறப்புடை யாளன் மாண்புகண் டருளிய " (புறம். 295 : 6)

இதில் சிறப்புடைமை மறக்குடிக்கேயுரிய விசேட குண மென்றனர். இங்குச் சிறப்பின் தன்மை எதுவென்று வெளிப் படுத்தினரில்லை. மறக்குடி மாக்கள் பாலைநிலத்திற்றங்கி ஆறலைகள்வராகத் திரிந்து சூறையாடிப் பெற்றுக்கொண்ட சிறப்பா? அன்றிப் போர்க்களம் புகுந்து 'புறக்கொடாப் பூட்கை' காட்டிப் பொருது வீழ்ந்து நடுகல்லாயின சிறப்பா? போக்களத்தில் மடிந்தமையே சிறப்பாய் வருமெனின் அக்காலத்தில் பரதவர், கோசர், வடுகர் முதலிய எத்தனையோ இனத்தார் மடிந்திருக்கின்றனரே; அவருக்கும் அச்சிறப்புப் பெற உரிமையில்லையோ? "கொல் லேற்றுக் கோடஞ்சுவானை எழுமையும் புல்லாளே ஆயர் மகள்" என்னும் அடிகள் இடைக்குல விடலைகளிற் சிலரின் சிறப்பைத் தெளியக் காட்டாதோ? ஏனாதி முதலிய பட்டங் களைப் பெற்றிலங்கிய வேளாண்மாக்கள் இச் சிறப்பிழத் திற்குக் காரணமென்னையோ? இவற்றில் ஒன்றினையும் மனத்திடை கொள்ளாது "கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தில் முற்றோன்றி மூத்த குடி" என்ற ஒரு புலவர் கூற்றை அதிசயோக்தி கலவாமெய்யெனக்கொண்டு மறக் குடி சிறக்குமாறும் ஏனைக்குடிகள் பெருமை துறக்குமாறும் உரை வகுக்கவந்த காரணம் என்னையோ, அறிகிலேம்.

## 72. "தும்பி"

"நடுநாள் வந்து தும்பியும் துவைக்கும் (புறம். 280 : 2)

'தும்பி' என்பதற்கு ஒருவகை வண்டென்றுரை யெழுதினர். இது தற்காலத்தில் வண்டிற்குப் பொதுப் பெயராய்த் திரிந்ததேனும், முதலில் அது ஆண் வண்டினைச் சுட்டிற்று. அது ஒருவகை வண்டைச் சுட்டவில்லை. "சுரும்பு மதுகரந் தும்பியாண் வண்டே" என்னும் பிங்க

லந்தை அடியே இதனைச் சுட்டும். இதிலுள்ள எல்லாப் பெயருமே வண்டின் பெயராய்ப் பிற்காலத்திலாயின. பண்டைநூற் சிலவடிகளில் தும்பியும் வண்டும்' என வந்திருக்குமிடங்களில் வண்டைப் பெண்வண்டெனக் கருதாது; 'தும்பி'யை வண்டில் நின்று சிறிது வேறுய ஓர் இனத்தைக் குறிப்பதாகக் கொண்டனர். அடியார்க்கு நல்லாரும் "ஒரு சாதிவண்டெ"னச் சிலப்பதிகாரவுரையிற் றந்திருக்கின்றனர்.

## 73. "நாஞ்சிற் பொருநன்"

"தீஞ்சுளைப் பலவி னஞ்சிற் பொருநன்" (புறம்.380 : 9)

இதற்கு "நாஞ்சில் வள்ளுவன் மறச்சாதியினனென்றும் பாண்டியர்களுக்குரிய படைவீரனென்றும் தெரிகிறது" என ஓர் அடிக்குறிப்பு வரையப்பட்டிருக்கின்றது. எவ்வாதாரம் பற்றிப் பதிப்பாசியர் இம் முடிபுகளுக்கு வந்தனரோ அறியோம். "நாஞ்சில்" வள்ளுவன் எச்சாதியினனென்று இலக்கிய வழக்கால் நிர்ணயிக்க இடமில்லை. கர்ணபரம்பரைக் கதைகளில் நின்றும் அவன் "குறவர்" இனத்தைச் சேர்ந்துள்ளானெனத் தெரிகிறது. இதனைப் பற்றிய கதைகளைக் காலஞ்சென்ற N. நாகமய்யர் அவர்கள் தாமெழுதிய Travancore State Manual என்ற நூலிற் றிரட்டித் தந்திருக்கின்றனர். அவன் மறச்சாதியானென்று காட்டப் பரம்பரைக்கதைபோலும் இல்லாதிருக்க இக் குறிப்பிற் கேற்படும் விலையாது?

## 74. "பார்வல்"

"ஊரில்ல உயவரிய
நீரில்ல நீளிடைய
பார்வ லிருக்கைக் கவிக ணோக்கி" (புறம். 3 : 17-19)

பார்வல் என்ருல் 'பார்த்தல்' என்று குறிப்பெழுதி யமைந்தனர். இதனுல் வாசிப்போர் பெறலாய பொருள் விளக்கமென்னே? போர் நடக்கும் பூமியில் படைவீரர் தங்கு வதற்குப் 'பாசறை' அல்லது 'பாடி வீடு' அமைக்கப்படுமென் பதனேயும், அப்பாடி வீடுகளே எதிரிப்படை அணுகாவண் ணம் காவல் புரிதற்கு அவற்றில் நின்றும் சிறிது தூரத்தில் பார்வற் பாசறைகள் இயற்றப்படும் என்பதனேயும் குறிக்க வேண்டியது மிகவும் அவசியம். இந்தப் பார்வற் பாசறை களேயே ஆங்கிலத்தில் (Out posts or Places of reconnaisance) என்று கூறுவர். சில வீரர்கள் இந்தப் பார்வற் பாசறைகளிற்றங்கி எதிரிப் படைகள் தாம் தங்குமிடத்தை அணுகுகின்றனராவென்று அஹோராத்திரம் விழித்திருந்து 'பார்த்துக்' காவல் புரிய வேண்டும். இங்ஙனம் 'பார்த்து'க் காவல் புரியும் வீரர்கள் தங்குமிடமாதலினுல் அப்பாச றைகள் 'பார்வற் பாசறைகள்' என்றழைக்கப்பட்டன.

## 75. " பெண்டு "

" பருத்திப் பெண்டின் பனுவ லன்ன " (புறம். 125 : 1)

இதற்குப் " பருத்தி நூற்கும் பெண்டாட்டியது சுகிர்ந்த பஞ்சுபோன்ற" என்றுரை யெழுதினர், பண்டையுரையா சிரியர். 'பெண்டாட்டி' என்பதற்கு 'பெண்மையுடையாள்' என்று குறிப்பெழுதி பகுதியடிப் பொருள் விரித்தனர் பதிப்பாசிரியர். இங்குப் 'பெண்மை' என்ருல் என்னெனை நோக்கத்தக்கது. பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் எழுவகைப் பருவம் வாய்ந்த பெண்களும் பெண்தன்மை வாய்ந்தாரல் லரோ? இதனுல் ஒரு 'பேதை'யைப் பெண்டாட்டியெனக் கூறவருமே! அங்ஙனம் கூறுவது சரியோ? " பெண்மை- அமைதித் தன்மை" என்றனர் 453-ம் பக்க அடிக் குறிப்பில். அங்ஙனமாயின் அமைதித்தன்மையுள்ளார் யாரையும்

'பெண்' என விளிக்கலாமா? 'ஆட்டி' யென்னும் பதம் ஆளன்', 'ஆன்' என்னும் ஆண்பாற் பதங்களின் பெண் பாலைச் சுட்டிற்று. மளவாளன்—மணவாட்டி, சீமான்—சீமாட்டி, பெருமான்—பெருமாட்டி—என்பவற்றை நோக்குக. 'பெண்டாட்டி' யெனும் பதத்தை பெண்டு+ஆட்டி யெனப் பிரிக்க வேண்டுமேயன்றி, பெண்+ஆட்டியெனப் பிரிக்கவியலாது. இச் சொல்லில் நின்றே 'பெண்டு' என்னும் பதம் 'பெண்' என்னும் பதத்தில் நின்றும் வேற்றுமைப்பட்டதென அறியலாம். 'பெண்' பொதுப்பெயர்; 'பெண்டு' பெண்களில் மணநிலையுற்றாரைக் குறிக்குஞ் சிறப்புப் பெயரெனக் கொள்ள இடமுண்டு.* இவற்றின் பன்மைப் பெயர்கள் பெண்கள், பெண்டிர் என்பன. இவை பிற்காலப் பிரயோகத்தில் வேற்றுமை யிழந்தன. எனினும், பருவம் வாய்ந்த எல்லாப் பெண்களும் மணமுடித்துக் கொள்வதே சகஜமாதலால் 'பெண்டிர்' எல்லாப் பெண்களையும் சுட்டல் வழுவாகாது. 'பெண்டு' என்னும் பதத்திற்கு இங்கு குறித்த தன்மையுண்டெனத் தற்கால வழக்குக் கொண்டே நிச்சயிக்கலாம். 'நான் உனது பெண்டா?' எனப் பெண்கள் கூறுவதின் பொருளை நோக்குக.

மனைவியைப் பெற்றுக் கொள்ள இடையருள் ஒரு வகுப்பாரில் மணம் புகக் கருதிய இடைச் சிறுவன் மணமகள் வீட்டின் ஆடுகளை மேய்த்து, அங்குச் சில காலம் தங்க வேண்டும். அதன்பின்றான் மணமுடிப்பது வழக்கம். இக் கூட்டத்தாரை "பெண்டுக்கு மேய்க்குமிடைய" ரென்றும், "பெண்டுக்கு மேய்க்கி" என்றும் இன்றும் கூறிவருகின்றனர். இவ்வழக்கிலும் 'பெண்டு' என்னும் மொழி மனைவி, கிழத்தி, இல்லாள் என்னு மொழிகளைப்போல் மணநிலையடைந்த பெண்ணைக் குறிப்பதெனக் கொள்ளத்தகும். இதனல், பெண்டு, பெண்டிர், பெண்டாட்டி முதலிய சொற்கள் எல்லாப் பெண்களையும் குறிப்பனவல்லவென்றும், அப்

---

* 'மகடூஉ' எனு மொழியும் மனைவிப் பொருளைத் தந்ததென அறியவும். "இற்பொலி மகடூஉ" (புறம். 331 : 9)

பெண்களுள் மணநிலையிற் புகுந்தாரைமட்டிலும் சுட்டுவன வென்றும் வெளியாகின்றது. மணநிலையுற்றுக் கணவரோடு வதிவாரையும் கணவரையிழந்து கைம்மையுற்றாரையும் பெண்டென்னும் பதம் குறிக்கும் என்று கொள்ளவேண்டும்.* "செம்முது பெண்டு" (புறம். 276 : 3; 280 : 7). எடுத்துக் கொண்ட அடியில் வரும் 'பெண்டு' என்னும் பதத்திற்குப் பெண்களெனக் கூறாது பெண்டாட்டியெனப் பண்டையுரையாசிரியர் கூறினது நாம் காட்டியுள்ள வேற்றுமையினை அன்னாரும் கருதி வரைந்த உரையென்றே ஊகிக்கலாம். இம்மொழிக்குப் 'பெண்மையுடையாள்' என்று பொதுப் பொருளைத் தரும் குறிப்பெழுதுவதினால் யாது பயன் ?

## 76. " மழலை "

> "பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
> கருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை." (புறம். 92 : 2-3)

இங்கே " மழலை " என்பதற்கு "எழுத்து வடிவு பெறாது தோற்றும் இளஞ்சொல்" என்று குறிப்பெழுதி, சீவக சிந்தாமணி, "மெய்பெறா வெழுத்துயிர்க்கு மழலை" என்ற அடியையும் மேற்கோள் காட்டியிருக்கின்றனர். ஒரு புலவர் ஒரு பொருளைப் பலவித மனநிலைகளில் நின்றும் வர்ணிப்பது இயற்கை. ஆயின், அவ்வர்ணனைகளெல்லாம் பொருளினுட் போந்த பண்பைச் சுட்டுவவென மருளலாமா? ஒரே பொருள் பலர்க்கும் பலவித உணர்ச்சிகளை உண்டு பண்ணலாம். அங்ஙனம் உண்டு பண்ணுவதால் அவ்வுணர்ச்சிகளை எல்லாம் அப்பொருளினுட் புகுத்திப் பண்பென மயங்கல் கவிகளின் பாவிக சக்தியின் இயல்பறியாமையன்றோ காட்டும். நூல் உரை வகுப்பார் அவ்விதமாய பாவிக சக்தியை அறவே

---

* மணமான பெண்ணைப் 'பெண்டாட்டி' என மனைவி என்னும் பொருளில் வழங்குதல் இன்றும் உள்ளதே. 'புருஷன் பெண்டாட்டி' என்பது உலக வழக்கு. "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" என வரும் திரிகடுகம் (96) நூலின் கருத்தும் அறியற்பாலது.

ஒழித்து 'புத்தி' (Reason) முறையொன்றையே கைக்கொண்டுரை வகுக்க வேண்டும். அம்முறையில் வரையப்பட்டதுதானே இவ்வுரையென யாம் பெரிதும் ஐயுறுகின்றேம். வடிவை வரிவடிவு அல்லது எழுத்து வடிவென்றும், ஒலிவடிவென்றும் இரண்டாகப் பகுத்துக் கூறினர் முற்காலத்துச் சில ஆசிரியர்கள். அவர்கள் மதத்தைத் தழுவி நோக்கினும் "எழுத்து வடிவு பெருத" என்ற அடைமொழிகள் இளஞ் சொல்லுக்குமட்டிலும் சூட்டப்பெற்ற காரணம் விளங்காது திகைக்கவேண்டியதாகின்றது. முதியார் சொற்களும் ஒலியளவே நிற்பின் எழுத்து வடிவு பெருத சொற்களேயாம். அதனுல் இவ்வடை மொழிகள் அர்த்தம் பயவா அடைமொழிகளென்றே கூறியொழியவேண்டும். மழலை மொழிகளை எழுத முடியாதென்றெண்ணி இவ்வரியவுரையை எழுதினரோவென்று சங்கையும் நிகழாதிருக்கவில்லை. எனினும் 'மழலை'யென்று யாரும் அறியக்கிடக்கும் குழந்தைகளின் வாக்கை இங்ஙனம் எளிதில் அறியக்கூடாத உரைதந்து பிரமாதம் விளைத்ததேனே? மழலை 'மழ' என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்து சிறு குழந்தைகளின் பொருள் பயவாக் குழறுமொழிகளைக் குறித்ததென்று பொருள்தந்து நிறுத்தினல் போதும்.

## 77. " மா "

> " காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
> மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
> நூறு செறு வாயினும் தமித்துப்புக் குணினே
> வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்."
>
> (புறம். 184 : 1-4)

'மா : ஒருவகை யளவை' யென்றனர். இவ்வுரையாற் பயன்யாது? குரலி – ஒருவகைக் கொடி, உன்னம் – ஒருவகை மரம், நெய்தல் – ஒருவகைப்பூ, ஆமான் – ஒருவகை விலங்கு, கோசர் – ஒருவகை வீரர், தடாரி – ஒருவகைப் பறை – யெனப் பதிப்பாசிரியர் எழுதிச் செல்வதைப் பல விடத்தும் காணலாம். கூறிய மொழிகள் கொடி, மரம், பூ

முதலியவற்றைக் குறித்தனவென்று பதிப்பாசிரியர் உரையில்லாதுதானே வாசிப்போர் எளிதிலறியக் கூடியவையே. பொருள்களின் தன்மையைக் குறித்துக் கொஞ்சமும் விசாரணை நிகழ்த்தாது சொல்லையும் நூலையும் கருவியாகக் கொண்டு இயற்கைப் பொருள்களின் குணங்களைத் தெரிவாராயினர் சொற்புலமை வாய்ந்த பிற்காலப் பண்டிதர்கள். நூலைக் கண்ணுடியாகக்கொண்டு பொருளை நோக்காது, பொருளையும் பொருட் பண்பையும் சென்றடைந்து அறியா வண்ணம் அதனை ஒரு பெரு மரணுகவே இவர் கட்டிச் சமைத்துக்கொண்ட விசேஷமே விசேஷம்.

இங்கு, 'மா' ஒரு நெல்லளவைக் குறித்துப் பின் அந் நெல் வித்துதற்குத் தக்க நில அளவையும் சுட்டிற்று. தமிழரின் பண்டைக் கணக்கு அவர் தொழிலான கிருஷியை ஒட்டியெழுந்ததென்பதற்கு ஒரு ஐயமுமின்று. இதனை விரிக்கில் பெருகுமெனக் கருதி நிறுத்துகின்ருேம்.

## 78. " மை விடை "

" மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்தி "

(புறம். 364 : 4)

இதில் மை விடை யிரும்போத்து 'ஆட்டுக் கிடாய்' என்ருர் பதிப்பாசிரியர். இது பொதுமைபற்றி மெய்யுரையாகாது போயிற்று. வெள்ளாட்டுக் கிடாய்" என்று கூற வேண்டும். புறம். 113-ல் வரும் "மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்" என்ற தொடருக்கு "வெள்ளிய ஆட்டுக்கிடாயை வீழ்ப்பவும்" என்று பொருளுரைத்தனர் (Vide Copy of the Oriental manuscript Library). பதிப்பாசிரியர் பதிப்பில் " வெள்ளிய " என்னும் அடைமொழி யாதுபற்றியோ விடுபட்டுப் போனதாகத் தெரிகின்றது. " மைவிடையில்" நிற்கும் 'மை' கருநிறத்தைச் சுட்டியதென அறியவேண்டும். அது காராட்டையே ஆதியில் குறித்தது.

காராட்டை வெள்ளாடென வழங்குவது மங்கலமென்று இங்குக் கூறவேண்டாமே. பதிப்பாசிரியர் கூற்றில் வரும் ஆட்டுக்கிடாய் செம்மறியாட்டுக் கிடாயையும் குறிக்கும்; ஆயின் 'மை விடை' அதனைக் குறியாது. வெள்ளாட்டினத் தின் கிடாயை மட்டிலும் சுட்டிய பெயரெனக் கொள்ளவும். பிற்காலத்தில் 'மை' ஆட்டின் பொதுப் பெயராய் விரி வுற்றது மெய்யே. ஆயின், அது பண்டை இலக்கியப் பொருள்கோளுக் கிசையாது.

## 79. " வல்வில் "

" செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன் "
(புறம். 150 : 7)

இதில் 'வல்வில் வேட்டுவன்' என்ற தொடருக்கு "வலிய வில்லினையுடைய வேட்டுவன்" என்று பண்டையுரை யாசிரியர் தெள்ளிய பொருள் கூறியிருக்க, அதனைக் குன்றக் கூறியவுரையென மதித்துப் பதிப்பாசிரியர் ஒரு விசேடக் குறிப்பு வரையலாயினர். அது வருமாறு : "ஒரே காலத்தில் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி அம்பையெய்யும் விற்றொழிலையுடைய வீரனை 'வல் வில்லி' என்றல் மரபு." இவ்வுரை விசேடம் தர 'வல் வில்லி' என்ற தொடர் செய்யுளிலில்லை. 'வல்வில்' என்னும் சிறிய தொடருள் கடல் புகட்டியதனைய இத்தனை பொருளும் செறிந்து கிடந்த தனையும் அதனுள்ளமைந்த மரபினையும் பண்டையுரையாசி ரியர் ஏன் அறியாது போயினர்? இத்தகைய வுரையெல் லாம் உண்மை இலக்கியப் பொருள்கோள் வேண்டினருக்கு 'மிகைபடக் கூற'லோ, 'மற்றொன்று விரித்தலோ' வாகுமே. அன்றியும் பதிப்பாசிரியர் 'மரபு' சிருட்டிக்கும் முறைமை யினையும் ஊன்றியாலோசித்துக் கொள்ளுக. புறம். 9-ம் செய்யுட் குறிப்பில், "ஓரரசரை வாழ்த்துகையில் அவரை அவர்க்குரிய ஆற்றுமணலினும் வாழ்கவென்றல் மரபு" என்றும் கூறியுள்ளார். பிற்கூறிய மரபைச் சிறிது

ஆராயின் புலவர்கள் தம் வாழ்த்துக் கவியுள் எடுத்துக்கூற வேண்டிய மணல் ஆற்றுமணலா யிருக்கவேண்டும் என்றும் அந்த ஆறு வாழ்த்தப்படும் அரசனுக்கே உரித்தாயிருக்க வேண்டும் என்றும் கவனித்துப் பாடக் கடமைப்பட்டுள்ளார் என்று பெறுவோம். ஏனெனில் இவை மரபாய்ப் போயினமை பற்றி வேற்றுமை புகுத்தற் கிடந்தரா. கடற்கரை மணலையும் கூறவியலாது; பிற அரசர்களுக்குரித்தான ஆற்றுமணலும் தள்ளத்தக்கதே. பதிப்பாசிரியர் கூறிய மரபு விதிக்கு மாறாய்ச் சில புலவர் இவற்றை அறியாது கைக்கொண்டு கவி புனையின் அவர் இழுக்கினுள் வீழ்வாரேயாவர் !

# பிற்சேர்க்கை—II

## புறநானூற்றுப் பதிப்பில் மூலபாடத்திலும் உரையிலும் காணப்படும் பிழைகள்

(Textual Errors in the work and Commentary)

1. புறம். 119-ன் உரையில்: 'இது அது கெடுங்கொல்லோ' என்றிருக்கிறது.
   'இனி அது கெடுங்கொல்லோ' என்றிருக்க வேண்டும்.
2. புறம். 103 : 11 — 'வலத்தற்' 'வறத்தற்' என்றிருக்க வேண்டும்.
3. புறம். 104 : 4 — 'ஈர்ப்புடை' 'ஈழ்ப்புடை' என்றிருக்க வேண்டும். (Vide Oriental manuscript Library Copy)
4. புறம். 109 உரை : — 'தாழ விருக்கும்' 'தாழ வீழ்க்கும்' என்றிருக்க வேண்டும் (Orintal manuscript Library Copy)
5. புறம். 113 உரை : — 'ஆட்டுக் கிடாயை' வெள்ளிய ஆட்டுக் கிடாயை' என்றிருக்க வேண்டும் (Oriental manuscript Library Copy)
6. புறம். 293 — 'நிறைப்படைக் கோல்கா' 'நிறைப்படைக் கொல்கா' என்றிருக்க வேண்டும்.
7. புறம். 319 : 4 — 'மாசினறு' 'மாசின்று' என்றிருக்க வேண்டும்.
8. புறம். 332 : 3 — 'இரும்புற நீறும்' 'இரும்புறு நீறும்' என்றிருக்க வேண்டும்.
9. புறம். 342 — 'கானக் காக்கை' 'கானற் காக்கை' என்றிருக்க வேண்டும்.
10. புறம். 382 : 2 — 'மலிர் நோன்ருட்' 'மற நோன்ருட்' என்றிருக்க வேண்டும்.

# பிற்சேர்க்கை-III

## பண்டை நூல்களுக்கு மேற்கோள் காட்டுதலும் பொருள் விளக்கஞ் செய்தலும்*

### 1. மேற்கோள் விளக்க முறை

பதிப்பாசிரியர் "புறநானூறு" என்னும் அரிய பண்டை நூற் பதிப்பிற் கைக்கொண்டொழுகும் மேற்கோள் விளக்க முறை யாருக்குத்தான் வியப்பைத் தராது? சிற்சில விடங்களில் நகைப்பையும் ஊட்டத்தக்க சுவை வாய்ந்திலகுகின்றது. சொல்லையும் பொருளையும் ஒட்டிக் கூறவேண்டா மேற்கொள் செறித்தது ஒருபுறம் கிடக்க, இயற்கைப் பொருள்களின் சாதாரணத் தன்மையினையும் அவ்வியற்கைப் பொருள்களைச் சுட்டி நிறுவாது, சொல்லினு ளமைந்த மேற்கோள் கொண்டு நிறுவலாயினர்.

யானை மதம் மணமுடைய தென்பதையும் அதில் வண்டு மொய்க்குமென்பதையும் சில மேற்கோள்களால் 51-ம் பக்கத்தில் விளக்கி நாட்டினர். மணி இருளைப் போக்கு மென்பதைச் சீவக சிந்தாமணி மேற்கோளால் 275-ம் பக்கத்தில் நிலைநிறுத்தினர். இவ்வரிய மேற்கோள்களைப் பதிப்பாசிரியர் தந்திலரேல், யானை மதத்திற்கு மணமில்லை யென்றும், அதில் வண்டு மொய்க்காதென்றும் மணி ஒளி தராதென்றும் தமிழுலகம் எண்ணி மயக்குற்றுத் தத்தளிக்கு மென்பது திண்ணம்.

---

* இவை பற்றியதோர் கருத்துரையைப் புறநானூற்றின் இரண்டாம் பதிப்பைப் (டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பு) பார்வை யிட்டுப் பேராசிரியர் அவர்கள் வரைந்துள்ளார். இங்குக் கூறிய கருத்துக்கள் பதிப்பாசிரியர், உரையாசிரியர் முதலியோர் இன்றியமையாது உணர்ந்து சிந்திக்கத் தக்கனவாம்.

மாங்கனி புளிக்குமென் பதற்கு மேற்கோள் 535-ம் பக்கத்தில் தரப்பட்டிருக்கிறது. பலாப்பழத்திற்குத் தீஞ்சுளையுண்டென 505-ம் பக்க மேற்கோளால் நாட்டப்பட்டது; மேகத்திலுண்டாம் இடி ஓசை தருமென்பதை 492-ம் பக்க மேற்கோள் இடித்து வற்புறுத்தும்; யானை முகத்தில் புகர் அல்லது வெண்புள்ளிகள் உளவென்று 495-ம் பக்க மேற்கோள் நிலை நிறுத்தும்; ஆமை முட்டையிடாதென வெண்ணும் பேதையருக்கு 282-ம் பக்க மேற்கோளே ஒரு அறிவுசூடாய் அமையும்; பருத்திச் செடி வேலி ஆமோவென ஐயுற்ருருக்கு அவ்வையுறவகற்ற 417-ம் பக்கக் குறிப்பே போதிய போதனை புகட்டும்; முரசம் கண்கிழியாதென்ற வாதம் சிலர் நிகழ்த்தத் தொடங்கினுல் அவர் வாயடைக்கத்தக்க அரிய ஆப்பொன்றை 360-ம் பக்க மேற்கோளாகத் தந்திருக்கின்றனர்; கவைக்கதிர் வரகும் கருங்கால் வேங்கையும் மேற்கோள் விளக்கமில்லாத இருட்டில் கவையாக்கதிரும் வெள்ளியகாலும் பெற்று விளங்கிவிடுமே! அவ்வியற்கை விரோதங்கள் நிகழாவண்ணம் தக்க தக்க மேற்கோட் பாணங்களைப் பிரயோகம் செய்து தமிழுலகைக் காப்பாற்றினர். முற்காலத்தில் யானைகளுக்கு மணியணிந்தனரோவென் ருசங்கிப்பாருக்கு அவரது ஆசங்கை நீக்குமாறு "படுமணியானை" மேற்கோள் தந்தனர்! ஒரு வீரனுடைய மார்பில் வேல் தைப்பது சாதாரணமேயெனினும் வேல் தைத்து நின்ற நிலையின் சிறப்பை யாரே அறிந்துள்ளார்? அதனை விளக்கற்கே 416-ம் பக்க மேற்கோள் தரப்பட்டது போலும்! இவைமட்டுமோ? "தீவொன்றிற் பொன்னுண்டாகும்" என்பதற்கும் தக்க அத்தாக்ஷி காட்டப்பட்டுள்ளது. இந்த அத்தாக்ஷியைப் பின்பற்றிப் பொன்வேண்டுமென்ற ஆசையுடைய நண்பர்கள் "ஏதாவதொரு தீவிற் சென்ருற் போதுமே; அதனுல் சீமானய் விடலாம்" என்றெண்ணின் அது அவர்களுக்குப் பெருமாற்ருமையைப் பின் விளைக்காதிருக்குமோ?

"நீர்வழிப்பட்ட புணை" யாரும் காணுக்காட்சியன்ருே? ஆதலால் அதனை அறிவில்லா மாந்தர்க் கெடுத்தோதி

அறிவுறுத்துவான் நீதிநெறி விளக்கத்தில் நின்றும் அரிய பெரிய மேற்கோட் புதையலொன்று எடுத்துத் தந்தனர்! அறிவுடை ஒருவனை அரசனும் விரும்புமென்ற கண்டறியாப் பெருமுண்மையை இவ்வரச பக்தி குறைந்த காலத்தார் மனத்தில் அழுத்த வெற்றிவேற்கை மேற் கோளே ஒரு வேலெனக் கைக்கொள்ளப்பட்டது. ஐயோ! பாவம்! ஆத்திசூடியும் கொன்றைவேந்தனும் செய்த தவக் குறைதான் யாது? அவற்றில் நின்றும் மேற்கோள் பெருது போயினமைக்கு அவை பதிப்பாசிரியரொடு கலாம் விளைக்காவோ? என்னே! இம்மேற்கோள் விளக்கப்பித்து! இது தமிழ்ப் பண்டிதர்களைச் சுற்றிப் பிடித்திருப்பதை நோக்கின், அது தீரும் வியாதிதானேவென்று அழுங்க வேண்டியதாகவே முடிகின்றது. புறநானூற்றின் அடியை விளக்கவும் நிலை நிறுத்தவும் வெற்றிவேற்கை முதலிய நூற்களிற் புகுந்து மேற்கோள் பொறுக்கிச் சேர்க்க இன்னர் தொடங்குவரேல், இவர் எங்குரர்? யாது செய்யார்? அங்ஙனம் உற்றுச் செய்த செய்தியொன்று இதோ தருகின் ரோம். "பருந்துயிர்த் திடைமதிற் சேக்கும்" என்பதற்கு "பருந்து பறக்கொல்லாப் பார்வற் பாசறை" என்ற வொரு விசேட மேற்கோள் தரப்பட்டிருக்கிறது. பருந்து மதிலிற் றங்கி இளைப்பாறுமென்பது செய்யுளிற் கூறிய பொருள். பருந்து பறந்து செல்லக்கூடாத காப்பையுடைய பாடி வீடு அதை விளக்குதற் கெடுத்த மேற்கோள். எவ்விதப் பொருத்தம்! சிலவேளை, பருந்து தங்குமென்பதை பருந் தணுகாதென்பது விளக்காதோ? இரண்டிலும் 'பருந்து' என்ற மொழி வந்திருக்கின்றதன்றே; மேற்கோள் முட்டையவிழ்த்துப் பரத்துதற்கு இஃதொன்று போதுமே! செய்யுளடிக்கும் மேற்கோளடிக்கும் இருட்டிற்கும் வெளிச் சத்திற்குமுள்ள சம்பந்தம் நிகழினும் தற்காலச் சில பண்டித சிரோமணிகள் ஆங்கும் அவற்றை மேற்கோள் சங்கிலி கொண்டு பிணியாது விடாரென்னும் பரிதாபகரமானவுண் மையை மேற்காட்டிய "மேற்கோள்" ஒன்றுமே நன்கு நாட்டும்.

## 2. பொருள் விளக்க முறை

ஓர் உயர் தரக் காவிய விளக்கம் செய்ய வேண்டு முறை இன்னதென நமது பதிப்பாசிரியர் அறிந்தாரென்பது விளங்கவில்லை. உயரிய காவியங்களுக்கு உரை யெழுதியப் புகுவோர் கேவலம் சொற்பொருளைப் பெருக்கிச் செல்ல நோக்கார். சொற்பொருள் தர அகராதிகளும் நிகண்டு களும் தற்காலம் மலிந்து கிடக்கின்றமையால் அவற்றைப் பெரும்பாலும் ஒழித்து, அச்சொற்களலாக்கப்படடெழும் திரண்ட பொருள் வளத்தையும், வனப்பையுமே வாசிப் போர் கருத்திற்பதியுமாறு எடுத்துக் கூறுவர். செய்யுளி யற்றிய புலவரின் மனோவிலாசம் அச்செய்யுளில் எவ்வா றமைந்திலங்குகின்றதென்பதனையே அவர் முதன்முதல் விளக்கக் கடமைப்பட்டுள்ளார். ஒரு சித்திரத்தின் திரண்ட அழகினைக் கண்ணுற்று ஆனந்திக்க வெண்ணினர், அச் சித்திரத்து ளமையும் ஒவ்வொரு வரியினையும் வண்ணத் தினையும் பிரத்தியேகம் எடுத்தாராய்ச்சி புரியத் தொடங் கிச் சென்றால் எங்ஙனம் சித்திரத்தின் முழுவழகினால் வருமின்பத்தை இழந்தேமாறுவரோ—அங்ஙனமே சொல் லாராய்ச்சியுள் அமிழ்ந்தினர் காவியத்தின் திரண்ட பொருளெழிலைக் கைந்நெகிழவிட்டவராவர். "மரத்தில் மறைந்தது மாமதயானை" என்றபடி வேண்டப்பட்ட விழுப் பொருளாய மணிகளை விடுத்து, வேண்டாத சிப்பிகளாலும் சோவிகளாலும் பருக்கைக் கற்களினாலும் தம் பையை நிறைத்துக்கொள்ளுவர். இவ்வுண்மையைக் கண்கூடாகத் தெளிக்கப் புறநானூற்றின் புதிய பதிப்பொன்றே அமையும். பண்டையுரையாசிரியர் வரைந்துள்ள முற்பகுதியை நீக்கப் பிற்பகுதியில் நமது பதிப்பாசிரியர் குவித்த உரைத் துராலைச் சீக்க யாரே முன்வருவர்? பண்டையுரையாசி ரைப்போல் செய்யுட்களின் திரண்ட பொருளைத் தரக் கருதாது அங்குமிங்கும் சில சொற்களையும் சில சொற்றொடர் களையும் பொறுக்கியெடுத்து உரையெழுதி நிரப்பினர். பதிப் பாரிசியரின் இக்குறிப்புக்குப்பை திரண்டபின்றான் பண்டை

யுரையாசியரின் உரையினுள்ளமைந்த இரத்தினங்கள் சொலித்தொளிரத் தொடங்கின. பண்டையுரையாசிரியர் எல்லாவிடங்களிலும் கவியின் உட்கோளை நமக்கோர் ஆடியிற் காட்ட முயலுகின்றனர். இக்காலப் புலவரோ அக்கடமையினை அடியோடே மறந்து சொற்காட்டினுள்ளும் இலக்கணக் காட்டினுள்ளும் புகுந்து வழி தப்பலாயினர்! இதுவே அவர் கையாடிய பொருள்கோண் முறையில் முதல் வழு.

இரண்டாவதாக, சொற்பொருள்தான் தர நோக்கினும்—புறநானூறு பண்டை இலக்கிய மாதலினால், அவ்விதப் பொருளுரையும் சிலவிடங்களில் அவசியமானவையே. எவ்வச் சொற்களையெடுத்துப் பொருள் தரவேண்டுமென்று உரையாசிரியர் சீரிய கவனம் செலுத்தித் தீர்மானிக்க வேண்டும். பதிப்பாசிரியரின் ஒரு தீர்மானம் புறநானூற்றின் பதிப்பை வாசிக்கும் எல்லாரும் அறியுமாறு வெளிப்படையாய்த் தோன்றாதிருக்கவில்லை. அதாவது எங்கெல்லாம் பொருள் துலங்காதிருக்கின்றனவோ அவ்விடங்களையெல்லாம் அணுகாதுதானே ஏகிவிடல். பொருட்டிகைப்பு செய்யுளிடத்து எங்குதிக்குமோ அங்குப் பதிப்பாசிரியரின் உரையும் ஒளித்துக்கொள்ளும். இதனால் பதிப்பாசிரியர் கையாடிய பொருள்கோண்முறையில் உரை அவசியம் வேண்டிய இடமெதுவோ அதனை முற்றும் ஒழித்தேகுவதே இரண்டாவது நிகழ்ந்த வழுவெனக் காண்போம்.

மூன்றாவதாக, பொருள் யாருக்கும் தெளிவுற்று விளங்கத் தோன்றுமிடங்களில் உரைவிளக்கு ஒன்று பக்கத்தில் கொளுத்திவைப்பதே. இருட்டுப் பாதையில் வழிகாட்டப் பதிப்பாசிரியர் முன் வரார். பட்டப்பகற்போல் துலக்குற்றிருக்குமிடங்களிலெல்லாம் அவரது உரைப்பந்தங்களைப் பந்தி பந்தியாகப் பரப்பி நிரப்புவதைக் காணலாம். உதாரணமாக, கீழே தரப்படும் உரைகளை நோக்குமின்: வசை=பழி; இசை=புகழ் (ப. 531) இவண்=இவ்விடத்து (ப. 399) மடங்கி=மீண்டு (ப. 401); தூது=தூதர் (ப. 403);

குன்று = சிறுமலை. பீடு = பெருமை (ப. 406) ; அமர் = போர் (ப. 405); நுந்தை தந்தை = நின் பாட்டன் (ப. 409); சேவல் = ஆண் கோழி (ப. 443) ; நாண் = நாணம் (413); பிடி = பெண் யானை; எயில் = மதில்; நெடிது = நெடுநேரம் (ப. 415) ; வேனல் = வேனிற்காலம் (426). பதிப்பாசிரியரின் தெள்ளிய உரையில்லா விடத்து இவற்றின் பொருளை யாரே அறிவர்? அகராதிதான் தருமோ? இவ்விதப் பொருளெழுதுவது புறநானூற்றின் பெருமையைத் தூளனஞ் செய்து காற்றிற் பறக்கடிப்பதன்றோ? "ஊறுதல்" எப்பொருளின் தொழி லென்று திகைப்புறுவாருக்குப் பாலின் றொழிலெனக் கூறி மயக்கந்தீர்த்தனர் (ப. 414). நுழைமீனென்றால் நுழைந்து செல்லுகின்ற மீனுமாம் என்றனர்! (ப. 522). 'நெல்லினரிசி திகைப்பூட்டும் ஒரு தொடரன்றோ ? அதனைப் பரிகரிக்க நெல்லோடு கூடிய அரிசி யென்றெழுதினர் (ப. 435). ஆனால் இப்பொருளுரை வேறோர் திகைப்பூட்டாதிருக்க வில்லை. நெல்லொடு கூடிய அரிசியென்றால் நெல்லொடு விரவின அரிசியைச் சுட்டுமேயல்லது உமியொடு கூடிய அரிசியைச் சுட்டாது. உமியும் அரிசியும் சேர்ந்தாக்கப் படும் நெல்லொடு அரிசி கூடிற்றென்றால், அவ்வரிசி நெல்லி னுள்ளிருக்கும் அரிசியன்று, வெளி நின்றும் வந்த அரிசியே யெனத் துணிந்தால் இழுக்காதே. இச்சிறு விஷயத்திலேயே இங்ஙனம் வழுவி உரை வரைவரேல் சீரிய விஷயங்களின் கதி யாதாமோ ?

நான்காவதாக, கூறிய உரையையே திரித்தும் பிறிதோ ரிடத்திற் கூறிச் செல்லும் முறை ஒரு உரை விசேடமே! பள்ளிச் சிறுவருக்குப் போதனை செய்யும் கணக்காயர்கள் கூறியது கூறலைக் குற்றமாகக் கருதாது ஒன்றையே பல முறை வற்புறுத்திக் கூறும் சம்பிரதாயத்தை மாணவர்களின் குணத்திற்காகக் கையாடுவார்கள். அது போற்றானே, என்னே, ஒரே உரையை இரண்டிடத்திற் றந்திருக்கின் றனர். சற்றுக் கூர்ந்து நோக்கின் மூன்று நாலு இடங் களிலும் வந்திலகலாம். நாம் சிறிது பக்கங்களைத் திருப்பின அளவில் கீழ்வரும் இரட்டித்த உரைகள் தென்பட்டன.

| | | |
|---|---|---|
| கயத்தினுரை | 513, 518-ம் பக்கங்களில் வந்திருக்கக் காணலாம் | |
| கொண்டி | 508, 521 | ,, |
| பறைந்த | 471, 498 | ,, |
| படப்பை | 496, 513 | ,, |
| எஃகம் | 422, 427 | ,, |
| தூவெள்ளறுவை | 403, 410 | ,, |
| கூவல் | 425, 430 | ,, |

இம்மாதிரிப் பலவிடங்களிலும் திரும்பத்திரும்ப வரும் உரைகளின் பட்டிகையைப் பெருக்கிச் செல்வது எளிதே. அது பயன் தரக்க முயற்சியன்றென் றொழித்தோம்.

ஐந்தாவதாக, பொதுமையா நிற்கும் மூலச் சொற்கோ சொற்றொடருக்கோ பொருள் கூறுமிடத்து வேண்டா அடைகள் செறித்து, அவற்றைச் சிறப்பாக்கித் தீர்ப்பது; இதற்கு மாறாகச் சிறப்புப் பொருளில் வரும் சொற்களை அடைகளைக் களைந்து பொதுப் பொருள் புகட்டித் தீர்ப்பது. முன்னைய முறைக்கு 'கண்ணி', 'வல்வில்', 'மழலை', 'மன்றம்'—இரவலர் தங்குதற்குரியது (ப. 449) என்ற சொற்களின் உரையும், பின்னைய முறைக்கு மொக்குள்—சேற்றிலெழுந்த கொப்புளம் (ப. 448) இயற்றிய வல்லுவர்க்கூவல்: கிணறு (ப. 447) உரையும் போதிய சான்று.

ஆறாவதாக, பதிப்பாசிரியர் அறியாச் செடி, கொடி, மரங்கள், புல், விலங்கு முதலியன செய்யுளில் வருமேல், ஒரு வகைச் செடி, ஒரு வகைக் கொடியென்று எழுதிச் செல்லுமுறை. இவருக்கு அவ் "ஒரு வகை" என்னும் தொடர் தம்மறியாமையைப் போர்க்கத்தக்க ஒரு அழகிய படாமாய் அமைந்தது ஒரு ஆறுதலைக் கொடுக்கும். எப்பொருளெனத் திகைப்பு வருமிடங்களிலெல்லாம் "ஒரு வகை"ப் படாம் விரித்துத் தம்மறியாமையை மறைத்துவிடலாமே! இம்மாதிரித் தந்த போலியுரை எங்கும் மலிந்து

கிடப்பதை மேலோட்டாக நூலை வாசிப்போரும் எளிதில் கண்ணுறலாம்.

ஏழாவதாக, இலக்கியப் பொருள் கோளுக்குப் பகுதிப் பொருளை மட்டிலும் தருவது மயக்கம் ஊட்டுவதேயாகும். மொழிவளர்ச்சிப் போக்கில் ஒரு சொல் ஓர் அடியில் நின்றுதித்ததே யாயினும் பல்வேறுபட்ட காரணச் செறிவால் பொருள் மாற்றமடைந்து சில சமயம் பகுதிப் பொருளுக்கு நேர் எதிரிடையாய பொருளையும் பயவா நிற்கும். இவ்விடங்களில் பகுதிப் பொருளை அச் சொல்லுக்குக் கொடுப்பது மெய்ப்பொருள் தராமையோடு பொய்ப்பொருள் புகட்டுவதே யாகும். இதனை நாம் இக்குறிப்பில் பற்பல இடங்களிற் கூறிப் போந்துள்ளோம். பகுதியடிப் பொருள்கோளை விளக்கின் ஒளி திருத்தும் தூண்டு கோலாய் வைத்துக்கொள்ளலாமேயன்றி, விளக்கி னொளிதான் அதுவென மருளலாகாது. பதிப்பாசிரியர் பலவிடங்களிலும் பகுதியடிப் பொருள் தந்து வழுவினர் என்பது வெளிப்படை. உதாரணமாக பெண்டாட்டி-பெண் தண்மையுடையாள்; இறைநல்கும்–இறுக்கும்; பார்வல்–பார்த்தல்: பொருநன்–உவமிக்கப்படுபவன் முதலியவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்.

எட்டாவதாக, முதற் பெயராய் வருவதனைச் சினைப் பெயராக்கலும் சினைப் பெயராய் வருவதனை முதற்பெயராக்கலும், பலவினஞ்சுட்டும் பெயரை ஓரினச் சுட்டாக்கலும் ஓரினம் சுட்டும் பெயரை பலவினச் சுட்டாக்கலும் இவரது பொருளுரையில் சிலவிடங்களில் கையாடுமுறையாய் அமைந்திருக்கின்றன. சூடு = நெல்லரி, களரி = காடு, பறவை = வௌவால், பைஞ்ஞிலம் = தொகுதி முதலிய உதாரணங்களே இம்முறைகளை நிலைநிறுத்தப் போதுமானவை.

இவ்வெட்டின்மேலும் பதிப்பாசிரியரின் பொருள் விளக்கமுறை வழுவைப் பெருக்கலாவசியமின்று. இறைவ

னுக்கும் எட்டுக் குற்றம், உடலுக்கும் எட்டுக் குற்றம், நாட் டுக்கும் எட்டுக் குற்றம், வந்தமையுமெனின், இன்னூர் உரைக்கும் எட்டுக் குற்றம் பொருந்துவதோர் வியப்போ வென்று சிலர் கருதக்கூடும். ஆனல், இறைவனிடத்தோ, உடலிடத்தோ, நாட்டிடத்தோ, எண்வகைக் குற்றங்களை உலகம் கற்பிக்கினும் அக்குற்றங்களெல்லாம் ஒருங்கே பொருந்திய இறைவனே, உடலோ, நாடோ இல்லையென்றே கூறலாம். இவ்வுரைக்கண்ணே அஃதன்று. எல்லாக் குறையும் நிரம்பித் ததும்புகின்றன. தமிழ் மொழி அணங் கின் மேனியில் பண்டை இலக்கியங்களினும் பண்டையுரை யாசிரியர்கள் வகுத்த உரைகளே பெரு மணிக் கலங்களாய் மிளிர்கின்றன. அப்புகழினைச் சிதைக்குவான் எழுந்த உரை விசேடமன்றோ இப்புத்துரையென்ற எண்ணம் ஒன்றே எம் மனத்தைத் துன்புறுத்தி அவலங்கொள்ளச் செய்கின்றது.

---

# பொருட் குறிப்பு அகராதி

குறிப்பு :—இந்த அகராதியில் தரப்பட்டுள்ள எண்கள் நூலுள் பக்க எண்களைச் சுட்டும். (ஆ. பொ.) என்பது நூலாசிரியர் ஆராய்ந்து கொண்ட பொருள் என்பதைக் குறிப்பதாகும்.

# மேற்கோள் நூல்கள்

அகநானூறு
ஐங்குறு நூறு
கம்பராமாயணம்
கலித்தொகை
குறிஞ்சிப்பாட்டு
குறுந்தொகை
சிலப்பதிகாரம்
சீவகசிந்தாமணி
சூடாமணி
திணைமொழி ஐம்பது
திரிகடுகம்
திருக்குறள்
திருக்கோவையார்
திருமுருகாற்றுப்படை
திருவிருத்தம்
திருவிளையாடற்புராணம்
திவாகரம்
தேவாரம்
தொல்காப்பியம்
நற்றிணை
நாலடியார்
நெடுநல்வாடை
பட்டினப்பாலை
பதிற்றுப்பத்து

பரிபாடல்
பிங்கலந்தை
புறநானூறு
புறப்பொருள் வெண்பாமாலை
பொருநராற்றுப்படை
மதுரைக்காஞ்சி
மலைபடுகடாம்
Caldwell Comparative Grammar
Tamil Lexicon
Travancore State Manual





# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 21 | தரபடும் | தரப்படும் |
| 7 | 16 | மழுங்கப் பெற்றது. | மழுங்கப்பெற்றது |
| 7 | 24 | ‘ உராஅ ’ | ‘ உராஅய் ’ |
| 9 | 16 | கோடு போற்றெகுத் தலைச் | கோடு போற்றெருகுத் தலைச் |
| 10 | 8 | பெற்றளதேயாயினும் | பெற்றுளதேயாயினும் |
| 12 | 21 | நிகழலென | நிழலென |
| 17 | 10 | வெனப், | வெனப் |
| 17 | 23 | கதுவாய் மூதூர் ” | கதுவாய் மூதூர்.” |
| 21 | 2 | பண்டையுரை யாசிரியது | பண்டையுரை யாசிரியரது |
| 23 | 21 | நளிர்முகைச் சிலம்பில். | நளிர்முகைச் சிலம் பில்.” |
| 27 | 23 | பொருளில். | பொருளில் |
| 28 | 26 | நேர்மை | நேர்மை. |
| 28 | 32 | நாருசில் | நாஞ்சில் |
| 31 | 28 | வந்துவஞ் சாத்தனு | லந்துவஞ்சாத்தனு |
| 36 | 28 | புரவுசேரி ’ | ‘ புரவுசேரி ’ |
| 44 | 12 | விரிவைவும் | விரிவையும் |
| 50 | 16 | மிகைபட | மிகைபடத் |
| 54 | 2 | வருகின்றனா. | வருகின்றனர் |
| 58 | 3 | வைகல், | (நீக்குக) |
| 65 | 6 | காவிரி புதுநீர்க் | காவிரிப் புதுநீர்க் |
| 83 | 5 | இருட்டொன்றும் | இருட்டென்றும் |
| 109 | 15 | நெல்லோடு | நெல்லொடு |

# சேர்க்கை

63 12—13 "மரம் பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
யிரந்தழைப்பார் யாருமிங் கில்லை" (நல்வழி, 29)

73 17—18 "பொராஅப் பொருநர்" (புறம். 386 : 19)
18 அடிக்குறிப்பு : ஒரு புலவர்* — கோவூர்கிழார்.

90 24—25 பொருளையு மளிக்குமெனக் கூறினோம்
(பக். 39).

97 அடிக்குறிப்பு : (தொடக்கமாகப் பின்வரு
வதனைச் சேர்க்கவும்.)

"கண்டல் வேலிய வூர், 'அவன்
பெண்டு' என அறிந்தன்று ; பெயர்த்தலோ அரிதே."

எனவரும் நற்றிணையடிகளின் (74 : 10—11)
கருத்து ஈண்டுக் கவனிக்கத் தக்கது.

## கம்பராமாயண
## கௌஸ்துபம்



கம்பனது பெருங்காவியத்திற்குக் கவிதையில் அமைந்த ஒரு விமர்சன நூல். முன்னுரைப் படலம், ஆக்கியோன் படலம், உவமைப்படலம், இயற்கை வருணனைப் படலம், கதை மக்கட் படலம், மெய்ப்பாட்டு வருணனைப் படலம், சொல்-நடை வனப்புப் படலம், புலமைத்திறன் படலம், அறவுரைப் படலம், கவி இலக்கணப் படலம் எனப் பத்துப் படலங்கள் கொண்டது; 422 விருத்தப்பாக்களாலாகியது.



தமிழ்க் கவிதைபற்றி ஆசிரியர் உரைநடையில் எழுதிச் 'செந்தமிழில்' வெளியிட்ட ஆய்வுக் கட்டுரையுடன் கூடியது.



இந்நூலும் அடுத்தபடியாக அச்சிடப் பெறும்.



# வாழ்க்கை நூல்

*அல்லது*

# வாழ்க்கை வளாகம்



இஃது பொதுவியல், இல்லொழுக்கவியல், தன்னொழுக்கவியல், சமுதாய ஒழுக்கவியல், இயற்கையியல், ஒழிபியல் என ஆறு இயல்களையும், 160 அதிகாரங்களையும், 2118 குறட்பாக்களையும் கொண்டது. திருக்குறளிற்போல அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்கள் என்னும் வரையறையின்றிக் குறைந்தது ஐந்து முதல் கூடுதல் முப்பது வரையில், பல்வேறு எண் தொகைகளில், பாடல்களைப் பெற்றது.



திருவள்ளுவரின் 2000 ஆண்டு நினைவாக இந்த இருபதாம் நூற்றாண்டுக் குறள் நூல் அடுத்து அச்சிடப் பெறுகிறது.



# பேராசிரியர் சிவராஜபிள்ளையின் நூல்கள்

## ஆசிரியர் காலத்திலே அச்சில் வெளிவந்தவை

1. Agastiya in Tamil Land
2. The Chronology of the Early Tamils
3. புறநானூற்றின் பழமை
4. சிறுபாமாலை
5. மேகமாலை
6. நாஞ்சில் வெண்பா

## அச்சில் வாராதவை

7. Essays on Tamil Language and Literature
8. வாழ்க்கை நூல் (அச்சில்)
9. கம்பராமாயண கௌஸ்துடம்
10. இயற்கைப் பாவினம்
11. நாட்டுக் கண்ணிகள்
12. இசைப்பாட்டுகள்
13. அருளியன் காதை
14. அழகு முப்பது

குறிப்பு:—ஆசிரியர் காலத்தில் வெளிவந்த நூல்களும் இப்பொழுது கிடைத்தற்கரியவாம். ஆகவே, எல்லா நூல்களும் இப்பொழுது அச்சிடப்பெற வேண்டும் நிலையில் உள்ளன.